THE RIGHT STUDY DESK

# JFA Scholar

FOR A BRIGHT FUTURE





# S M F

## Space Making Furniture are space designed to solve your space problem

The SPACE MAKING FURNITURE range :

JFA Study Table
JFA Wall Unit
JFA Wonderbed
JFA Dinette
JFA Bunker
JFA Shoe Rack
JFA Wardrobe
JFA Ideal Kitchen

JFA IS OPP. PILOT THEATRE ONLY NOWHERE ELSE

- Modern and elegantly designed study table.
- Built-in shelves for neat and organised storage of books, instruments, etc.
- Maximum utilisation of vertical space and hence more moving space.
- Comfortable legroom.
- Lockable drawers.
- Easy maintenance.

**FREE** For "FREE COLOUR CATALOGUES" kindly send stamps worth Rs. 5/- to us and mention "OPP. PILOT THEATRE" in capitals, boldly on your envelope.




FOR ALL TYPES OF WOOD, CANE & STEEL FURNITURE CONTACT:

JFA™ **JAYABHARATHAM FURNITURE & APPLIANCES PVT. LTD.**
OPP. PILOT THEATRE, 18, ROYAPETTAH HIGH ROAD, MADRAS - 600 014.
PHONE : 8261384, 8260933. TLX: 041-6401 ESCM IN. FAX : 91-44-8261332.

# சில பிரச்னைகள், சில வார்த்தைகள்!

## நல்லதே நடக்கும் என நம்புவோம்!

சமீபத்தில் பிரபலமான ஒருவர் தான் சார்ந்த துறையில் பெண்கள் போடும் வேஷங்களைப் பற்றிக் காரசாரமாகப் பேசிக் கொண்டிருந்தார். ''நீங்களெல்லாம் பெண்களுக்கு எப்போதும் ஆதரவு கோஷம் எழுப்புபவர்கள். ராட்சஸிகளாகவும், சூர்ப்பணகைகளாகவும் இருக்கின்ற பெண்களை நாங்கள் பார்க்கிறோம்'' என்று நிறைய நிகழ்ச்சிகளைச் சொன்னார்.

வருத்தமாகத்தான் இருந்தது, அவர் சொன்னதற்காக இல்லை; அவர் சொன்ன பெண்களை நாம் எப்படியெல்லாம் போற்றிக் கொண்டாடுகிறோம் என நினைத்தபோது. இந்த இரட்டை வேஷம் என்பதைச் சந்திக்கும்போதெல்லாம் மனசு பொங்கித்தான் விடுகிறது.

மற்ற எதையும் பொறுத்துக் கொண்டுவிடலாம்.

இவன் நல்லவன்
இவன் கெட்டவன்
இவன் குடிகாரன்
இவன் குடிகேடி

- இவற்றையெல் லாம் நாம் ஓரிரு தடவை பழகும் போதே தெரிந்துவிடுகிறதே, நிஜமாக இவர்களெல்லாம் கெட்டவர்களே இல்லை என்றுதான் தோன்றிவிடுகிறது. அந்தக் காலச் சினிமா வில்லன்களைப் போல முகத்தில் பயங்கரமான மேக்-அப்பைப் போட்டுக் கொண்டு ஹஹஹா... எனச் சிரித்துக் கொண்டு ஆர்ப்பாட்டம் செய்பவர்கள். 'அடடா, இவன் கெட்டவன் எனத் தெரிந்து கொண்டு விடலாம். விலகி காத தூரம் ஓடி விடலாம். ஆனால் இப்போது சினிமாவில் மட்டுமில்லை, வாழ்க்கையிலும் கூட நிறைய இரட்டை வேஷம் போட்டுத் துரோகம் செய்பவர்கள்தான் அதிகமாக இருக்கிறார்கள். இவர்களைப் பற்றிப் புரிந்து கொள்ளும் போதுதான் மனம் கொதித்துப் போகிறது.

எதிரே பார்க்கும்போது வெண்ணெயாக உருகிப் போவார்கள். ''அடேடே, உனக்குத்தான் எவ்வளவு சிரமம். உன் பெருந்தன்மைக்கு முன்னாடி நானெல்லாம் தூசு மாதிரி. ஏதோ பூர்வ ஜென்ம புண்ணியம் உன்னோட நட்பு...'' இப்படி இருக்கும் பேச்சு. என்னதான் புகழுரைகளை ஏற்றுப் புளகாங்கிதம் அடையும் குணம் இல்லாவிட்டாலும், நல்லதாக நாலு வார்த்தை சொல்லும்போது மனம் நிறையத்தான் செய்கிறது. ஆனால் இதே ஆள் மறைவில் போய்,

''அவனா? அவன் மகா கஞ்சன். இதுவரைக்கும் எனக்கு என்ன செய்



மஞ்சுளா ரமேஷ்

திருக்கான்? கிள்ளிக் கொடுக்கக் கூட மனசே வராதே... ஏதோ நானாகவுட்டு அவனோட இத்தனை நாள் பழகிக் கிட்டு வர்றேன்..." என்பார்கள்.

சில சமயம் இது நம்மிடம் வரும் போது எத்தனை வேதனையாக இருக்கும்? ஒருவேளை நவீன சினிமாவுலக வில்லன்களைப் பார்ப்பதால் இப்படி இருக்கிறார்களோ? அல்லது இந்த மாதிரி மனிதர்களைப் பார்த்து விட்டுத் தான் சினிமாவிலும் படைக்கிறார்களோ தெரியவில்லை.

எங்கே பார்த்தாலும் வேக உலகம் ஆகிவிட்டது. ஒரே அவசரம். என் குடும்பம், என் குழந்தை, நிறைய சம்பாத்தியம் (நூறு ஆயிரம் பற்றியே இல்லை. இப்போதெல்லாம் லட்சம் தான்), நிறைய வசதிகள் என ஏகப் பட்ட பேராசைகளை இன்று தனி மனிதர்கள் வளர்த்துக் கொண்டு விட்டார்கள்.

வாழ்க்கையின் அடிப்படை குணநலன்களான (குணநலன் என்ன அழகான அர்த்தம் பொருந்திய வார்த்தை! ஆனால் குணத்தையே காணோம்; அப்புறம் ஏது குண நலன்?) நேர்மை, ஒழுக்கம், அமைதி, நிம்மதி இதெல்லாம் யாருக்குத் தேவை; புடிடா ஓட்டம் கதையாக தலை பறப்பது கூடத் தெரியாமல் ஓடுகிறார்கள். அதனால்தான் இந்த வேஷங்கள். தன் தேவை, தன் ஆசை, தன் திட்டம் நிறைவேற யாரை வேண்டுமானாலும் பலி கொடுக்க, பகடைக்காயாகப் பயன்படுத்திக் கொள்ளத் தயார்! ஆனால் இப்போது படித்து, நாசூக் ஸ்டைல் வந்துவிட்ட தால் வெளிப்படையான வில்லன் குணம் தெரியாமல் நாசூக்காகக் கழுத்தை அறுக்கிறார்கள், அவ்வளவுதான்!

இந்தக் குணம் வரவர நிறைய பேரிடம் பரவி வருவதைப் பார்க்க முடிகிறது. அவர்கள் மனதில் என்ன நினைக்கிறார்கள் என்பதையே பேச்சில் புரிந்து கொள்ள முடிவதில்லை. 'நாளை கண்டிப்பாக வருகிறேன்' என்பவரின் சட்டைப்பையில் அதி காலை டிரெயினிற்கான டிக்கெட் இருக்கும். இப்படிப்பட்ட மனிதர் களுடன் பழகிப் பழகி இப்போது நாமும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டியதாக இருக்கிறது!

ஆனால் நமக்கு வேண்டடா மம்மா இந்த இரட்டை வேஷ வாழ்க்கை. நம் கையில் சிறிய அகல் விளக்கு இருக்கிறது. அதன் ஒளியில் தெய்வீகம் இருப்பதைக் காண முடிகிறது. அதைக் கொண்டே நெஞ்சில் எழும் கனலுடன் எத்தனையோ காலங்களை, அனுபவங்களைத் தாண்டி விட லாம்.

புத்தாண்டு பிறந்துவிட்டது. சேற்றில் நிலா தோன்றினாலும் சேற்றை மறந்து நிலா வீசும் ஒளியை ரசிக்கக் கற்போம். தீயவைகளை விலக்கி, நல்லவை களையே நாடுவோம். மனம், வாக்கு, மொழியால் நல்லதைப் பேசுவோம்; நல்லதே நடக்கும் என நம்புவோம்!

---

தண்ணீரைக் கொதிக்க வைத்து இறக்கி, அதில் முழு வாழைக் காயை ஐந்து நிமிடம் போட்டு எடுத்துப் பிறகு சிப்ஸுக்கு சீவினால், தூள் துப்பட்டை விழாது. சீக்கிரம் மொறுமொறுக்கும்.

- ஆர். பார்வதி





# ஒருவர் எழுந்தால் அத்தனை பேரும் எழுந்திருப்பார்கள்!

Body Language என்றுசொல்கிறார்களே அதைத்தான் அங்க பாஷை என்று சொல்லலாம். 'நீ பேசும் முன் உன் கண் பேசிற்று. கண் பேச வருவதைக் கைவளை பேசிற்று' என்றெல்லாம் கவிதைகள் பாடப்படுகின்றன. அவை வெறும் கவிதைகளில்லை. ஓரளவு அனுபவத்தில் நாம் யோசித்துப் பார்த்தால்: அவ்வப்போது கூர்ந்து கவனித்தால் பேசப்படும் மொழிகளை விடவும் இந்த அங்க பாஷைக்கு விசேஷ அர்த்தங்களிருப்பது புரியும். அதீத வெறுப்பு, எரிச்சல், காதல், கருணை போன்ற அழுத்தமான உணர்ச்சிகள், ஒருத்தர் வெளிப்படுத்தும் 'அங்கபாஷை' காரணமாகவே ஏற்படுகின்றன.

மகள் ஒரு பையனைக் காட்டுகிறாள், 'இவனைத்தான் எனக்குப் பிடித்திருக்கிறது' என்று. எல்லாம் சரியாகத்தான் இருக்கிறான். எதுவோ ஒன்று இனம் பிரித்துக் காட்டுகிறது. 'ம்ஹூம், பிரயோஜனமில்லை' என்று.

மருமகள் எப்போதும் பவ்யமாகத்தான் பேசுகிறாள். நடப்பது நிற்பது எல்லாமே நாகரிகமான அடக்கம்தான். ஆனால் அவளில் எதுவோ சொல்கிறது மாமியாரைப் பார்த்து, 'உங்கள் மீது துளி மரியாதை எனக்குக் கிடையாது' என்று.

இதெல்லாம் நிஜமா என்று தோன்றலாம். ஊன்றிக் கவனித்துப் பாருங்கள். பஸ்ஸில், ரயிலில், ஒருத்தரைப் பார்த்ததுமே நமக்கு எரிச்சலாக வருகிறது. சிலரைப் பார்த்ததுமே பிடித்துப் போகிறது அவர்கள் எதுவும் பேசாமலேயே. காரணம் அங்க பாஷை.

ஒரு கூட்டத்தில் அங்கம் வகிக்கிற ஒவ்வொரு தனி மனிதனுக்கும் உள்ள தனிக்

இருக்க நேர்ந்தால் அதே காரியத்தைச் செய்ய எவ்வளவு கூச்சப்படுவோம்? இப்படி எத்தனையோ விதங்களில் தூண்டும் தன்மையுடையது . Body Language என்கிற அங்க பாஷை. இதைச்








கையால் லேசாக வருடுதல் - 'நான் யோசிக்கிறேன்', 'முடிவு தெரியவில்லை', 'நான் குழம்பி விட்டேன்.'

கழுத்தை நெட்டுக் குத்தலாக்கி முகத்தை வெங்கலப் பானை மாதிரி ஸீரியஸ் ஆக்கிக் கொள்பவர் 'நான் உங்கள் எல்லோரையும் விட ஒரு படி மேல்.'

பலர் சேர்ந்துள்ள இடத்தில் ஒருவர் விரல் தாளம் போடுவது பொறுமையின்மை காரணமாக. கால் ஆட்டுவது டென்ஷன் காரணமாக. அவர் வீட்டுக்குப் போக நேரம் ஆகியிருக்கக் கூடும் அல்லது அவர் அந்தக் கூட்டத்தில் பேச வேண்டியிருக்கலாம் அல்லது பாட வேண்டியிருக்கலாம்.

இப்போது எந்த அங்க பாஷையெல்லாம் கூடாது அல்லது செய்யலாம் என்று பார்ப்போம் :

அதிகாரியிடம் விரல், கைநீட்டிப் பேசுவது கூடாது. அப்படியே அதிகாரியும் இடுப்புயரத்துக்கு மேல் தூக்கியோ காலால் உதைத்துத் தரையை உதைத்துச் சப்தம் செய்தோ எதுவும் பேசுவது தவறு. (யூனியன் தொலைத்துவிடும்)

வித்தியாசம் புரிந்து கொள்ள வேண்டும். வெறும் வார்த்தைக்கு உள்ள வக்கிரம் 'அங்க பாஷை'யோடு சேர்ந்து திராவகம் பூசிக் கொள்கிறது. 'ஓகே, ஓகே, யூ கேன் கோ' என்று தலையை நிமிர்த்தாமல் சொல்வதும் 'கெட் அவுட்'தான். கையைத் தூக்கி காலை உதைத்து முகத்தை நிமிர்த்தி 'கெட் அவுட்' என்பதும் அதேதான். ஆனால் இரண்டாவதற்கு 'கெட் லாஸ்ட்' என்ற அர்த்தம் கற்பிக்கப்படுகிறது. (மறுநிமிடமே அதிகாரிக்குக் கண்டனங்கள் குவிகின்றன.)

கணவனிடம் மனைவி பேசும்போது



என்ன, அவித்த முட்டையின் மேல் ஓடு லேசில் வர மாட்டேனென்கிறதா? அவித்த முட்டையின் ஒரு பக்கத்தில் கொஞ்சூண்டு ஓட்டை அகற்றி, தண்ணீரில் முக்கி எடுத்து செயலில் இறங்குங்கள். நிமிடத்தில் மேல் ஓடு பிரிந்துவரும்.

- திருமதி காந்தாமணி

# பிறந்திருக்கும் 1996 ஆம் ஆண்டு உங்களுக்கு எப்படி இருக்கும்?




இந்த முக்கியமான, ஆர்வமான கேள்விக்கு விரிவான பதிலை அறிந்து கொள்ள மணிமேகலைப் பிரசுரம் வெளியிட்டுள்ள 1996-ஆம் ஆண்டு ராசிபலன் (12 ராசிகளுக்கும் ஒரே புத்தகம்) ரூ. 15.00; சனிப்பெயர்ச்சி (15-2-96 முதல் 16-4-98 வரை பலன்கள்) ரூ. 15.00; ஆகிய இரு நூல்களையும் வாங்கிப் படித்துப் பயனடையுங்கள் : இதர நூல்கள் : உங்கள் ஜாதகப்படி நிகழும் திசாபுக்திப் பலன்கள் 55.00; உங்கள் ஜாதகப்படி என்ன தொழில் செய்யலாம்? 13.00; உங்கள் ஜாதகப்படி ஆயுளும் ஆரோக்கியமும் 11.00; உங்கள் பிறந்த தேதியின்படி திருமண வாழ்க்கை எப்படி அமையும்? 15.50; உங்கள் ஜாதகப்படி ஆயுள் நிர்ணயமும் மாரகமும் 18.00; பதஞ்சலி நாடி ஜோதிடம் பாகம் – 1, ரூ. 54.00; பாகம் – 2, ரூ. 51.00; அகத்தியர் நாடி ஜோதிடப்படி 12 ராசிகளுக்கு 12 புத்தகம் – ஒரு செட் விலை ரூ. 282.00; திருக்கணித பஞ்சாங்கம் 1926 முதல் 1995 வரை 70 வருடங்களுக்கு ரூ. 280.00; வாக்கியப் பஞ்சாங்கம் 1926 முதல் 2000 வரை 75 வருடங்களுக்கு ரூ. 350.00.

## 2000 பொது அறிவு விநாடி வினா - விடைகள் ரூ. 54.00

பொது அறிவு மிக்கவர்கள், கெட்டிக்காரர்களாகவும், வாழ்வில் வெற்றி பெறுபவர்களாகவும் இருக்கிறார்கள் என்பதில் சந்தேகமென்ன? இன்றையப் புதிய விஷயங்கள் வரை அறிந்து கொள்ள இந்நூல்களைப் படியுங்கள்; ஜெனரல் நாலெட்ஜ் (பொது அறிவு விஷயங்கள்) பாகம் -1, ரூ. 33.50; பாகம்–2, ரூ. 52.00; பள்ளிப் பிள்ளைகளுக்கான பொது அறிவு விஷயங்கள் பாகம்–1, ரூ. 34.00; பாகம்–2, ரூ. 36.00; பொது அறிவுக் களஞ்சியம் 13.50; திறன் வளர்க்கும் விடுகதைகள் பாகம் – 1, ரூ. 27.50; பாகம் – 2, ரூ. 32.50.

## மறையாத காவியமொன்று... (இஸ்லாமியக் கவிதைகள்) ரூ. 37.50



மிகச் சிறந்த கவிதைகளின் தொகுப்பு எனப் பலராலும் பாராட்டுப் பெற்ற இந்நூலை கவிஞர் ஆலிம் செல்வன் அவர்கள் அருமையாக எழுதியிருக்கிறார்கள். இதர நூல்கள் : குணங்குடி மஸ்தான் பாடல்கள் 15.00; கவிஞர் ஆலிம் செல்வனின் மகள் கவிதாயினி சஞ்சிதா எழுதியுள்ள உயிரின் முன்னுரை 31.00; கவிஞர் புவனாவின் மன்னிக்க முடியாத மனிதர்கள் 12.00; கவிஞர் முத்துவின் தமிழா, சரியா சொல்லு? 34.50; சந்தோஷக் கவிதைகள் 30.00; மனுஷ்ய புத்திரனின் கவிதைகள் 6.50; வேணா தமிழ்வாணனின் கண் இமையில் மறைந்த கனவுகள் 9.00; சிறந்த இந்தியக் கவிதைகள் 17.00; உலகத்துச் சிறந்த வசன கவிதைகள் 19.00; கவிதைகள் எழுதுவது எப்படி? 12.00; கண்ணதாசனும் தத்துவப் பாடல்களும் 17.00; கண்ணதாசனும் சோகப் பாடல்களும் 16.00; கண்ணதாசனும் காதல் ரசமும் 20.00.

## சிவப்பாக ஆக வேண்டுமா? ரூ. 9.00

கறுப்பாக கலர் குறைவாக இருந்தவர்கள் மெல்ல மெல்ல நிறமாறி வந்திருப்பதை நாமே கண்கூடாகக் கண்டிருக்கிறோம். எனவே சாத்தியமான ஓர் விஷயத்தை இந்நூல் விளக்குகிறது. குறைந்த விலையில் பயனுள்ள விஷயம். இதர நூல்கள் : முக அழகைப் பாதுகாப்பது எப்படி? 9.00; அழகுக் குறிப்புகள் 24.00; அழகாய் இருப்பது எப்படி? 18.00; நீங்களும் மேக்கப் செய்யலாம்! 15.50; உடையலங்காரமும், நகையலங்காரமும் 9.75; புவனாவின் ஆரோக்கிய அழகுக்கலை முறைகள் 13.00; பெண்களுக்குரிய கை கால் மருதாணி மாதிரிகள் 30.00; நெக்லஸ் மாதிரிகள் 30.00; தோடு, மோதிரம், மூக்குத்தி மாதிரிகள் 30.00; சங்கிலி, வளையல், பிரேஸ்லெட் மாதிரிகள் 30.00; நீங்கள் உயரமாக வளர வேண்டுமா? 9.00; ஒல்லியாக இருக்கும் நீங்கள் குண்டாக விரும்புகிறீர்களா? 8.00; உடல் பருமனைக் குறைக்கச்

மேற்கண்ட புத்தகங்களுள் தேவையானவற்றை வி.பி.பி.யில் பெறக் கடிதம் எழுதுங்கள். பாதுகாப்பாக அனுப்பி வைக்கிறோம். தபால்காரர் புத்தகங்களை உங்களிடம் தரும்போது பணம் செலுத்தினால் போதும். [தபால் செலவு தனி]. சென்னையில் இருப்பவர்கள் நேரில் வந்து வாங்கிக் கொள்வது சிக்கனம். ஷோரூம் விற்பனை நேரம் : காலை 9 மணி முதல் மாலை 6 மணி வரை. ஞாயிறு விடுமுறை.

## தமிழ் நெஞ்சங்கள் இணைவதற்கு அன்புடன் அழைக்கிறோம்!

கடந்த வருடங்களைப் போலவே 'பேனா நண்பர்கள் சங்கம் – நோக்கங்களும் முகவரிகளும்' நூலை 1996-ஆம் ஆண்டு வெளியிடாக அச்சிடவிருக்கிறோம். எனவே தூய நட்பை விரும்பும் தமிழ் உள்ளங்களுக்கிடையே பாலமாக அமையப் போகும் இந்நூலில் உங்கள் விலாசம் இடம்பெற உடனே கடிதம் எழுதுங்கள்! இச்சங்கத்தில் சேர கட்டணமோ, விண்ணப்பப் படிவமோ ஏதுமில்லை! உள்நாட்டு வெளிநாட்டு நண்பர்களைத் தொடர்பு கொள்ள அருமையான வாய்ப்பு! கடிதம் எழுத வேண்டிய முகவரி :



## மணிமேகலைப் பிரசுரம்



தபால் பெட்டி எண் : 1447, 4, தணிகாசலம் சாலை,
தியாகராய நகர், சென்னை – 600 017.
தொலைபேசி : 4342926 தொலைநகல் : 044-4346082

உதட்டை வருடிக் கொண்டோ உடம்பை அசைத்துக் கொண்டோ பேசினால் கணவனுக்கு அந்தப் பேச்சில் அவநம்பிக்கை ஏற்படும்.

கணவன் மனைவியிடம் பேசும்போது அவள் கண்களைப் பார்த்துப் பேசினால் நம்பிக்கை அவளுக்கு அதிகரிக்கும்.

தோழிமார் ஒருவருக்கொருவர் பேசும் போது ஒருவர் கையை ஒருவர் இயல்பாகப் பற்றியவாறு பேசுவது நிஜமான நெருக்கத்தைக் காட்டும். (இதைப் படிக்கிறபோது ரொம்ப சாதாரணமாகத் தோன்றும். ஆனால் நிஜத்தில் ஒருவர் கையைப் பற்றுவது ரொம்ப ரொம்ப சிரமம்.)

ரொம்பப் பெரியவர்களிடம் அல்லது மரியாதைப்பட்டவர்களிடம் (Super Boss, மாமனார், கணவனின் நெருங்கிய நண்பன்) ஓரளவு மரியாதை இடைவெளி கொடுத்துப் பழகுவது நல்லது. அவர்கள் மீது அன்பும் ஆதங்கமும் இருந்தாலும் அதை வெளிப்படுத்துவதில் நேர்த்தி இருக்க வேண்டும். இடைவெளி தந்து நிற்பது நடமாடுவதே உயர்ந்த Body Language ஆகிவிடும்.

வேலைக்கான 'இண்டர்வியூ'வின் போது தலையை ஆட்டி எந்தப் பதிலுமே தரக் கூடாது. 'இல்லை, கூடாது' என்பதைக் கூட ஆரவாரமில்லாமல்தான் சொல்ல வேண்டும். சேரில் அசைந்து நெளிந்து உட்கார்ந்து 'க்ரீச்' சப்தங்கள் ஏற்படுத்துவது நீங்கள் steady இல்லாதவர் என்பதைக் காட்டும்.

எத்தனையோ நேரங்களில் நம்முடைய தவறான அசைவுகள் நம்மிடம் நிஜமாக இல்லாத குறைகளை இருப்பதாகக் காட்டிவிடுகின்றன. நாம் முயன்று குறி வைத்துக் கட்டுப்படுத்தினால் நம்மிடம் நிஜமாக இருக்கக் கூடிய கெட்ட தன்மைகளான அகம்பாவம், கோபம், வெறுப்பு போன்றவற்றைக் கூட மறைத்து இல்லாதது போலக் காட்டிக் கொள்ள முடியும்.

அரசியல்வாதிகள் கூட்டங்களில் பேசும் போது நியாயமில்லாததையும் அடாவடிகளையும் சொல்லும் நேரத்தில் கூட முகபாவத்தையும் கைகளையும் கருணாமயமாகவும் அரவணைக்கும் பாவனையிலும் வைத்துக் கொள்வதைப் பார்க்கலாம்.

'வாழ்க! வளர்க!' கோஷத்தைக் கூட கையைத் தூக்கி முஷ்டியை உயர்த்திப் போடுகிறவர்கள் 'வன்முறையாளர்' வரிசையில் சேர்க்கப்படுவர்.

இப்படி அங்க பாஷையின் முக்கியத்துவம் புரிந்து கொண்டு பேசாமலேயே எல்லோரிடமும் நல்ல பெயர் வாங்குவோம்.

**— மாலதி**

# இன்று –
# உங்கள் ரூ.500 மட்டுமே.
# நாளை –
# உங்கள் வசந்த மாளிகை.



**கூடுவாஞ்சேரி :**

ராஜாஜி நகர்
(ரெ.532/95)

திருக்குறள் நகர் முதற்கட்டம்
(ரெ.1057/95)

**செங்கல்பட்டு:**

சாஸ்திரி நகர்
(ரெ.756/95)

வாஞ்சிநாதன் நகர்
(ரெ.757/95)

இப்பொழுது ரூ.500 மட்டுமே செலுத்தி, ஒரு வீட்டுமனையை உங்களுக்கு சொந்த – மாக்குங்கள். மேலும் விவரங்களுக்கு எங்களுடன் தொடர்பு கொள்ளுங்கள்.




**டிஎல்வி ஹவுஸிங் & ஃபைனான்ஸ்
(பி) லிமிடெட்**

54, பெரம்பூர் பேரக்ஸ் ரோடு,
புவனேஸ்வரி தியேட்டர் எதிரில், சென்னை - 600 007.
போன்: 5325311/12/13 ஃபேக்ஸ் : 5325363

**20 ஆண்டுகளுக்கு மேலாக
நன்மதிப்பை கட்டிக்காப்பவர்கள்**



கீறல் இல்லாமல் பிசுபிசுப்பை நீக்குகிறது



கண்ணாடி பொருட்களை பளபளப்பாக்குகிறது

உங்கள் போன் சைனா மீது
மென்மையாக செயலாற்றுகிறது

## இவையனைத்தும் டீபாலின்
## ஒரு சில துளிகளிலே.

டீபால் ஒரு சர்வதேச லிக்விட் க்ளீனர். பிடிவாதமான பிசுபிசுப்பான எண்ணெய் பசையை நீக்கும் சக்தி இதில் உள்ளது. உங்கள் சமையல் பாத்திரங்கள் மற்றும் நேர்த்தியான பீங்கான் பொருட்களை மென்மையாக சுத்தப்படுத்த ஒரு சில துளிகளே போதுமானது. எப்பொழுதும் பளபளப்பாக, பிரகாசமாக இருக்கும். எந்தவித கறையோ, கீறலோ உண்டாகாது. பிசுபிசுப்பு எண்ணெய் பசையின் அறிகுறி இருக்காது.

**ஒரே துளி அளித்திடும் அத்தனை பளபளப்பு**




O&M 750/Tam/5

# மங்கையர் மலர்

## பிப்ரவரி '96

# ஆண்டுமலர்

அன்புச் சகோதரிகளே,

நமது மங்கையர் மலர் ஆரம்பித்து பதினைந்து வருடங்கள் முடிந்து பதினாறாவது ஆண்டில் காலடி எடுத்து வைக்கிறது. பதினாறாவது வயது - ஸ்வீட் ஸிக்ஸ்டீன்தானே! அதைக் கொண்டாட வேண்டாமா?

நம்முடைய சமூகமும், அதனால் நமது பெண்களும் எத்தனை மாறி வருகிறார்கள். அவர்களுடைய கருத்துக்களை எல்லாம் கேட்கும் போது "அடேங்கப்பா! இந்தத் தலைமுறை பெண்கள்தான் எத்தனை அறிவாளி களாக, பக்குவப்பட்டவர்களாக இருக்கிறார்கள்" என்று பிரமிக்கத் தோன்று கிறது. அதேசமயம் வேண்டாத பாதிப்புகளும் இருக்கத்தான் செய்கிறது.

இன்றைய பெண்களின் கருத்துக்களை வெளியிடும் நம் மங்கையர் மலர் இதைப் பற்றியெல்லாம் பேச வேண்டாமா? நம் தலைமுறைப் பெண்களின் போக்கை நிர்ணயிப்பதில் பெரும் பங்கு கொண்டிருக்கும் மங்கையர் மலர் நவீன கலாசாரத்தின் சாதக பாதகங்களை அலச வேண்டாமா? அதற்காகத்தான் மங்கையர் மலரின் பதினாறாவது ஆண்டு மலர் —

## 'மாறிவரும் பெண்கள்' சிறப்பிதழ்

என மலர்கிறது. அன்புச் சகோதரிகளே, இதைப் பற்றிய உங்கள் கருத் துக்களையும் நீங்கள் அனுப்பலாம். ஆனால் விரைவில் அனுப்பி வையுங்கள்.

**இந்த ஆண்டு மலரில்.....**

நிறைய நிறைய புதுமைச் செய்திகளை....
சுவாரஸ்யமான பேட்டிகளை....
காரசாரமான விவாதங்களை....
சந்திக்கலாம்!

அதிக பக்கங்களுடன் மலர்கிறது
ஆண்டு மலர் சிறப்பிதழ்!



# Supreme
## FURNITURE



## பல மாடல்கள்! பல வண்ணங்கள்!





CORAL Rs. 360/-

**சுப்ரீம்**

வழங்கும்
விழாக்கால
அணிவகுப்பு



FLORA Rs. 425/-



LILY Rs. 350/-

**20**க்கும்
மேற்பட்ட பல
மாடல்கள்
(தனித்தனி
விலைகளில்)



NOVA Rs. 190/-

கல்யாண மண்டபங்கள், சேர்கள் வாடகைக்கு விடுபவர்கள், ஹோட்டல்கள், கல்லூரிகள், பள்ளிகள் ஆகியவற்றிற்கு 100ம் அதற்கு மேலும் வாங்குவோருக்கு சகாய விலையில் தரப்படும்.

பிராந்திய அலுவலகம் : **தி சுப்ரீம் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட்,**
12, முதல் குறுக்கு தெரு, C.I.T. காலனி, மைலாப்பூர், சென்னை-600 004. Ph: 4998263, 4998271

**'சுப்ரீம்' ISO 9002 சான்றிதழ் பெற்ற நிறுவனம்**

விநியோகஸ்தர்கள் : ● **ஹண்டர்ஸ்,** 42, செம்புதாஸ் தெரு, சென்னை-1 (Ph:5230489/5227631) ● **விஜய் இன்டர்நேஷனல்,** 58, மண்ணடி தெரு (முதல் மாடி) மண்ணடி, சென்னை-1 (Ph:512972/517499) ● **ஸ்ரீ ராம் டிரேடர்ஸ்,** 239, லால்பகதூர் சாஸ்திரி தெரு, பாண்டிச்சேரி-1 (Ph: 31717) ● **N.K.V ஏஜென்ஸீஸ்,** 182-J, S.N. ஹைரோடு, (சென்ட்ரல் தியேட்டர் எதிரில்) திருநெல்வேலி-1 (Ph: 337029) ● **ஹண்டர்ஸ்,** 95A, ரேஸ் கோர்ஸ் ரோடு, (K.G.தியேட்டர் எதிரில்) கோயமுத்தூர்-18 (Ph: 210753) ● **இண்டோ சுப்ரீம்,** 51, மேல மாசி வீதி, மதுரை-1 (Ph:38460/38550) ● **சுப்ரீம் ஏஜென்ஸீஸ்,** சாந்தம் அனெக்ஸ், 135, சாரதா காலேஜ் ரோடு, சேலம்-16 (Ph:446970) ● **காவேரி டிரேடர்ஸ்,** 122, பார்க் ரோடு, மூலப்பட்டறை, ஈரோடு-3 (Ph: 210934) ● **ஒயிட் & கோ,** 367, அவினாசி மெயின் ரோடு, K.K.C.காம்ப்ளெக்ஸ், திருப்பூர்-2. (Ph: 746300/745079)) ● **ஸ்ரீ கலா ஏஜென்ஸீஸ்,** 75, துக்காம்பாளையம் ரோடு, கும்பகோணம்-1 (Ph: 21650) ● **ஜெனரல் எக்யூப்மென்ட்ஸ்,** 4 வாட்டர் டாங்க் காம்ப்ளெக்ஸ், மேற்கு பொலிவார் ரோடு, திருச்சி-8 (Ph: 32710) ● **ஆதி சக்தி டிரேடர்ஸ்,** 88, ரத வீதி, கரூர்-1. (Ph: 22176/40329) ● **ஜீவா எலக்ட்ரானிக்ஸ்,** 38, பாரதிதாசன் தெரு, அறந்தாங்கி-16 (Ph: 20064) ● **V.V. எண்டர்பிரைஸஸ்,** 16-N, சாரதி மேன்ஷன், வேலூர் - 4. (Ph: 24179) ● **காஞ்சி கிளாஸ் & பிளைவுட்,** 9,M.A.S. காம்ப்ளெக்ஸ், ரங்கசாமி குளம் அருகில், காஞ்சிபுரம்-1 (Ph: 24215) ● **ஸ்ரீ சுதர்சன் ஏஜென்ஸீஸ்,** S.M. காம்ப்ளெக்ஸ், 122, பொள்ளாச்சி மெயின் ரோடு, தாராபுரம், பெரியார் மாவட்டம். (Ph: 21015/20903) ● **ராஜேஷ் ஃபர்னிச்சர்ஸ்,** 7, வரதராஜுலு காம்ப்ளெக்ஸ், (கடை எண்-5) மெயின்ரோடு, திண்டுக்கல்-1 (Ph: 30588)

அழகிப் போட்டிகளையே கொஞ்சம் கண்ணைச் சுளுக்கிக் கொண்டுதான் பார்க்கிறோம். அதுவும் அவர்கள் "உங்களுடைய லட்சியம் என்ன?" என்று கேட்கும்போது, "சமூக் சேவை செய்வது" என்று சொல்லும் போது சிரிக்கிறோம். இதெல்லாம் இருந்தாலும், சென்ற வருட உலகப் பேரழகிகளாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட சுஷ்மிதாசென்னும், ஐஸ்வர்யா ராயும் சொன்னபடியே நிறைய சமூகசேவை நிறுவனங்களுக்கு உதவும் வகையில் தங்களுடைய நிகழ்ச்சிகளை அமைத்துக் கொண்டு தான் வருகிறார்கள். பார்க்கும்போது சந்தோஷமாகத்தான் இருக்கிறது.

சமீபத்தில் சென்னைக்கு வந்த சுஷ்மிதா சென் மூளை வளர்ச்சி குன்றியோர் காப்பகமான 'தி பன்யன்' அமைப்பிற்கு உதவுவதற்காகப் பல நிகழ்ச்சிகளை அமைத்துக் கொண்டார். அந்த வகையில் பிரபல ஷாம்பூ, ஹெர்பல் நிறுவனமான 'ராகா'வும் அவருடன் சேர்ந்து சமூக சேவையில் இறங்கி இருக்கிறது.

தான் புதிதாக அறிமுகப்படுத்தியிருக்கும் 'ராகா ஸ்பெஷல் ஹெர்பல் ஆயில்பாத் பவுடரின்' விற்பனையை இந்த சமூக நல

இந்தப் பெண்களோடு செலவிட்ட நேரமும், இவர்களின் பணிகளும் என்னால் வாழ்நாளில் மறக்க முடியாத நிகழ்ச்சிகள்" என இவரிடமே பேசும்போது குறிப்பிட்டாராம் சுஷ்மிதா.

அது சரி, அது என்ன 'ஆயில்பாத்'திற்கான பவுடர்? குமாரவேலுவிடம் கேட்டோம்.

"நிறையபேர் ஷாம்பூ பயன்படுத்துகிறார்கள். அதே அளவு ஹெர்பல் பவுடர் பயன்படுத்துபவர்களும் இருக்கிறார்கள். ஆனாலும் கூட இன்னமும் எண்ணெய் தேய்த்துக் குளிக்கும் வழக்கம் பலரிடமும் இருக்கத்தான் செய்கிறது. அவர்களுக்கான ஸ்பெஷல் பவுடர்தான் இது. எண்ணெய்ப்பிசுக்கை அகற்றும் வகையில் இதனை அமைத்திருக்கிறோம். எண்ணெய் தேய்த்துக் கொண்டு சாதாரண ஹெர்பல் பவுடரை உபயோகிக்கலாமா எனும் சந்தேகம் கொண்டவர்கள் இந்த ராகா ஸ்பெஷல் ஆயில் பாத் ஹெர்பல் பவுடரை பயன்படுத்தலாம்.

இதன் அறிமுக நிலையில் இது மற்ற பவுடர்களைவிட விலை குறைவாக இருக்க வேண்டும் என்றுதான் ஒன்றேகால் ரூபாய் என விலை வைத்து இருக்கிறோம். உங்கள்

# மங்கையரை மயங்க வைக்கும் வண்ணம்! கலை நயமிக்க "TEXPRO" வின் கைவண்ணம்!



நல்ல தரமுள்ள BLOCK PRINTING, FABRIC PAINTING, செய்த காட்டன் புடவைகளும் சூடிதார்கள், குஷன் கவர் மற்றும் பெட்ஷீட்களும் ஹோல்சேல் விலையில் உடனடியாகக் கிடைக்கும்.

விவரங்களுக்கு அணுகவும்

## TEXPRO

H-66, ANNA NAGAR,
MADRAS - 600 102.
PH : 6212354, 4821604, 6413057

பிரிண்டிங் ஆர்டர்கள் வரவேற்கப்படுகின்றன

KOMALA ADS



## "THE VISIBLE DIFFERENCE" HERBAL BEAUTY CLINIC & SCHOOL OF COSMETOLOGY

"தி விஸிபிள் டிபரன்ஸ்" ஹெர்பல் பியூட்டி கிளினிக் அண்டு ஸ்கூல் ஆஃப் காஸ்மெட்டாலஜி

**BEAUTY CARE**

*SKIN CARE,*
*FACIALS,*
*MANICURE,*
*PEDICURE,*
*WAXING,*
*MEHNDI,*
*BRIDAL DRESSING,*
*HAIR CARE,*
*HAIR CUTS,*
*EXERCISE*

**2 MONTHS COMPLETE BEAUTICIAN COURSE FOR PROFESSIONALS**

*HAIR & BEAUTY CARE*
*GALVANIC,*
*THERMOLYSIS TREATMENT,*
*LATEST FACIALS,*
*LATEST TECHNIQUE IN BRIDAL DRESSING AND THERAPEUTIC TREATMENT FOR PIMPLES, SCARS DERMABRASION.*

[YOGA & KARATE CLASSES CONDUCTED]

**3, BALAJI AVENUE I STREET, T. NAGAR,**
**[OPP. VIDYODAYA SCHOOL, NEAR VALLUVAR KOTTAM],**
**MADRAS - 600 017. Ph : 8254079**

மங்கையர் மலரும், செண்பகம் சில்க்ஸும் இணைந்து ஒரு கட்டுரைப் போட்டியினை சென்ற இதழில் அறிவித்திருந்தோம். புடைவை சம்பந்தமாக பெண்களுக்குப் பல்வேறு சம்பவங்கள் வாழ்க்கையில் நடந்திருக்கலாம். அந்த உணர்வுகளையே ஒன்பது பிரிவாகப் பிரித்து ஒவ்வொரு மாதமும் ஒவ்வொரு உணர்வு வெளிப்படுவதாகப் போட்டிகளை அறிவிக்கப் போகிறோம் எனக் கூறியிருந்தோம்.

**சென்ற மாதப் போட்டிக் கட்டுரையில் நாங்கள் கண்ட சில சிறு குறைபாடுகள் —**

● மங்கையர் மலருக்கோ அல்லது செண்பகம் சில்க்ஸுக்கோ நீங்கள் கட்டுரைகளை அனுப்பலாம் என எழுதியிருந்தோம். இரண்டுக்குமே பல பேர் அனுப்பினார்கள். தேவையில்லை ஏதாவது ஒரிடத்திற்கு அனுப்பினால் போதும்.

# மங்கையர் மலர்
# &
# செண்பகம் சில்க்ஸ்

*வழங்கும்*

# வாழ்வின் வண்ணங்கள்

## கட்டுரைப் போட்டி:2

● ஆச்சர்யம்–சம்பந்தமான கட்டுரைகள் என அறிவித்திருந்தால் புடைவை இருந்தால் ஆச்சர்யத்தைக் காணோம். ஆச்சர்யம் இருந்தால் புடைவையைக் காணோம். ஒவ்வொரு மாதமும் புடைவை சம்பந்தமாக அறிவிக்கப்படும் உணர்வில் ஏற்பட்ட அனுபவங்களைத்தான் எழுத வேண்டும்.

எனவே இந்த மாதம் மேற்சொன்ன இரண்டு குறைபாடுகளைத் தவிர்த்து விடுங்கள்.

சரி, இந்த மாதம் போட்டி தலைப்பிற்கு வருவோமா? புடைவை (அது எந்தப் புடைவையாகவும் இருக்கலாம். பட்டோ, பாலியஸ்டரோ, ஷிபானோ எதுவும்) சம்பந்தமாக—

## கோபம்

ஏற்படுத்திய நிகழ்ச்சி. அது உங்கள் வாழ்வில் ஏற்பட்டதாகவும் இருக்கலாம், அல்லது நீங்கள் பார்த்ததாகவும் இருக்கலாம்.

***வழக்கம் போல செண்பகம் சில்க்ஸ் உரிமையாளர் திருமதி ஜம்பகம் ராமசாமி தன்னுடைய இன்னொரு ஆசையை வெளியிட்டார். "இது பொங்கல் மாசம் இல்லையா. இங்கே நேர்ல வந்து கட்டுரையைப் போடும் பெண்களுக்கு நான் என்னால் ஆன சிறு அன்பளிப்பைத் தர்றேனே. சகோதரிகளுக்குப் புத்தாண்டுக்காகவும், பொங்கலுக்காகவும் கொடுத்த மாதிரியும் இருக்கும்"என்றார்.***

கரும்புத் தின்னக் கூலியா? "தாராளமாகக் கொடுங்களேன்...!" என்றோம்.

- வாழ்வின் வண்ணங்கள் போட்டியில் இது இரண்டாவது மாதம் போட்டி. மொத்தம் ஒன்பது மாதங்கள் நடைபெறும்.

- ஒவ்வொரு மாதமும் போட்டிக்கு வரும் கட்டுரைகளில் மிகச் சிறந்த ஒன்றைத் தேர்ந்தெடுத்து ரூ.5000/- பெறுமானமுள்ள 'செண்பகம் சில்க்ஸ்' பட்டுப்புடைவை பரிசாக அளிக்கப்படும்.

- இந்தப் போட்டிக்கான கட்டுரை ஒரு பக்கத்திற்கு மிகாமல் இருக்க வேண்டும்.

- கட்டுரையின் முடிவில் உங்களுடைய பெயர், முகவரியைத் தெளிவாக எழுதவும்.

- தபால் கவரின் மேல் **வாழ்வின் வண்ணங்கள் கட்டுரைப் போட்டி–2** எனத் தவறாமல் குறிப்பிடவும்.

- இம்மாதக் கட்டுரைகள் வந்து சேர வேண்டிய கடைசி தேதி 20.1.'96.

- கட்டுரைகளைத் தபாலில் மங்கையர் மலர் முகவரிக்கோ அல்லது தபாலிலோ (அ) நேரிலோ செண்பகம் சில்க்ஸ், 30-பி, லஸ் அவின்யூ (நாகேஸ்வரராவ் பார்க் பின்புறம்) மைலாப்பூர், சென்னை – 600 004 என்ற முகவரிக்கோ அனுப்பவும். இரண்டு இடத்திற்கும் ஒரே கட்டுரையைப் பிரதி எடுத்து அனுப்ப வேண்டாம்.

- கட்டுரை சம்பந்தமான கடிதப் போக்குவரத்தோ, திருப்பி அனுப்புவதோ கிடையாது.

- கட்டுரை சம்பந்தமான விதிகளை திருத்தவோ மாற்றவோ ஆசிரியருக்கு உரிமையுண்டு.

- பரிசு பெறும் கட்டுரைகளைப் பொறுத்தவரை ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது.

**சென்ற இதழ் கட்டுரைகளை மங்கையர் மலர் ஆசிரியரும், செண்பகம் சில்க்ஸ் அதிபர் ஜம்பகா ராமசாமியும் பரிசீலித்துக் கொண்டு இருக்கிறார்கள்.**

முடிவு –அடுத்த இதழில்.



# அண்ணாமலை போன தீபாவளி

"அம்மா! இந்த தீபாவளிக்கு 'டைனோசர்' வாணம் வாங்கணும்" என்றபடி வந்தான் கிரி.

"அது என்ன? புதுசா இருக்கே?" என்றார் அப்பா.

"அதுவா. மெதுவா நகர்ந்து வரும் போதே வால்பக்கம் கலர் கலராக பொறி கொட்டும்" என்றான் கிரி.

"சரி. ஞாபகம் இருந்தால் பட்டாசுக் கடையில் கேட்கி றேன். அதான் உனக்குபட்ட பட் டாக, வெடி, வாணங்கள் வாங்கியாச்சே" என்றார் அப்பா.

"அது புதுக அப்பா.



பக்கத்து வீட்டு கார்த்திக் கூட வாங்கி யிருக்கான்."

"நீ அங்கே போய் பார்க்க வேண்டி யது தானே?"

"போப்பா! அப்போ நம்ம வீட்டில் எது வுமே வாங்க வேணாமே. அக்கம் பக்கத்து வீடுகளில் நின்று சத்தத்தைக் கேட்டால் போச்சு" என்று கோபமாக உள்ளே போனான் கிரி.

"அம்மா! இந்த 'டாப்' கை ரொம்ப தொங்கி இருக்கு. கொஞ்சம் தையார்காரரிடம் கொடுத்து சரி பண்ணி வை" என்றாள் சுதா.

"ஏண்டி! நேற்றுதானே ஒரு செட் சரி பண்ணி வைத்தேன்?"

"அது நேற்று சாயங்காலம் பூமா மாமி வீட்டு 'பார்ட்டி'க்கு போட்டுண்டு போயாச்சு!"

"இன்னிக்கு ஒண்ணும் ஃபங்ஷன் இல் லையே. நாளைக்கு பொழுது விடிஞ்சா தீபா வளி" என்றேன் பயத்துடன்.

என்னை முறைத்துவிட்டு உள்ளே போனாள் அவள்!

தீபாவளி பக்ஷணங்கள் பற்றிய சர்ச்சை அடுத்தது. எனக்கு தலைவலியே வந்து விட்டது.

நல்ல வேளையாக தீபாவளி சிறப்பு நிகழ்ச்சிகளைப் பற்றிய விவரங்களை டீ.வி யில் சொல்ல ஆரம்பிக்க, தாற்காலிக மாக வெள்ளை கொடி காட்டி விட்டு டீ.வி. முன் சாப்பிட உட்கார்ந்தனர்.

தீபாவளியன்று காலை நாலரை மணிக்கு எழுந்து அவசரமாக குளியல், பட்டாசு, பட் சணம் என்று கிரியும் சுதாவும் மணிக் கணக்குப்படி செயல்பட எனக்கு ஆச்சரியமோ ஆச்சரியம். ஆனால் சீக்கிரமே குட்டு வெளிப் பட்டது. அன்று தொலைக் காட்சியில் ஏகப் பட்ட சினிமா குவிஸ்! அதைத் தவற விடக் கூடாது என்றுதான் அத்தனை வேகம். சின்ன குண்டூசி முதல் மாருதி கார் வரை பற்பல பரிசுகள்.



நிகழ்ச்சிகள் காலையிலேயே துவங்கின. ஏதோ தபால் கார்டில் எழுதச் சொல்வார் கள் என்று பார்த்தால் டெலிபோனிலேயே பதிலளிக்க வேணுமாம்! சரியாக நிகழ்ச்சி ஆரம்பிக்கையில், "என்னங்காணும்! கங்கா ஸ்நானம் ஆச்சா?" என்று கூவியபடி வந்தார் கிருஷ்ணன் - எங்கள் குடும்ப நண்பர். ஹால் சோபாவில் உட்கார்ந்த அவரைக் கிளப்பி வாசல் ஊஞ்சலில் உட்காரச் செய்யும்படி ஜாடை காட்டினான் கிரி. அவருக்கோ வெண்கலக் குரல்!

"வாங்கோ, காற்றாட இப்படியே உட்கார லாம்!" என்று பட்சணத்தட்டுடன் அவரைக் கிளப்பிக் கொண்டு வாசல் பக்கம் போனேன்.

"கதாநாயகன் அடித்த சிக்ஸரின் எண்ணிக்கை எத்தனை?" என்ற கேள்விக்கு ஐந்து என்று சுதாவும், ஆறு என்று கிரியும் சாதித்து, அதற்குள் பதினைந்து நிமிடம் முடியப் போகும் அவசரத்தில் ஒரே சமயத் தில் இருவரும் டெலிபோன் மீது பாய தொடர்ந்து 'வொய்' என்று 'எங்கேஜ்ட்' சப்தம் கேட்டது. குழந்தைகளின் மூஞ்சி தொங்கிப் போயிற்று. போதாத குறைக்கு பக்கத்து வீட்டுப் பையன் பாலுவும் வர, "எங்கள் டெலிபோன் வேலை செய்ய

வில்லை" என்று சொல்லி அனுப்பினார்கள்.

"ஏண்டா! அங்கே என்ன ரகளை! போனை விட்டு நகருங்கோ. நான் ஒரு எஸ்.டி.டி. போட ணும்" என்றார் அப்பா.

"அப்பா! ப்ளீஸ்! இன்னும் ஒரு மணி நேரம் கழிச்சி பேசுங்கோ. இப்போ போன் எங்களுக்கு வேணும்" என்று கெஞ்சினான் கிரி.

"ஐயயோ! டேய் கிரி! சீக்கிரம் வா! நாம இந்த பாட்டைக் கவனிக்கவே இல்லையே. அது எந்தப்படம் என்று கேட்டால் என்ன செய்வது" என்றாள் சுதா.

"ஹாயா படுத்துத் தூங்கறது! பரீட்சைக்குக் கூட இந்த பாடு பட்டதாகத் தெரியலையே!" என்றார் அப்பா.

சாதாரணமாக இப்படி பேசிவிட்டு இவர்களிடம் தப்ப முடியுமா? ஆனால் இன்று வேறு எதையும் கவனிக்கும் நிலையில் இல்லை அவர்கள். சாப்பாடு - என்ன போட்டிருக்கிறது என்று தெரியாமலேயே, டி.வியைப் பார்த்தபடி முடிந்தது. அவர்களுக்குப் பிடித்த அவியல், உருளைக் கிழங்கு பொடிமாஸ், பால் பாயசம் எதையுமே அவர்களால் ரசிக்க முடியவில்லை.

சுமார் ஐந்து ஆறு மணி நேர நிகழ்ச்சிகள், குவிஸ்கள் அதற்கான முடிவுகள் என்று சாயங் காலம் வரை இருந்த இடத்தைவிட்டு எழுந்து வரவில்லை குழந்தைகள். ஆனால் என்ன பயன்? சரியாக பதில் சொல்லியிருந்தாலும் குலுக்கல் முறையில்தானே பரிசுகளை நிர்ணயிக்கிறார்கள்! ஒரு ஸ்பூன் கூட பரிசாக கிடைக்காத வருத்தம் ஆளை அழுத்த, சாயங்காலம் கூட எங்கேயும் வெளியே கிளம்பவில்லை.

"ஏண்டா! அத்தனை ரகளை செஞ்சியே! 'டைனசார்' வானம் அப்படியே இருக்கே" என்றேன்.

"போறதுமா. ஏதாவது குழந்தைகளுக்கு கொடு. நாளை மறுநாள் எனக்கு கணக்கு டெஸ்ட். போட்டுப் பார்க்கணும்" என்றான் கிரி.

"ஆமாம். எனக்குக் கூட 'கெமிஸ்ட்ரி' டெஸ்ட்" என்றாள் சுதா.

பக்ஷணங்கள் கூட சாப்பிடவில்லையே என்று எனக்குக் குறை. மறுநாள் பள்ளிக்கூடத்திற்கு எடுத்துப் போய் நண்பர்களுடன் சாப்பிடு வதாகச் சொன்னார்கள். சாதாரணமாக கிண்டலும் கேலியுமாக நடக்கும் பக்ஷண விமரிசனம், பலரது புது உடைகள் பற்றிய 'காமென்டரி' எதுவுமே இல்லாத வறண்ட தீபாவளியாக மாற்றியது டி.வி. அளித்த குவிஸ். எங்கள் இளவல்களின் தீபாவளி சந்தோஷத்தை காணாமல் அடித்த பெருமை அதற்கு உண்டு. உங்கள் அனுபவம் எப்படியோ?

# வெடிப்புகளிலிருந்து விடுதலை பெற்று, பாதங்கள் மீண்டும் அழகுறும் - 14 நாட்களில்

வெடிப்புகள் எவ்வளவு அருவருப்பாக மற்றும் வலியூட்டுவதாக உள்ளன. கோல்ட் க்ரீம் மற்றும் ஜெல்லி மிகக் குறைந்த காலத்திற்கே ஆறுதல் அளிக்கவல்லது. ஆனால், மனம் தளர வேண்டாம். இப்போது உள்ளது தனிச்சிறப்பாக தயாரிக்கப்பட்ட புதிய க்ராக் க்ரீம். இதன் சிறப்பான "ஈ ஜெல்" (எமோலியன்ட் ஜீவர்) ஃபார்முலா மற்றும் இதில் கலந்துள்ள அரிய மூலிகைகள் வெடிப்புகளில் ஆழ்ந்து ஊடுருவிச் சென்று உங்களுக்கு உடனடி ஆறுதல் அளிக்கிறது. 14 நாட்களில் * நீங்கள் பூரண குணம் பெறுகிறீர்கள். உங்கள் பாதங்களும் அவ்வாறே பொலிவுடன் விளங்குகின்றன எவ்வாறு உங்கள் அழகான முகம் விளங்குவதுபோல். *க்ராக் க்ரீம் தினமும் 3 முறை தடவுங்கள். இதைத் தடவியபின் 15 நிமிடங்கள் வரை உலரவிடுங்கள்.







க்ராக் ஆன்டிஸெப்டிக் க்ரீம்

# வரும் புத்தாண்டு எப்படி இருக்கும்?

(1995 ஆம் ஆண்டு டிசம்பர் மாத முதல் வாரத்தில் திருக்கணிதப்படி குரு விருச்சிகத்தில் இருந்து தனுர் ராசிக்குச் செல்கிறார். அதற்கு இரண்டு நாட்களுக்குப் பின் ராகுவும் கேதுவும் முறையே கன்னிக்கும் மீனத்திற்கும் செல்கிறார்கள். இந்த மூன்று கிரகங்களின் பெயர்ச்சிக்குப் பின் பிப்ரவரி மாதம் 15-ந்தேதி சனியும் மீனத்திற்கு வருகிறார். இந்த அடிப்படையில் 1996 - உங்களுக்கு எப்படி இருக்கும்?)

## மேஷ ராசி :



அசுவினி, பரணி, கிருத்திகை 1 ஆம் பாதம்.

நல்லதொரு கால கட்டம். பதவி உயர்வும், பணவரவும் உண்டு. சுப நிகழ்ச்சியும் அதுசம்பந்தமான செலவும் ஏற்படும். எனவே ஆண்டின் மத்திய பாகத்தில் சற்று பணப்பற்றாக்குறை ஏற்படும். வெளிநாட்டுப் பயணத்திற்கும் வாய்ப்புள்ளது. பயன்படுத்திக் கொள்ளுங்கள். வருட ஆரம்பத்தில் காவல் துறையினர், சுங்கம், எரிபொருள் ஆகிய துறைகளில் உள்ளவர்களுக்கு வேலைப்பளு அதிகமாகும். அதேவேளையில் பண வருவாயும், பாராட்டும் கிடைக்கும்.

அரசியலில் உள்ள வர்களுக்கு முதல் மூன்று மாதங் களுக்கு டென்ஷன் அதிகமாகும். தசா புக்தி அமைந்துள்ளவர்களுக்குத் தேர்தலில் வெற்றி உள்ளது. அமைச்சராகும் தகுதி கூடப் பெறலாம். ஆனால், சனி பகவான் மீனத்திற்கு வரும் போது சற்று சிரமமான பலனைத் தரலாம். ஜுன், ஜுலை, ஆகஸ்ட் மாதங்களில் மனஉளைச்சல் அதிகமாகும். குருவின் பார்வை உள்ளதால் எதையும் தாங்கும் வல்லமை ஏற்படும். நேர்மையுடன் நடப்பவர்களுக்கு ஆரம்பத்தில் சோதனையும் முடிவில் அதற்குண்டான பாராட்டும், பரிசும் கிடைக்கும்.

பிப்ரவரி முதல் ஏப்ரல் முடிய எதையும் யோசித்துச் செய்யுங்கள். எதிர்நீச்சல் போட வேண்டிய நிலை. எனினும் ராசிநாதன் உச்சம் பெறும் சமயங்களில் அச்சமின்றிப் பணியாற்றி பலவிதங்களிலும் பாராட்டினைப் பெறுவீர்கள். புத்திரகாரகனாகிய குருவின் பார்வை இராசிக்கு இருப்பதால் இதுவரை மழலைச் செல்வம் இல்லாதவர்களுக்கு இந்த ஆண்டில் உண்டாகலாம். சுபநிகழ்ச்சி ஒன்று கட்டாயம் நடக்கும். மொத்தத்தில் உங்களது முக்கிய பிரச்னைகளான கடன், கோர்ட்டு விவகாரம், பதவி உயர்வில் தடங்கல், என்பனவற்றில் உங்களுக்குச் சாதகமானதொரு நிலை உருவாகி நல்லவையே நடக்கும் என நம்பலாம். ஒரு பௌர்ணமியன்று ஸ்ரீ சத்திய நாராயண பூஜையோ, அல்லது ஸ்ரீ லக்ஷ்மி குபேர பூஜையோ நடத்துவது நல்லது.

## ரிஷப ராசி :



கிருத்திகை 2, 3, 4 ஆம் பாதங்கள், ரோகிணி, மிருகசீர்ஷம் 1, 2 ஆம் பாதங்கள்.

குருவுக்கு 6 இல் சந்திரனும், சந்திரனுக்கு 8 இல்

குருவும் அமைகின்ற சஷ்டாஷ்டக நிலை ஆண்டு முழுவதுமே உண்டு. ஏற்றத்தாழ்வுகள் மிக்க ஆண்டாகிலும், கும்பத்திலிருந்து மீனத் திற்குச் சனி வந்த பிறகு இலாபம் உண்டு. எனினும், சொல்லும் சொல்லில் பிறருக்குக் கொடுக்கும் வாக்குகளில் மற்றும் உறவு நிலைகளில் எச்சரிக்கை தேவை. உயிருக்குயிர் நண்பனாக இருப்பினும் அல்லது உறவினராக இருந்தாலும் ஜாமீன் கையெழுத்துப் போடா மல் இருப்பது இருவருக்குமே நல்லது. உங்கள் அன்றாடப் பணிகளில் அதிகம் மாற்றமிராது. வெளிநாட்டில் உள்ள உங்கள் உறவினர்களிட மிருந்து நல்ல செய்தி வரும். நீங்களே கூட வெளிநாடு சென்று தங்க வேண்டியிருக்கும். புதிதாக வரும் உங்கள் மேலதிகாரி ஒருவரால் சில கெடுபிடிகள் உண்டாகலாம். தம்பதிகளுக் குள் ஒருவரையொருவர் புரிந்துகொண்ட ஆழ மான அன்பு இருந்தாலொழிய தாம்பத்திய சுகத்தில் அமைதி குறையும். எனவே, விட்டுக் கொடுத்தல் சவால் விடாமல் சமாதானத்தை நாடுதல் ஆகியவை அவசியம் தேவை. இது எத்துறையினருக்கும் பொருந்தும். மழலைச் செல்வம் உண்டாகும் வாய்ப்பும் உள்ளது. புதியதொரு தொழில் அமைக்கும்படி பாகஸ் தர்கள் வற்புறுத்தினாலும் அதைக் கைவிடுவது நல்லது. அதனால் பாகப்பிரிவினை ஏற்பட்டா லும் அஞ்ச வேண்டாம். யாரிடமும் கெஞ்சா மல் தைரியமாக நின்று நிலைமையைச் சமா ளிக்க முற்பட்டால் கடலும், கால் அளவிற்கு மாறி, கிரகங்களும் உங்களுக்குச் சாதகமாக மாறும்.

## மிதுன ராசி :



மிருகசீர்ஷம் 3, 4 ஆம் பாதங்கள், திருவாதிரை, புனர்பூசம் 1, 2, 3 ஆம் பாதங்கள்.

ஏற்றமிகு காலகட் டம். கடந்த ஆண்டில் சஷ்டாஷ்டக நிலையில் குருவும் சந்திரனும் அமைந்து மகிழ்ச்சியையும் தந்தார்கள். சுபவிரயத்தையும் உண்டாக்கினார் கள். அதேசமயம் உங்கள் அலுவலகப் பணி யைப் பொறுத்து மாடாக உழைத்தும், உங்கள் மேலதிகாரிகள் உங்களை இனம் புரிந்து கொள்ள முடியாத இழிநிலை இருந்ததென் னவோ உண்மைதான். ஆனால், இனி அதே அதிகாரிகள் உங்களிடம் அளவிற்கு மீறிய நம்பிக்கையை வைத்து, அதற்கேற்ப சொல் லாலும், பதவி உயர்வாலும் உங்களைக் கௌர விப்பார்கள். ஓரிரு சமயம் உங்கள் பணியை மாற்றிக் கொள்ள வேண்டிய சூழ்நிலை கூட உருவாகலாம். வீட்டிலும் பிரச்னை தோன் றும். அச்சமயத்தில் ஐக்கிய மத்திய ஜபத்தை வேத வித்துக்களைக் கொண்டு வீட்டிலேயே செய்யலாம். அதற்கும் எதிர்ப்பு வரும். எதிர்த்து நின்று, சவாலை முறியடித்து, முன்னேற்றத் தைக் காண்பீர்கள். மார்ச், ஏப்ரல், மே மாதங் களில் பத்தாமிடத்தில் கூடுகின்ற கிரகங் களுடன் ஒரு சில நாட்கள் புதனும் நீச்சம் பெற்று, ஆட்சி நீச்ச பங்கம் பெற்று, ஒரு நிபர் யோகத்தை உங்களுக்குத் தரலாம். அதனால் எதிர்பாராத தனலாபம் உண்டு. ஆயினும் சனி யின் பார்வை குருவுக்கு ஏற்படுவது கிரகங் களின் சேர்க்கையால் ஏற்படும் கிரக யுத்தங் கள் இவை காரணமாகக் குடும்பத்தில் மைந் தர்கள் காரணமாகவும் வாழ்க்கைத் துணைவி யின் மெத்தனமும் உங்கள் மனநிலையைச் சங்கடத்தில் ஆழ்த்தலாம். அச்சமயம் சங்கட ஹர சதுர்த்தியன்று விநாயகருக்கு உங்களால் ஆன வழிபாடுகளைச் செய்யுங்கள். உங்க ளுடைய மதாச்சாரியாரிடம் சென்று ஆசி பெறுங்கள். இது எம்மதத்தவருக்கும் இனத்தவ ருக்கும் பொருந்தும். மனோ, காய, வாக்கு களால் உண்மையில் துறவியாக இருக்கும் எந்த ஆன்மீகத் தலைவரும் ஆண்டவனின் பிரதிநிதி யாக நின்று தமது அருட்பார்வையாலும், ஆசி யாலும், தம்மையடைந்தவர்களது வேண்டு கோளுக்கு வெற்றியை வாங்கித் தருவார்கள். அத்துடன் அவர்களுக்கு ஆறுதலும் வாழ்க் கையில் எதிர்பார்த்துத் தவங்கிடந்த மாறுத லும் கிடைத்திடும். நம்பிக் கெட்டவர்களும் இல்லை. நம்பாமல் வாழ்ந்தவரும் இல்லை.

## கடக ராசி :



புனர்பூசம் 4 ஆம் பாதம், பூசம், ஆயில்யம் 1, 2, 3, 4 ஆம் பாதங்கள்.

சென்ற குரு பெயர்ச்சி யின்போது நல்லதொரு காலகட்டம் என எழுதி யிருந்தாலும் அஷ்டமத் துச் சனி சில சிரமங்களைக் கொடுத்து தொழில், மற்றும் வியாபார முன்னேற்றங் களைக் கெடுத்திருப்பார். ஆனால் குரு பார் வையிலிருந்ததால் சுபநிகழ்ச்சிகளைச் செய்து முடித்திருப்பீர்கள். அதனால் சில சாதக பாத கங்கள் ஏற்படலாம். தற்சமயம் இந்த ஆண்டு ராகுவின் பெயர்ச்சி உங்களுக்கு மிகச் சாதக மாக வந்துள்ளது. உங்கள் ராசிக்கு ஒருவிதத் தில் ராகு கேதுக்கள் பகையானாலும் ராகு வின் சஞ்சாரம் இதுவரை உங்களுக்குத் தொழில் முறையில் ஏற்பட்ட தடங்கல்களைக் கட்டாயம் நீக்கியாக வேண்டும். அதுமட்டு மல்ல, சுக்கிர சஞ்சாரம் பெரும்பாலும் உங்க ளுக்கு நன்மை பயக்கும். சுக்கிரன் உச்சமடை

# சரவணா ஸ்டோர்ஸ்

## உயர்தரமான தங்க நகைகள்
## வெள்ளி பாத்திரங்களுக்கு

# செய்கூலி இல்லை

15.02.96
வரை

பட்டு புடவைகளுக்கு
10% தள்ளுபடி

ஜவுளிகள்,
ரெடிமேட் ஆடைகள்,
பாத்திரங்கள்,
T.V., டேப்ரிக்கார்டர்,
ஃபிரிட்ஜ்,
வாஷிங் மெஷின்,
ஃபேன், கிரைண்டர்,
மிக்ஸி, சூட்கேஸ்

**சரவணா ஸ்டோர்ஸ்**

ரெங்கநாதன் தெரு,
தி. நகர், சென்னை 600 017.

ஞாயிறு விற்பனை உண்டு.

L.R.Swami P/P

யும்போதும், ஆட்சிக்கு வரும்போதும் நல்லவை அதிகமாக நடக்கும். இந்த ஆண்டு குரு பெயர்ச்சி சஷ்டாஷ்டக முறையில் இருப்பதைக் கவனிக்க வேண்டும். எனினும் குரு உங்களது பாக்கியஸ்தானமான மேஷத்தையும், விரயஸ்தானமான மிதுனத்தையும் ஜீவனஸ்தானத்தையும் பார்ப்பதால் பலவிதங்களில் நன்மையே ஏற்படும். எனவே, உங்கள் முயற்சியில் வெற்றி உண்டு. செவ்வாய் உச்சம், ஆட்சி பெறும் காலங்களில் மனை ஒன்றின் மூலம் தனலாபம் உண்டு. தரகு, பங்கு மார்க்கெட் இவை சம்பந்தமான விஷயங்களில் நன்மை உண்டு.

எப்படியும் ஜனவரிக்குப் பிறகு முன்னேற்றம் சீராக அமையும். இந்த ஆண்டில் ஏற்படும் இரகப் பெயர்ச்சிகளில் ராகு ஒருவரே உங்களுக்கு நன்மை செய்யக் கூடியவர் என்பதால், அந்தக் கிரகத்திற்குரிய ராகு கால பூஜைகள், விளக்கு ஏற்றுதல் போன்றவற்றைச் செய்யலாம். துர்க்கைக்குரிய நாமாவளிகளையும் தோத்திரங்களையும் படிப்பது நல்லது. ராகு, துர்க்கை ஆகியவர்களுக்கு அர்ச்சனை செய்யலாம்.

## சிம்ம ராசி :



மகம், பூரம், உத்திரம் 1 ஆம் பாதம்.

நல்லதொரு ஆண்டாக இருக்கும். எதிலும் வெற்றிநடை போடுவீர்கள். ஜாதகத்தில் குரு நல்ல இடத்தில் இருந்து, அவர் சுக்கிரனையும் அல்லது தனது ராசியையும் பார்த்தாரானால் உங்களைச் சூழ்ந்துள்ள சில தோஷங்கள் கண்டிப்பாக விலகும். இது குறிப்பாக அரசியல், சமூகம், அரசுப் பணி, வங்கிப்பணி ஆகிய துறைகளில் உள்ளவர்களுக்கு நன்கு பொருந்தும். 7 இல் உள்ள சனி, மார்ச் மாதவாக்கில் மீனத்திற்குப் போகும்போது நல்லதையே செய்வார். 8 இல் இருந்தாலும், 8-க்கு உடைய குரு ஆட்சியில் உள்ளதைப் பார்க்க வேண்டும் [illegible]டன் குரு மேஷம், மிதுனம், சிம்மம் [illegible]யவற்றைப் பார்ப்பதால் கவலையே தேவையில்லை. அரசியல் செல்வாக்கு பெறும் வண்ணம் தேர்தல் முடிவுகள் உங்களுக்குச் சாதகமாக அமையும். எனவே, இதுவரை இருந்த வியாதி, கூட இருந்தவர்களால் ஏற்பட்ட சங்கடங்கள் இவை விலகி வாழ்க்கையில் சுபநிகழ்ச்சிகள் ஏற்படும். உங்களது பொது வாழ்க்கையிலும் சரி, அல்லது உங்களது சொந்த வாழ்க்கையிலும் சரி, உன்னதமான கட்டம் ஆரம்பிக்கும்.

ராகு, கேதுக்கள் சில அவதூறுகளையும், சில்லரைத் தொல்லைகளையும் தரப் பார்த்தாலும், குரு உங்கள் இராசிநாதனின் வீட்டைப் பார்க்கிறாரே, அதுவே போதும்! இந்த ஆண்டு உங்களது வெளிவட்டாரப் பழக்கங்கள் அதிகமாகும். ஒரு பாராட்டுப் பத்திரமோ, நற்சான்றிதழோ உங்களது கடந்த கால சேவைக்காகப் பெறுவீர்கள். இது எத்துறையினருக்கும் பொருந்தும். நீண்ட நாள் லட்சியம் ஒன்று இந்த ஆண்டின் மத்தியில் நிறைவேறும். நீங்கள் எந்தத் துறையில் ஈடுபட்டிருக்கிறீர்களோ, அதில் நீங்கள் நீடித்து நிலைத்திருப்பதற்கான சவால் ஒன்றை மேற்கொண்டு அதில் உங்களது திறனைப் பிறர் அறியும்படி செய்வதற்காகத் திருப்புமுனை ஒன்று இந்த ஆண்டில் ஏற்படும். எனவே, இந்த ஆண்டில் நடக்க இருக்கும் சம்பவங்கள் உங்கள் வாழ்வில் மறக்க முடியாததொரு நிலையை உருவாக்கும். பொருளாதாரத்தில் ஏற்றத்தாழ்வுகள் இருப்பினும், அதனால் உங்கள் அந்தஸ்துக்கோ, பெயருக்கோ எந்தவிதப் பாதிப்பும் இராது. தொழிலில் மாற்றம் ஏற்பட்டாலும் அதனால் ஏமாற்றம் இருக்காது.

## கன்னி ராசி :



உத்திரம் 2, 3, 4 ஆம் பாதங்கள், ஹஸ்தம், சித்திரை 1, 2 ஆம் பாதங்கள்.

மார்ச் மாதம் வரை உங்கள் ராசிக்கு சனீஸ்வரன் அருள் நன்கு அமைந்துள்ளதானாலும், எட்டாமிடத்தையும் உங்கள் ராசிநாதனின் மற்றொரு வீடான மிதுனத்தையும் குரு பார்ப்பதாலும் இந்த குரு பெயர்ச்சியால் அதிகம் பாதிப்பு இராது. எனினும், 4 இல் குரு இருப்பதால் மனமகிழ்ச்சிக்கும், பணத்திற்கும் பங்கம் வரும் எனும் கோட்சார வழிப்படி சற்று சிரமம் ஏற்பட்டாலும் குரு ஆட்சி வீட்டில் இருப்பதால் பெரியதொரு பாதிப்பு ஏதும் ஏற்பட்டுவிடாது. கவலைப்பட வேண்டாம். இந்த ஆண்டில் உங்களுக்குக் கால சர்ப்பயோகம் எனப்படும் நிலை சந்திர சஞ்சாரத்திற்கு ஏற்ப நிகழும். அச்சமயங்களில் ஏற்றத்தாழ்வுகள் எத்துறையினருக்கும் ஏற்படலாம். பிப்ரவரி, மார்ச், ஏப்ரல், மே முடிய பலவிதங்களிலும் கவனமுடன் செயல்படுவது நல்லது. மாணவர்கள் நன்கு கவனத்துடன் கருத்தூன்றிப் படிப்பது அவசியம். சுக்கிரன், மற்றும் செவ்வாய், சூரியன் ஆகியவர்கள் உச்சம் பெறும் காலங்களில் வீடு, வாகன யோகம் ஏற்படலாம். பதவி உயர்வும் கிடைக்கும். சனீஸ்வரனது பரிபூரண அருள் மார்ச் மாதம் வரை இருப்பதால் நல்ல தசாபுக்திகள்

நடைபெறுபவர்களுக்கு நன்மை உண்டு. தசாபுக்திகள் சாதகமாக இல்லாதவர்களுக்கு எந்தவிதப் பாதகமும் ஏற்படாமலிருக்க வைணவத் தல யாத்திரை ஒன்றை மேற்கொள்வது நல்லது. அல்லது வீட்டில் விஷ்ணு ஸ்தோத்திரம் படிப்பதும் அல்லது கேட்பதும் நல்லதே. முடிந்தால் ஸ்ரீ சுதர்ஸன ஹோமம் ஒன்றைச் செய்யுங்கள். கிருஷ்ணகிரிக்கு அருகில் உள்ள ஸ்ரீ வேப்பனப்பள்ளி இராமரை தரிசனம் செய்துவிட்டு வாருங்கள். இந்த ஆண்டில் யாருக்கும் எதற்காகவும் எந்தவித உத்தரவாதமும் தந்துவிட வேண்டாம். நான்கு பேர் மத்தியில் பேசும்போதும் நாக்கைக் கட்டுப்பாட்டுடன் வைத்திருப்பது நல்லது. தொலைதூரப் பிரயாணங்களை ஜூன் மாதத்திலிருந்து சற்று ஒத்தி வைப்பது நல்லது.

## துலா ராசி :



சித்திரை 3, 4, ஆம் பாதங்கள், சுவாதி, விசாகம் 1, 2, 3 ஆம் பாதங்கள்.

மூன்றில் உள்ள குரு ஆட்சியில் உள்ளதால் செய்யும் தொழில், அல்லது உத்தியோகம் பற்றிய கவலை தேவையில்லை. எனினும் நீங்கள் தொடங்கும் செயல்களில் ஆரம்பத்தில் தடங்கல்கள் வந்தாலும் 6 இல் உள்ள கேது, கடைசியில் உங்களுக்குச் சாதகமாகவே அனைத்தையும் முடித்துத் தருவார். மார்ச் மாதத்திற்குப் பிறகு சனீஸ்வரனது அருள் உண்டு. தொழிலில் முன்னேற்றமும், சிந்தனையில் ஒரு தெளிவும், செய்யும் முயற்சிகளில் முழு வெற்றியும் கிடைக்கும். சுக்கிரன் உச்சம் பெறும் சமயம் சுபநிகழ்ச்சிகள் நடக்கும். அரசுப் பணியில் உள்ளவர்களுக்குச் சற்று வேலைப்பளு கூடுதலாகும். நியாயம், நேர்மை என்பதை வாயளவில் சொல்லாமல், செயல் வடிவத்தில் காட்ட வேண்டிய காலகட்டம். ஜாதகத்தில் சுக்கிரன் ஆட்சியிலிருந்து அவனது தசாபுக்தி நடப்பவர்களுக்கும் அதுபோலவே குருதசை நடப்பவர்களுக்கும் கூடுதலான நன்மையே உண்டு. வங்கி போன்ற நிதி நிறுவனங்களில் மிகவும் பொறுப்பு வாய்ந்த பதவிகளில் இருப்பவர்கள் நிதி சம்பந்தமான கோரிக்கைகளை நன்கு பரிசீலனை செய்தே முடிவெடுப்பது நல்லது. அதுபோலவே காவல் துறையினரும் கவனமுடன் செயலாற்றுதல் வேண்டும். உங்கள் பதவிக்குப் பலவிதங்களிலும் சவால்கள் வரக்கூடிய நேரம். குறிப்பாக அரசியல்வாதிகள் மிகவும் விழிப்புடன் இருக்க வேண்டிய நிலை ஏற்படும். இந்த இராசியில் பிறந்து அரசியலில் நல்ல பதவியிலோ, அல்லது வெகுஜன செல்வாக்கு பெற்ற நிலையிலோ உள்ளவர்கள் உங்கள் பெயருக்குக் களங்கம் ஏற்படும் வண்ணம் எந்த நிகழ்ச்சியும் நடைபெறாது கவனித்துக் கொள்வது நல்லது. இல்லையேல் உங்கள் முயற்சிக்கு முட்டுக்கட்டை உண்டாகி, ஓரம் போக வேண்டிய நிலை வரலாம். நாமக்கல் ஆஞ்சநேயரையோ அல்லது ஆதிபராசக்தியையோ முன் வைத்து உங்கள் முயற்சியைத் தொடங்குங்கள். வெற்றி கிடைக்கும். இந்த குரு பெயர்ச்சி உங்களுக்கு ஏதோ ஒரு விதத்தில் மனநிம்மதியைக் குறைத்தாலும், அடுத்துவரும் குரு பெயர்ச்சியில் குரு அனைத்தையும் உங்களுக்குச் சாதகமாகவே முடித்துத் தருவார். விசாகத்தில் பிறந்துள்ளவர்களுக்கு நன்மை கூடுதலாகும்.

## விருச்சிக ராசி :



விசாகம் 4 ஆம் பாதம், அனுஷம், கேட்டை 1, 2, 3, 4 ஆம் பாதங்கள்.

இந்த ராசியில் பிறந்துள்ள நீங்கள் சற்று விரிவானதொரு உலக ஞானத்தை அறிந்தவர்கள். பிறர் துன்பத்தைக் கண்டு பொறுக்க மாட்டீர்கள். உதவியும் செய்வீர்கள். அதனால் உபத்திரவமும் பெறுவீர்கள். அத்தகைய உங்களுக்கு இதுவரை ஏற்பட்ட குரு பெயர்ச்சி காலங்களில் எதிர்பார்த்த இனங்களில் தோல்வியைத்தான் தழுவி இருப்பீர்கள். ஆனால் தற்போது அத்தகைய நிலைமை மாறி அனைத்து முயற்சிகளிலும் வெற்றிக் கனியைச் சுவைப்பீர்கள். இடமாற்றமோ, பதவி உயர்வோ, அதனால் தனலாபமோ கிடைக்கும். குடும்பச் சூழ்நிலையைப் பொறுத்து உங்களுக்குச் சில மன சஞ்சலங்களைக் கேது தந்தாலும் ராகு அதைச் சரிசெய்துவிடுவார். எந்தவிதத்திலாவது தனலாபத்திற்கு இடமுண்டு. அது பங்கு மார்க்கெட் மூலமும் வரலாம். அல்லது ஏதேனும் ஏஜென்சி மூலமும் வரலாம். உங்கள் இராசியின் அதிபர் செவ்வாய். எனவே, சகோதரர்களால் ஏற்பட்ட தொல்லைகள் குறையலாம். செவ்வாய் உச்சமடையும் சமயம் உங்கள் சகோதரர்கள் சம்பந்தப்பட்ட சுபநிகழ்ச்சிகள் நடைபெறும். அது கிரகப் பிரவேசமோ, அல்லது திருமணமாகவோ கூட இருக்கலாம்.

குழந்தைகளைப் பற்றிய கவலை வேண்டாம். அவர்கள் நன்முறையில் கல்வியில் தேர்ச்சி பெறுவார்கள். குறிப்பாக இதுவரை இருந்த மெத்தனப் போக்கோ ஏமாற்றமோ இந்த ஆண்டு ஏற்பட நியாயமில்லை. ஏதேனும் ஒரு சாதனையை நிகழ்த்துவீர்கள். அத



# பார்க் டவுன்

## பெனிபிட் பண்ட் லிமிடெட்

மத்திய அரசால் அங்கீகரிக்கப்பட்ட நிதி நிறுவனம். துவக்கம் 1985 Post Box No: 2806

223, தங்க சாலை, (கந்த கோட்டம் அருகில்) பார்க் டவுன், சென்னை-3 போன்: 582676, 564354

கிளை அலுவலகங்கள்: 2 கிழக்கு மாடவீதி, திருவான்மியூர், சென்னை-41 போன் 413582, 416417

P-995, இரண்டாவது அவென்யு, 12-வது மெயின்ரோடு ஜங்ஷன், அண்ணாநகர், சென்னை-40 போன் 6262656, 6280750



### பிக்சட் டிபாசிட்

| 46 நாள் | 90 நாள் | 6 மாதம் | 1 ஆண்டு | 2 ஆண்டு | 3 ஆண்டு | 4 ஆண்டு | 5 ஆண்டு * |
|---|---|---|---|---|---|---|---|
| 13% | 14% | 15% | 17% | 18% | 18.5% | 19% | 20% |

**21%** 5 வருடங்கள் ரூ.50,000/- அதற்கு மேலும்

### PB பாண்டு

| முதலீடு | காலம் | திரும்பப் பெறும்தொகை |
|---|---|---|
| ரூ.25,000 | 60 மாதம் | ரூ.70,000 |

### குழந்தைகள் கல்வி நலத்திட்டம்

L.K.G. முதல் கல்லூரி தொடக்கம் வரை

வைப்புத் தொகை ரூ. 5,100/-

3-ஆம் ஆண்டு நிறைவிலிருந்து தொடர்ந்து 12 ஆண்டுகள் ரூ.500/- பெறலாம். திட்ட டெபாசிட் காலத்திலிருந்து 16, 17-வது ஆண்டுகளில் தலா ரூ.1,000/- வீதமும். 18-ம் ஆண்டு துவக்கத்தில் ரூ.75,000/-ம் வழங்கப்படும்.

நலத்திட்டத்தின் 5% மாணவர்களுக்கு +2 அரசுத் தேர்வு மதிப்பெண் அடிப்படையில் ரூ.25,000/- பரிசாக ஒவ்வொருவருக்கும் நிதி நிறுவனம் வழங்கும்.

திட்டத்தின்பயனை உங்கள் மழலைச் செல்வங்களுக்கு வழங்கி மன நிம்மதி பெறுவீர்! மகிழ்ச்சி அடைவீர்!!

### கனகதாரா டிபாசிட்

ரூ.50,000/- முதலீடு செய்வீர்
10ஆம் ஆண்டு முடிவில் ரூ.50,000/- பெறுவீர்
அடுத்த 20ஆம் ஆண்டு முடிவில்
ரூ.1 கோடி பெறுவீர்

### காமதேனு மாபெரும் திரும்பப் பெறும் திட்டம்

| டிபாசிட்திட்டம் 15 ஆண்டுகள் | 5-ம் ஆண்டு நீங்கள் பெறும் தொகை | 10ம் ஆண்டு நீங்கள் பெறும் தொகை | 15ம் ஆண்டு பெறும் தொகை |
|---|---|---|---|
| Rs.6,320 | Rs.6,000 | Rs.6,000 | Rs.56,320 |

### வெகுமதி முதலீட்டுத் திட்டம் - II

ரூ.3450/- செலுத்துவீர்.
252 மாதங்கள் நிறைவில்
ரூ.2 லட்சம் பெறுவீர்.

**சேமிப்பு திட்டம் 10% P.a.**

### செல்வக்களஞ்சியம்

| டிபாசிட் | காலம் | வருவாய் |
|---|---|---|
| Rs.7,500 | 15 Yrs | Rs.1,25,000 |
| Rs.9,000 | | Rs.1,50,000 |

### பொற்குவியல் திட்டம்

| டிபாசிட் | காலம் | வருவாய் |
|---|---|---|
| மாதா மாதம் ரூ.100/- | 25 Yrs | Rs.3,00,000 |

### மறு முதலீட்டுத் திட்டம்

உங்கள் தொகை 45 மாதங்களில் இரட்டிப்பு ஆகும்

| டிபாசிட் | 12 மாதம் | 24 மாதம் | 45 மாதம் | 60 மாதம் |
|---|---|---|---|---|
| Rs.1,000 | Rs.1,184 | Rs.1,430 | Rs.2,000 | Rs.2,535 |

பென்ஷனர் நலத்திட்டம் 20% P.a.

தங்க நகை கடன்

Rs. 3,000 PER 10 GRAM

னால். பொருளாதார நிலையில் சற்று கணிசமான முன்னேற்றம் உண்டு. பதவி உயர்வு காரணமாக இடப்பெயர்ச்சி உண்டு. ஆனால் அது சற்று மனநிம்மதியைக் கெடுக்கவும் செய்யலாம். அந்த அளவுக்குக் கேது பாதகமான நிலையில் இருக்கிறார். சனியும் மீனத்திற்குச் சென்றதும் சில சிரமங்களைத் தரலாம். எனவே யோசித்து அதன் பின்னரே சில இனங்களில் முடிவெடுப்பது நல்லது. ஸ்ரீ சுப்பிரமணிய புஜங்கம், பழனி விஜயம் மற்றும் கணபதி ஹோமம் இவை நன்மையைப் பெற வாய்ப்பினைத் தரும். இவ்வாண்டில் விளையாட்டில் நாட்டம் கொண்டோருக்கு நல்லதொரு பரிசையும், பாராட்டையும் தரும். தாம் பத்திய உறவு தாமரை இலை தண்ணீர் போலத்தான் அமையும். தோஷத்தைத் தரும் செவ்வாயின் வீட்டில் சந்திரன் நீச்சம் பெற்றுள்ளதால் மனைவியின் ஒத்துழைப்பு இல்லையெனில் குடும்பத்தின் முன்னேற்றம் தடைப்படும். முருகனது அருள் பெற அவனுக்கு அபிஷேக ஆராதனைகளைச் செய்வது நல்லது.

## தனுசு ராசி :



மூலம், பூராடம், உத்திராடம் 1 ஆம் பாதம்.

இராசிநாதனாகிய குரு ஆட்சியில் இருக்கிறார். ஆயினும் பாம்புக் கிரகங்கள் 4, 10 ஆகிய கேந்திரங்களில் உள்ளதையும் கவனிக்க வேண்டும். இராசிநாதனுக்கே கேந்திராதிபத்திய தோஷம் வேறு. மார்ச் வரை சனி உதவுவார். 4 வது கேந்திரமாகிய மீனத்தில் ஐந்து கிரகங்களின் சேர்க்கை சற்று சஞ்சலத்தைத் தோற்றுவிக்கலாம். புதன் நீச்சம், கேது சேர்க்கை, சனியின் தொடர்பு, அங்காரகன் அங்கே கூடுதல் ஆகிய நிலை தனிப்பட்டவர்கள் வாழ்வில் சில வேதனைகள் ஏற்படக் காரணமாகலாம். ஆனால், பொதுவாக உலக நிலை சற்று பாதிக்கப்படலாம். எனவே, கோளறு பதிகத்தைப் படிப்பது சிறந்ததாகும். சனியின் பார்வை உங்கள் ராசிக்கு ஏற்படும் போது திருநள்ளாறு சென்று வரலாம். தனுர் ராசி என்பதால் இராமருடைய பாதம் பட்ட திருத்தலங்களுக்குச் சென்று வரலாம். சேலத்தின் அருகில் உள்ள அயோத்தியாப்பட்டினம் கோதண்ட ராமர் சன்னதி கிருஷ்ணகிரியைச் சார்ந்த வேப்பனப்பள்ளி, மற்றும் அவரை இஷ்டதெய்வமாகக் கொண்ட மந்திராலய மகான் சன்னதிகள், மற்றும் ஆஞ்சநேயர் கோயில் சென்று மனமார உலக க்ஷேமத்திற்கும் உங்கள் நலனுக்கும் சேர்த்தே வழிபடலாம். அதனால் உங்களுக்கும் உங்கள் குழந்தைகளுக்கும் நல்ல வழிபிறக்கும். குரு ஆட்சியில் இருப்பது உங்கள் குழந்தைகளின் முன்னேற்றத்திற்கு உறுதி அளிக்கும். எனவே, அவர்களைப் பற்றிய அனாவசியக் கவலை வேண்டாம். ஆனால் ஏகதிசை, ஏகராசி உள்ள குடும்பத்தில் அனைவருக்குமே சற்று சஞ்சலத்தைத்தான் தரும். அதற்குப் பரிகாரமாக குருவுக்கும், சனிக்கும் பரிகாரம் செய்வது நல்லது. இதை ஆவணி மாதவாக்கில் செய்யலாம். மற்றபடி ஆன்மீகம், இலக்கியம் ஆகிய துறைகளில் உள்ளவர்களுக்கு நல்லதொரு காலகட்டம்.

## மகர ராசி :



உத்திராடம் 2, 3, 4 ஆம் பாதங்கள். திருவோணம், அவிட்டம் 1, 2 ஆம் பாதங்கள்.

சற்று சோதனை மிகுந்த நிலைதான். விரயத்தில் குரு. 2 இல் சனி. ஆனால் இரண்டு கிரகங்களும் தத்தம் வீட்டிலேயே இருப்பதையும் கவனிக்க வேண்டும். ஆட்சியில் இருந்தால் கெடுபலன்கள் குறையுமே. மூன்றில் உள்ள கேது பலவிதங்களில் நன்மை கிடைக்க வழி செய்வார். எனவே விநாயகரைத் தொழுவது, அவருக்கு ஹோமம் செய்வது, நவக்கிரக ஹோமம் நடத்துவது ஆகிய காரியங்களைச் செய்யலாம். அத்துடன் மார்ச் மாதத்தில் ஒன்று கூடும் கிரகங்களால் உங்கள் ராசி அந்தக் காலகட்டத்தில் உங்கள் வாழ்வில் எதிர்பாராத நன்மைகளைப் பெற்றுத் தரும். எனவே கவலை தேவையில்லை. சுக்கிரன் உச்சம் பெறும் காலத்தில் வீடு வாங்கும் யோகம் உண்டு. குழந்தைகளால் சில விரயமும் ஏற்படும். சுபவிரயத்திற்கும் இடமுண்டு. அந்தந்த மாதத்தில் கூற இருக்கும், பரிகாரங்களைச் செய்யவும். கூட்டு வியாபாரம் தவிர்க்கப்பட வேண்டும். அதையே ஆவணிக்குப் பிறகு செய்யலாம். நடிகைகள் அவசரப்பட்டு மற்றவர்களை நம்பிவிட வேண்டாம். இது பொதுவாக எல்லாத் துறையினருக்கும் பொருந்தும்.

குரு மாற்றம் முதல் மூன்று மாதங்களுக்கு மந்தமாக இருக்கும். அதன்பின் ஆறு மாதங்களுக்கு நல்ல பலன் உண்டு. மீண்டும் சற்றுக் கவனத்துடன் செயலாற்ற வேண்டிய காலகட்டம். ஏற்றுமதி வியாபாரம், புதுத் தொழில் ஆரம்பித்தல், கட்டடம் கட்ட ஏற்பாடு செய்தல் போன்றவற்றைத் தவிர்த்தல் நன்று. வருடத்தின் முற்பகுதியைவிட 2 ஆம் பகுதி நல்லதொரு சூழ்நிலையை உருவாக்கும். நிதி, நீதிப் பொறுப்பில் உள்ளவர்கள் அத்துறைகளில் பணியாற்றுபவர்கள் கவனத்துடன் செயலாற்

றுங்கள். பொருளாதாரத் தட்டுப்பாடு உண்டு. உறவினர் ஒருவரிடம் பட்ட கடனுக்காக, கருத்து வேறுபாடு ஏற்பட்டு உங்கள் உறவு முறையைப் பாதிக்கலாம். இந்தக் காலகட்டங்களில் அளவுக்கு மீறிய நிதானமும், பொறுமையும், சொற்களை அளவுடன் உபயோகிக்கும் குணமும் மிகமிக அவசியம். நமக்குத் தெரிந்தே நம்மிடம் குறைகளை வைத்துக் கொண்டு அவற்றை நாமே மாற்றிக் கொள்ள முடியும் எனத் தெரிந்தும், அதை மாற்றாமல் எந்த தெய்வ சன்னிதானங்களிலும், அல்லது ஸ்தோத்திரங்களிலும் பரிகாரம் காண முடியாது அல்லவா?

## கும்ப ராசி :



அவிட்டம் 3, 4 ஆம் பாதங்கள், சதயம், பூரட்டாதி 1, 2, 3 ஆம் பாதங்கள்.

சுமார் ஆறுமாத காலமாக அளப்பறிய துன்பத்தையும் மனவேதனையையும் அனுபவித்த உங்களுக்கு இந்த குரு பெயர்ச்சியால் நன்மை உண்டு. சென்ற ஆண்டைப் போலவே மார்ச் முதல் மூன்று மாதங்களுக்குச் சில சோதனைகளை எதிர்கொள்ள வேண்டியிருக்கும். எனினும் குரு 11 இல் இலாபஸ்தானத்திலேயே இருப்பது உங்களுக்கு ஒரு கவசம் போன்றதாகும். அதனால் விபரீதமாக ஏதும் நடந்துவிடாது என்று கூறலாம். அத்துடன் ஆகஸ்டு முதல் உங்களுக்கு எல்லா விதங்களிலும் வெற்றி ஏற்படும். வெளிநாடு சென்று வரும் வாய்ப்பு கூட ஏற்படலாம். குழந்தைகளைப் பற்றிய கவலை மறையும். பூரட்டாதி நட்சத்திர நாயகனாகிய குரு முதல் மூன்று பாதத்தில் பிறந்துள்ளவர்களுக்கு இலாபத்தில் இருப்பதும் நல்லதே. ஏனெனில்

துள்ளவர்களுக்குச் சோதனைகளும் ஏற்படும். அதேசமயம் நல்ல சூழ்நிலையும் உருவாகும். சனீஸ்வர ஸ்தோத்திரம், மற்றும் துர்க்கா ஸ்தோத்திரத்தைப் படிப்பதால் பயன் உண்டாகலாம். புண்ணியஸ்தல யாத்திரை ஒன்று மேற்கொள்ளுவீர்கள். அது வட இந்திய யாத்திரையாகக் கூட அமையலாம்.

## மீன ராசி :



பூரட்டாதி 4 ஆம் பாதம், உத்திரட்டாதி, ரேவதி 1, 2, 3, 4 ஆம் பாதங்கள்.

பூரட்டாதி நான்காம் பாதத்தில் பிறந்துள்ளவர்களுக்குக் கூடுதலான நன்மையுண்டு. அதே சமயம் உங்கள் இராசி நாயகனாகிய குரு 10 இல் கேந்திராதிபத்திய தோஷத்தைப் பெறுகிறார். அத்துடன் ராகு கேதுக்களுக்கு மத்தியில் இருக்கிறார். கோட்சார ரீதியாக இந்த ஆண்டு பூராவும் இந்த நிலை உண்டு. அத்துடன் உங்கள் ராசியில் 5 கிரகங்கள் கூடுகின்ற காலம் சற்று மந்தமானதொரு நிலையை அடையும். தொழிலிலும் பொருளாதார நெருக்கடி ஏற்பட்டுச் சரியாகும். உடல்நிலை கூட ஒரு நாள் இருந்தது போல மறுநாள் இருக்காது. வாங்கிய இடத்தில் கடனைத் திருப்புவதில் சற்று மனவேதனை கூட ஏற்படலாம். வீடு மனை வாங்கும் யோகமும் உண்டு. அதே சமயம் அதன் பயனாக அலைச்சலும் ஏற்படும். சற்று விரயமும் உண்டு. சர்வ ஜாக்கிரதையுடன் நிதி நிறுவனத்தில் பணிபுரிபவர்கள் பணத்தைப் பாதுகாக்க வேண்டும். சிறு அலட்சியம் கூடப் பெரும் குழப்பத்தை உண்டாக்கலாம். அதுபோலவே அரசியல், பத்திரிகைத் துறை, காவல் துறையில் உள்ளவர்கள் நன்கு கவனித்துச் செயலாற்ற வேண்

**சிறு குழந்தைகள் முதல் வயதான பெரியவர்கள் வரை விரும்பிச் சாப்பிடும் டிபன் என்ன என்று கேட்டால் பெரும்பாலும் "தோசை" என்று பளிச்சென பதில் வரும். எப்போதும் உளுந்து மாவு தோசை. கோதுமை மாவு தோசை என்றில்லாமல் பல விதங்களில் எளிதாகவும் சிக்கனமாகவும் செய்து பாராட்டைப் பெறலாம்.**

**புழுங்கலரிசியை மட்டும் ஊற வைத்து களைந்து கல் நீக்கி கிரைண்டரில் நைசாக அரைக்கவும். காலையில் அரைத்தால் இரவும், முதல் நாள் மாலை அரைத்தால்**

# தோசையோ தோசை!



**மறுநாள் காலையும் கீழ்கண்ட வகை தோசைகளை செய்யலாம். ஃப்ரிட்ஜில் வைப்பவர்கள் ஒரு 6 அல்லது 7 மணி நேரம் கழித்து உள்ளே எடுத்து வைக்கலாம்.**

## வெஜிடபிள் தோசை :

½ கிலோ அரிசி அரைத்த மாவு என்றால், 1 (அ) 2 பெரிய வெங்காயம் மெல்லியதாக அரியவும். 1 சின்ன கேரட், 1 துண்டு சௌசௌ, 1 துண்டு பீட்ரூட், இவற்றைத் துருவவும். 4 பச்சை மிளகாயை நீளவாக்கில் வகிரவும். சிறிது எண்ணெய் விட்டு கடுகு தாளித்துக் கொண்டு வெங்காயம் போட்டு பின் எல்லாவற்றையும் போட்டு வதக்கவும். இவற்றை உப்புடன் மாவில் சேர்த்துக் கரைக்கவும். சிறிது தேங்காய்த் துருவலும் சேர்க்கலாம். தோசை வார்த்து திருப்பி போட்டு சிறிது எண்ணெய் விட்டு எடுக்க காய்கறி சாப்பிடாத குழந்தை கூட விரும்பி உண்ணும்.

## சீரக தோசை :

½ கிலோ அரிசி அரைத்த மாவிற்கு ¼ ஸ்பூன் சீரகம் ஒன்றிரண்டாக பொடித்துப் போடவும். (நைசாகி விட்டால் மருந்து வாசனையடிக்கும்) 1 மூடி தேங்காய் திருவிப் போடவும். உப்பு தேவைக்கேற்ப (½ உப்பாக இருந்தால் சிறிது இனிப்பாக தோசை சுவையாக இருக்கும்) சேர்த்து தோசை மாவை விட சற்று நீர்க்க கரைத்து எண்ணெய் தடவிய கல்லில் மெல்லிய தோசை வார்க்கவும். சிறிது எண்ணெய் விடவும். திருப்பிப் போட்டு நன்றாக முறுகலாக எடுத்து சூடாக பரிமாறவும். தேங்காய் முற்றியதாக இருந்தால் சுவையாக இருக்கும்.

## கார தோசை :

½ கிலோ அரிசி அரைத்த மாவு என்றால் 100 கிராம் சின்ன வெங்காயம், 1 பெரிய வெங்

காயம் நைசாக அரிந்து பச்சையாக அல்லது லேசாக வதக்கி மாவில் சேர்க்கவும். 1 டேபிள் ஸ்பூன் கடலை மாவு, 1 டீஸ்பூன் மிளகாய்த் தூள் (விருப்பத்திற்கேற்ப கூட்டிக் குறைத்துக் கொள்ளலாம்)- சிறிது பெருங்காயப் பவுடர், கறிவேப்பிலை நறுக்கியது, தேவைக்கேற்ப உப்பு எல்லாம் சேர்த்துக் கலந்து தோசை மாவை விட சற்று நீர்க்க கரைத்து எண்ணெய் தடவிய கல்லில் தோசையை மெல்லியதாக வார்க்கவும். எண்ணெய் விட்டு வெந்ததும் திருப்பி விட்டு 1 ஸ்பூன் எண்ணெய் விட்டு நன்கு முறுகலாக எடுத்து பரிமாற அடையைத் தோற்கடிக்கும் ருசியுடன் இருக்கும். சற்றே கனமாக வார்க்க மிருதுவாக இருக்கும். சூடாக சாப்பிடவும்.

### ஆப்ப தோசை :

½ கிலோ அரிசி அரைத்த மாவு என்றால் 1 பெரிய முற்றிய தேங்காய் மூடியை துருவி மிக்ஸியில் விழுதாக அரைத்து மாவில் கலக்கவும். தேவையான உப்பு (விரும்பினால் சிறிது ஜீனி சேர்த்து) போட்டு தோசை மாவு பதத்தை விட சற்று அதிகமான நீர் சேர்த்துக் கரைக்கவும். (அதிகம் நீர் விட்டாலும் சுடவராது) எண்ணெய் தடவிய கல்லில் மாவை தோசையாக வார்க்கவும். ரொம்ப மெலிதாக இல்லாமல் திட்டமாக வார்க்கவும். லேசாக எண்ணெய் சேர்த்தால் போதும். நிழல் தீயில் மூடி வேகவிடவும். வெந்ததும் திருப்பாமல் அப்படியே எடுத்து விடவும். மல்லிகைப்பூ மாதிரி ஜோராக இருக்கும். தேங்காய்ப் பாலுடன் சாப்பிட்டுப் பார்த்தால் பின்னர் தனியாக ஆப்ப மாவே அரைக்க மாட்டீர்கள்.



### கோதுமை தோசை :

½ கிலோ அரிசி அரைத்த மாவு என்றால் 100 கிராம் கோதுமை மாவு (விரும்பினால் சற்று அதிகம் சேர்க்கலாம்) சேர்த்து உப்புப் போட்டுக் கரைக்கவும். கடுகு தாளித்து நைசாக நறுக்கிய வெங்காயம் 100 கிராம், 4 நறுக்கிய பச்சை மிளகாய் வதக்கிப் போட்டு தோசை மாவை விட சற்று நீர்த்த பதத்தில் மாவு கரைத்து தோசை வார்க்கவும். வித்தியாசமான புளிப்பும் இனிப்பும் கலந்த தோசையாக இருக்கும். இதனை தனியே ½ கிலோ புழுங்கலரிசி, 1½ ஆழாக்கு கோதுமையை ஊறவிட்டு அரைத்து மறுநாள் (காலையில் அரைத்தால் இரவும்) தோசை சுட இன்னும் சுவையாக இருக்கும்.

### புளி தோசை

½ கிலோ அரிசி அரைத்த மாவு என்றால்

ஒரு சிறு எலுமிச்சம்பழ அளவு புளி எடுத்து ஊற வைத்து கரைத்து, வடிகட்டி மாவில் சேர்க்கவும். கடுகு, 5 சிவப்பு மிளகாய் கிள்ளி தாளித்து, பெருங்காயப் பவுடர் சிறிது, மஞ்சத் தூள் சிறிது, தேவையான உப்பு, சிறிதளவு நறுக் கிய கறிவேப்பிலை எல்லாம் மாவில் கலந்து தோசைமாவை விட சற்றே நீர்க்க கரைக்கவும். எண்ணெய் தடவிய கல்லில் மெல்லிய தோசை வார்த்து எண்ணெய் விடவும். வெந்ததும் திருப்பி லேசாக எண்ணெய் விட்டு முறுகலான தும் எடுக்கவும். மஞ்சள் நிறத்துடன் புளிப்பு உரைப்பாக நன்றாக இருக்கும். (விரும்புபவர் கள் கடலைப் பருப்பும் தாளித்து ½ மணி நேரம் ஊறியபின் தோசை வார்க்கலாம்.) முதல் முறை சுடும் போது புளி கரைசல் அளவு அதிக மானால் கூட வராது. 2 டீஸ்பூன் அரிசி மாவு சேர்த்துக் கொள்ள நன்கு வரும். பிறகு பழக் கத்தில் அவரவர்கள் விருப்பப்படி புளி அளவு தெரியும். புளி தோசை மட்டும் மாவு அரைத்த வுடனே கூட சுடலாம். புளி சற்று அதிகம் சேர்க்க வேண்டும்.

## ஹோட்டல் ரோஸ்ட் தோசை :

அரிசி, உளுந்து 4 : 1 விகிதமோ அல்லது சற்று குறைவாக இருந்தாலோ கூட போதும். ஆனால் இட்லிக்கு கொரகொரப்பாவும் தோசைக்கு என்றால் அரிசி மாவு சற்று நைசாக வும் அரைத்து எடுக்கவும். உப்பு போட்டு கரைத்து மறுநாள் இட்லி மாவை விட சற்று நீர் சேர்த்து கரைத்து, எண்ணெயும் நீரும் கலந்து வைத்துக் கொண்டு அதனை கல்லில் தடவி மாவை எடுத்து மெலிதாக வேகமாக பரப்பவும். உடனே தோசை திருப்பியில் ஒரு முனையி லிருந்து மறு முனைக்கு வழிக்க (அடிப்பக்கம் சமமான வட்டாவினாலும் தேய்க்கலாம்) தோசை சமமாக பேப்பர் மாதிரியாகி விடும். எண்ணெய் சிறிது விட்டு (மூடியும் வேக விட லாம்) வெந்ததும் திருப்பி விட்டு பொன்னிற மாக எடுக்கவும். ஹோட்டல் ரோஸ்ட் போலவே இருக்கும்.

## ரவை தோசை :

ரவையை லேசாக வறுத்து (கை பொறுக்கும் சூடு) மிக்ஸியில் ஒருமுறை அரைக்க மாவாகி விடும். இத்துடன் 1 கரண்டி அரிசி மாவு சேர்த் துக் கரைத்து உப்பு, தாளித்த கடுகு, வதக்கிய வெங்காயம் கறிவேப்பிலையுடன் சற்று நீர்க்கக் கரைத்து உடன் தோசை வார்க்கலாம். ஊற வேண்டிய அவசியமில்லை. மொறுமொறுப் பாக நன்றாக வரும். 1 பங்கு ரவாவுடன் 1 பங்கு அரிசி சேர்த்து மிஷினில் (ரவையை மட் டும் லேசாக சூடு வர வறுத்து) நைசாக அரைத்து வைத்துக் கொண்டால் விரும்பிய போது உடன் கரைத்து முறுகலான தோசை வார்க்கலாம்.

## வெந்தய தோசை :

½ கிலோ புழுங்கலரிசிக்கு 3 டீஸ்பூன் (மட்டமாகத் தட்டி) வெந்தயம் போதும். இரண் டும் சுமார் 2 மணி நேரம் ஊற வைத்து, பின் 5 டீஸ்பூன் வெள்ளை உளுத்தம் பருப்பு சேர்த்து 10 நிமிடம் அளவுடன் அரைத்து விட வேண் டும். வெந்தயம் சற்று குறைவாக இருப்பதால் குழந்தைகள் கசப்பு சுவை தெரியாததால் விரும்பி உண்ணுவர். மெலிதாகவும் கூட வரும். உடலுக்குக் குளிர்ச்சி என்பதால் வாரம் ஒரு முறை செய்யலாம்.

— சாந்தி குமார்

---

என் வீட்டு கிரகப்பிரவேசத்துக்கு ஹோட்டலில் சாப்பாடு ஏற்பாடு செய்திருந்தோம். அவர்கள் அனுப்பிய ஜாமூன்கள் தீர்ந்து, ஜீரா மட்டும் நிறைய நின்று விட்டது. பாழாக்க மனம் வரவில்லை. ஒரு ரொட்டியை வாங்கி, ஓரங்களை வெட்டி எடுத்து விட்டு, வெள்ளைப் பகுதியை பால் ஆடையில் ஊறவைத்து ஒரு டேபிள் ஸ்பூன் மைதா மாவு சேர்த்து நன்கு பிசைந்து, உருட்டி வைத்து, ஒரு மணி பொறுத்து ரீஃபைண்ட் எண்ணெயில் பொரித்து ஜீராவில் போட்டேன். முதல் நாளே என் கணவர் சாப்பிட்டு அசந்து போய்விட்டார். கோவா கிளறிச் செய்வதைவிட ஸாப்ட்டாக, ருசியாக இருந்தது. மறுநாள் திடீரென வந்த விருந்தாளி களுக்குப் பரிமாறிய போது 'இவ்வளவு அருமையாக ஜாமூன் வந்துள்ளதே, பாவம் எவ்வளவு நேரம் கோவா கிளறினாயோ' என்று பாராட்டினார்கள். ரொட்டியில் செய்தது என்று நான் ஏன் வாயைத் திறக்கிறேன்?

— கிரிஜா மகாதேவன்



வலம்புரிசெல்வன்




# இங்கே 'கொத்திரம்' யார்?

ஏன்? 'ஸர் நேம்' என்ற இடத்தில் ஒன்றும் எழுதாமல் விட்டு விட்டீர்கள்" என்று பாதிரி என் நிவேதிதியைப் பார்த்துக் கேட்டார். "பொதுவாக, தமிழ் நாட்டில் இருப்பவர்களுக்கு 'ஸர் நேம்' என்று தனியாக ஒன்றும் கிடையாது. தன் தந்தையின் பெயரின் முதல் எழுத்தையோ அல்லது தன் சொந்த ஊரின் பெயரின் முதல் எழுத்தையோ, அல்லது இரண்டின் முதல் எழுத்தையோ, அதாவது 'இனிஷியல்' எழுதுவதுதான் வழக்கம்" என்று இழுத்தாள் நிவேதிதி. நிவேதிதியின் பிள்ளையை பள்ளிக் கூடத்தில் சேர்ப்பதற்காக அப்ளிகேஷன் பார்ம் எழுதும் பொழுது நடந்தது இது.

"குஜராத்தில் 'ஸர்நேம்' என்பது மிகவும் முக்கியம். அது எழுதாமல் விடக் கூடாது. உங்களுக்குத்தான் இருக்குமே 'ஐயர்', 'ஐயங்கார்', 'மேனன்' என்று. அதில் உங்களுடையது எதுவோ அதை 'ஸர்நேம்' என்ற இடத்தில் எழுதுங்கள்" என்று சொல்லிவிட்டு, மற்ற வேலைகளை கவனிப்பதற்காக வெளியே சென்று விட்டார் பாதிரி. பாதிரி சொன்னவைகள் எல்லாம் ஜாதியைக் குறிக்கும் பெயர்களாயிற்றே எழுதுவதா, வேண்டாமா என்று சிந்தனையில் ஆழ்ந்தாள் நிவேதிதி.

குஜராத்தில் எங்கு சென்றாலும் ரேஷன் கார்டு பதிவு செய்யவோ அல்லது சாதாரணமாக உங்கள் பெயர்களைக் கேட்குமுன் முதலில் அவர்கள் கேட்பது, 'உங்கள் ஸர் நேம் என்ன?' என்றுதான். இந்தக் கேள்வி தமிழ்நாட்டிலிருந்து வருபவர்களுக்குச் சிறிது குழப்பத்தையும், சங்கடத்தையும் உண்டு பண்ணுகிறது.

ஸர் நேம் என்றால் என்ன? அது ஒருவனுடைய பாரம்பர்யத்தைக் குறிப்பதுதானே. புராதன காலத்தில் ஒருவன் தன்னை அறிமுகப்படுத்திக் கொள்ளும் பொழுது, அவன் எந்த ரிஷியின் புத்திரன், அல்லது சீடன், எந்த வேதத்தைச் சேர்ந்தவன், என்ன சூத்திரத்தைக் கற்றுக் கொள்கிறான், அவன் தந்தையின் பெயர், பிறகு தன்னுடைய பெயர் என்று சொல்லி எவ்வளவு அழகாக தன்னை அறிமுகப்படுத்திக் (அபிவாதயே) கொண்டார்கள். பிறகு நாளடைவில் அந்த ரிஷிகளின் பெயரே கோத்திரப் பெயர்களாகி விட்டது. ஒரு விதத்தில் ஒருவனுடைய கோத்திரமும் அவனுடைய பரம்பரையைத்தானே குறிக்கிறது! எனவே 'ஸர் நேம்' என்ற இடத்தில் கோத்திரத்தின் பெயரை

எழுதினால் என்ன என்று தோன்றவே, சிநேகிதியைப் பார்த்து "உங்களுடைய கோத்திரம் என்ன?" என்று கேட்டேன். அவள் என்னை ஒரு விதமாகப் பார்த்துவிட்டு,

"என்ன நான் இப்பொழுதுதான் என் பிள்ளையை பள்ளிக்கூடத்தில் சேர்க்கப் போகிறேன், இதற்குள் அவனுக்குக் கலியாணத்திற்கு என்ன அவசரம், எத்தனையோ வருடங்கள் இருக்கிறது" என்றாள்!

அது இருக்கட்டும், இந்த 'ஸர் நேம்'கள் பலவித காரணங்களால் ஏற்பட்டு இருக்கின்றன. உதாரணமாக யாக யக்ஞம், ஹோமம், விரதம் போன்ற வைதிக காரியங்களில் ஈடுபட்டு அவைகளை முறையாக அனுசரித்து வந்தவர்கள் தீக்ஷிதர் என்று அழைக்கப்பட்டனர். இதுபோன்று வேதங்களை நன்கு கற்றுத் தேர்ந்தவர்கள் முறையே, நான்கு வேதங்களையும் அறிந்தவர்கள் 'சதுர்வேதி', மூன்று வேதங்கள் அறிந்தவர்கள் 'த்ரிவேதி' என்றும் இரண்டு வேதங்களை அறிந்தவர்கள் 'த்விவேதி', ஒரு வேதம் படித்தவர்கள் பொதுவாக 'தவே' என்றும் அழைக்கப்பட்டனர்.




சில 'ஸர் நேம்'கள் அவர்கள் செய்யும் தொழிலிருந்து வந்தவைகள். அவைகள் லுஹார் (கருமான்), மாசி (மீன் பிடிப்பவர்கள் (அ)மீன் வியாபாரம் செய்பவர்கள்), குஜராத்தில் பவஸார், பட்வா, காப்படியா, போன்ற பெயர்கள் - ஒரு காலத்தில் அவர்களின் முன்னோர்கள் துணிகளுக்குச் சாயம் ஏற்றும் தொழில், மற்றும், நூல் நூற்று வியாபாரம் செய்து வந்தவர்களாகவும், துணி வியாபாரம் செய்து வந்தவர்களாகவும் இருந்திருக்கின்றனர். காந்தி - பலசரக்குக் கடை வைத்திருப்பவர்கள். பரீக் (வெள்ளி பொன் போன்றவைகளை மதிப்பிடுபவர்கள்), தர்ஜி (தையல் வேலை செய்பவர்கள்), ஷராப் - அடகு வியாபாரம் செய்பவர்கள்.

முகமதியர்களின் காலத்தில் இருந்து சில ஸர் நேம்கள் தோன்றின. அவை முன்ஷி (கணக்குப் பிள்ளை), இனாம்தார், ஹோரா போன்ற ஸர்நேம்கள் ஹிந்துக்களுக்கு ஏற்பட்டு இருக்கிறது.

குஜராத்தில் சில ஸர் நேம்கள் - ஜீவ ஜந்துக்கள் பசு, பக்ஷி போன்றவைகளின் பெயர்களிலும் இருக்கின்றன. அவைகள் போபட் லால் (கிளி) மங்கோடி (கட்டெறும்பு) ஹாதி (யானை) போன்றவைகள்.

இந்த சந்தர்ப்பத்தில் சில விஷயங்கள் ஞாபகத்திற்கு வருகின்றன. அமெரிக்கா, ஆப்பிரிக்கா போன்ற தேசங்களில் புராதன காலத்தில் ஒவ்வொரு காட்டுவாசியினருக்கும் ஒரு மிருகமோ அல்லது பக்ஷியோ தெய்வங்களாகவும், அதுவே அந்த இனத்தாரின் அடையாளங்களாகவும் இருந்து வந்திருக்கின்றன.

இந்தியாவில் ஒவ்வொரு மாநிலத்திலும் எண்ணில் அடங்கா ஸர்நேம்கள் இருக்கின்றன. ஒருவருடைய ஸர் நேமிலிருந்தே அவர்கள் எந்த மாநிலத்திலிருந்து வந்தவர்கள் என்று கூறிவிடலாம். உதாரணமாக கோகலே, சித்லே, குல்கர்ணி, சுதாகர், தசபுத்ர, அஷ்டபுத்ரா போன்றவைகள் மஹாராஷ்டிர மாநிலத்தைச் சேர்ந்தவைகள். படேல் என்று சொன்னாலே அவர்கள் குஜராத்திக்காரர்கள் என்று சொல்லிவிடலாம்.

ஹிங்குரானி, ஹீர்வானி, குகலானி போன்றவைகள் சிந்திகாரர்களுக்கும் சில பஞ்சாபிகளுக்கும் இருக்கிறது.

இன்ஜினியர், டாக்டர் போன்ற ஆங்கில தொழிற் பெயர்கள் பார்ஸி களுக்கு இருக்கிறது.

முகர்ஜி, பேனர்ஜி, சட்டர்ஜி போன்றவர்கள் வங்க தேசத்தைச் சேர்ந்தவர்கள் என்று சொல்லி விடலாம். 'சுராஜ்மல்' போன்றவை ராஜஸ்தானியர். மாஹூா பாத்ரா, மொஹன்தே, தாஸ் போன்றவை ஒரிஸ்ஸா மாநிலத்தைச் சேர்ந்தவை. மேனன், நாயர் என்ற ஸர்நேம்கள் கேரளாவைச் சேர்ந்தவை. கௌர், சிங் என்பவை சீக்கியர்கள் என்று சொல்லிவிடலாம். இதைப் போன்று எத்தனையோ ஸர் நேம்கள், எழுதிக் கொண்டே போகலாம்.

இந்த ஸர்நேம்மை எழுதுவதில் கூட ஒருமுறை இருக்கிறது. முதலில் ஒருவர் தன் பெயரை முதலிலும் தன் தகப்ப னார் பெயரை இரண்டாவதாகவும், தன் ஸர் நேமை கடைசியிலும் எழுத வேண் டும். இப்படி எழுதத் தவறினால் ஆபத்து தான். இது சம்பந்தமாக ஒரு நண்பர் சொன்ன சம்பவம் ஞாபகம் வருகிறது. வட இந்தியாவில் ரொம்ப அறிமுகம் இல்லாதவர்கள் ஒருவர் மற்றவரை ஸர் நேம் சொல்லித்தான் அழைப்பது வழக்கம். மரியாதையோடு அழைக்கும் பொழுதும் ஸர் நேம் சொல்லித்தான் அழைக்கிறார்கள்.

ஒரு சமயம் ஒரு இண்டர்வ்யூவுக்குச் செல்ல நேர்ந்தது. இண்டர்வ்யூ ஃபாரத் தில் ஸர்நேம் என்ற இடத்தில் ஊரின் பெயர் 'காஞ்சிபுரம்' என்று இருந்தது. இண்டர்வ்யூவிற்கு நிறைய பேர்கள் வந்திருந்தனர். ஆபீஸ் ப்யூன் வெளியில் வந்து ஒவ்வொரு பெயராக அழைப் பான், பிறகு வந்தவர்கள் ஒவ்வொருவ ராக இண்டர்வ்யூவிற்காக உள்ளே செல் வார்கள். ஓரிரண்டு தடவை ப்யூன் வெளியில் வந்து, 'கொஞ்சிராம், கொஞ்சி ராம்' என்று கத்திவிட்டுப் போனான். எனக்கு ஒரே ஆச்சர்யம். நான் எத்தனை ராமர்களின் பெயர்களைக் கேட்டு இருக்கிறேன், கோதண்ட ராமன், பட்டாபிராமன், ஜானகி ராமன் என்று ஆனால் இந்த மாதிரி கொஞ்சி ராம் என்று கேள்விப்பட்ட தில்லையே என்று ஆச்சரியத்தில் மூழ்கி இருந்தேன். சிறிது நேரத்திற்குப் பிறகு என்னைத் தவிர மற்றவர்கள் எல்லோரும் சென்று விட்டனர். ஏன் என்னைக் கூப்பிடவில்லை என்ற ஆச்சரியத்தோடு தைரியத்தையும் வரவழைத்துக் கொண்டு, உள்ளே சென்று விசாரித்ததில் அந்த கொஞ்சி ராம் (நான் ஊர்ப் பெயராக எழுதிய காஞ்சிபுரம்தான் அப்படி ஆகி விட்டது!) வேறு யாருமில்லை நானேதான் என்று தெரிய வந்தது.

தமிழ் நாட்டில் தங்களுடைய சொந்த ஊரின் பெயரைத்தான் தன் பேருடன் சேர்த்துக் கொள்ளும் வழக்கம் இருக்கிறது. எத்தனையோ ஊரின் பெயர்கள் அவர்களுடைய நற்செய லால் பெருமைப்படும்படி செய்திருக் கின்றார்கள். பெரிய, பெரிய சங்கீத வித்வான்களை நாம் அரியக்குடி, செம்மங்குடி, லால்குடி என்று ஊரின் பெயர்களைக் கொண்டே அழைக்கிறோம்.

ஆனால் வேறொரு மாநிலத் திற்கு வந்து ஸர் நேமில்தான் கூப்பிட வேண்டும் என்று இருக்கும் பொழுது தமிழர்கள் ஒருவனை பேருக்குப் பதில் வந்தவாசி, மானாமதுரை, என்று கூப்பிட நேர்ந் தால் அது ஒரு மாதிரியாகத்தான் இருக்கிறது. ஆகையினால் தமிழர்கள் வெளி ஊருக்குப் போய் வசிக்க நேர்ந்தால் முதலிலேயே ஒரு அழகான 'ஸர் நேம்' தேடி வைத்துக் கொள்ளு வது நல்லது என்று தோன்றுகிறது.

— பத்மா ராஜகோபால்

---

என் நண்பர் பால் சாதத்தில் சிறிதளவு பொடி உப்பு சேர்த்துச் சாப்பிட்டார். நானும் அப்படி பால் சாதத்தில் பொடி உப்பு சிறிதளவு போட்டுச் சாப்பிட்டேன். ஆஹா! என்ன ருசி! என்ன ருசி!

- எஸ். ஏ. பி. வரதன்






ராம் காஷ்யப் நிறுவனத்தின் சிறப்பு அம்சங்களை கண்டறியுங்கள்

- வட்டி வழங்குவதிலும் அசலைத் திருப்பிக் கொடுப்பதிலும் நம்பிக்கைக்கு CARE நிறுவனத்தார் கொடுத்துள்ள தகுதிச்சான்று 'BBB-FD' (அதாவது போதிய பாதுகாப்பு)
- பங்கு வெளியீடு முதல் ஃபிக்ஸட் டெபாஸிட் வரை மக்களிடம் பெற்றிருக்கும் பூரண நம்பிக்கை.
- நேர்மைக்கும் செயலாற்றலுக்கும் பெயர் பெற்றவர்களைத் தன்னகத்தே கொண்டு திறமையான சேவை அளிக்கிறது.
- தமிழ்நாடு மற்றும் ஆந்திராவிலுள்ள எல்லா முக்கிய நகரங்களிலும் கிளைகள். (அது மட்டுமல்லாமல் நாடு முழுவதிலுமே கிளைகளைத் துவக்க உள்ளது).

* குமுலேடிவ் டெபாஸிட் திட்டத்தில்

**இதுவே மன அமைதியின் இருப்பிடம் உங்களது பணத்தை சிறந்த முறையில் பாதுகாக்கும் பெட்டகமும் இதுவே.**



**Ram Kaashyap Investment Ltd**

**உலகக் கண்ணோட்டம்; தனி மனித மேம்பாடு**

**பதிவு அலுவலகம் : 53, பிஷப் கார்டன் (கிரீன்வேஸ் சாலை அருகில்), சென்னை – 600 028. போன் : 4936931, 4936932**

**நிர்வாக அலுவலகம் : மூகாம்பிகா காம்ப்ளெக்ஸ், 5 'D' ஐந்தாவது மாடி, 4, லேடி தேசிகாச்சாரி ரோடு, ஆழ்வார்பேட்டை, சென்னை – 600 018. போன் : 4995148.**

**கிளைகள் : • சென்னை : • மயிலாப்பூர் • மேற்கு மாம்பலம் • அண்ணா நகர் (கிழக்கு) • அடையாறு • கோயம்புத்தூர் • திருச்சி • தஞ்சாவூர் • கும்பகோணம் • மதுரை • விஜயவாடா • சித்தூர் • ஹைதராபாத் • செகந்திராபாத் • விசாகப்பட்டினம் • ராஜமுந்திரி • பெங்களூர்**

Insight 1230

**டெபாசிட் திரட்டும் விழா நடைபெறுகின்றது**

சட்ட பூர்வமான ஃபிக்ஸட் டெபாசிட் விளம்பரம் 30.05.1995 தேதியிட்ட 'ஹிந்து' நாளிதழில் வெளியிடப்பட்டுள்ளது.

## சனிப் பெயர்ச்சி

15.2.1996 அன்று நடைபெற்ற சனிப்பெயர்ச்சிக்கான எல்லா ராசிகளுக்குமான பலன்கள், எழுதியுள்ளவர் : விட்டலாபுரம் ராஜன்.
(பக்கங்கள் - 80) விலை ரூ. 15.00

## தெரியுமா உங்களுக்கு?

நிறைய பொது விஷயங்கள், சுவையான செய்திகள். (உ-ம் : நடப்பதில் சில புதிய முறைகள், பாத்ரூம் பேப்பர்களைச் சேகரிக்கும் பேராசிரியர்!)
(பக்கங்கள் - 192) விலை ரூ. 36.00
(இரண்டும் மணிமேகலைப் பிரசுரம் - தபால் பெட்டி எண் : 1447, 4, தணிகாசலம் சாலை, தியாகராய நகர், சென்னை - 17.)

## இன்னொரு காரணம்

குடியும், குடிகாரர்களின் கோணலான வாதங்களை அடிப்படையாகக் கொண்ட இளம் தம்பதியரின் கதை. ஆசிரியர் : சிவசங்கரி.
(பக்கங்கள் - 84)
விலை ரூ. 11.00

## இரண்டாவது வாழ்க்கை

நெஞ்சக் குமுறல்களும், போராட்டங்களுமாக வாழ்ந்த ஓர் ஆணின் கதையை எழுதியிருக்கிறார் அனுராதா ரமணன்.
(பக்கங்கள் - 382)
விலை ரூ. 50.00
(இரண்டும் - திருமகள் நிலையம், 55, வெங்கட் நாராயணா ரோடு, தி. நகர், சென்னை - 17.)

## சண்முகக் கவசம்

முருக பக்தர்களுக்கான சண்முகக் கவசம். மூலமும் உரையும்.
(பக்கங்கள் 32) விலை ரூ. 4.00

## நவக்ரஹ ஸ்தோத்திரம்

பதிப்பாசிரியர் - ஸ்ரீராகவராம சாஸ்திரி.
(பக்கங்கள் - 75) விலை ரூ. 10.00
(இரண்டும் - ஸ்டார் பிரசுரம், த.பெ. எண் : 423, 72, பெரிய தெரு, திருவல்லிக்கேணி, சென்னை - 5.)

## சிரிக்காமல் விடமாட்டேன்

பரியா பாலுவின் ஜோக்குகள்.
(பக்கங்கள் 108) விலை ரூ. 17.00
(அருண் நிலையம், 17, அம்மையப்பன் சந்து, இராயப்பேட்டை, சென்னை - 14.)

## நித்ய கன்னி

சரித்திர காலத்துக்கு முற்பட்ட கதை. எந்தக் காலத்திலும் பெண்ணின் மனப்போராட்டங்களுக்குக் குறைவே இல்லை என்பதைக் கதையாக வடித்திருப்பவர் - எம்.வி. வெங்கட்ராம்.
(பக்கங்கள் - 195) விலை ரூ. 26.00

## அடிகளார் அருள்மொழி - 500

அண்மையில் வாழ்ந்து மறைந்த மாமனிதர் குன்றக்குடி அடிகளார் கூறிய சிறப்பு மொழிகள். (உ-ம்)
அரைக்கீரை -
சில தாவரங்கள் துன்பத்தைப் பயன்படுத்தியே வளர்கின்றன; வாழ்கின்றன. அரைக்கீரை கிள்ளக் கிள்ளத் துளிர்க்கும்.
(பக்கங்கள் - 143) விலை ரூ. 25.00
(இரண்டும் - வானதி பதிப்பகம், 13, தீனதயாளு தெரு, தி.நகர், சென்னை - 17.)

## பிறப்பு முதல் இறுதிவரை சடங்குகள்

சீமந்தம், பெயர் சூட்டல், சதாபிஷேகம் எனப் பல்வேறு நிலைகளை காரணங்களுடன் சொல்ல முற்படுகிறார் வேங்கடவன்.
(பக்கங்கள் - 80)
விலை ரூ. 15.00
(தமிழரசி பதிப்பகம், 18/1, ராஜாபாதர் தெரு, தி.நகர், சென்னை - 17.)

## வெங்காயம், வெள்ளைப் பூண்டு, இஞ்சி, மஞ்சள் - எளிய வைத்தியம்

ஆசிரியர் சுவாமி விஜயானந்தா
(பக்கங்கள் - 80) விலை ரூ. 12.50
(நாகப்பா பப்ளிகேஷன்ஸ், 45, முத்து முதலி தெரு, இராயப்பேட்டை, சென்னை - 14.)



புக் ஷெல்:ப்

## ஆன்மீகமும் ஆத்ம சக்தியும்

தியானம், வழிபாடு, இயற்கை மருத்துவம் இவற்றை விவரித்திருக்கிறார்கள். பதிப்பாளர் : எம். ஏ. ஜெய்சங்கர்.
(பக்கங்கள் - 112) விலை ரூ. 22.00

## கண்களும் பாதுகாப்பும்

வழிமுறைகளைக் கூறுபவர் டாக்டர் கே. என். சரஸ்வதி.
(பக்கங்கள் - 104) விலை ரூ. 20.00
(இரண்டும் - கடவங்குடி பப்ளிகேஷன்ஸ், 38, நடேச அய்யர் தெரு, தி. நகர், சென்னை - 17.)

## உயர உயரப் போகிறேன்

முற்போக்கு இலக்கியங்களில் ஆர்வம் கொண்டவர்களுக்கு விருந்தாகும் நாடகங்கள்.
(பக்கங்கள் - 97) விலை ரூ. 16.00

## கமர்ஷியல் ஆர்ட் கற்றுக் கொள்ளுங்கள்

லைன், வாஷ் போன்றவற்றை வண்ண விளக்கங்களுடன் கற்றுத் தருகிறார் ரவிராஜ்.
(பக்கங்கள் - 150) விலை ரூ. 45.00
(இரண்டும் - நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், 41-பி, சிட்கோ இண்டஸ்ட்ரியல் எஸ்டேட், சென்னை - 98.)

## வாழ்க்கையை உயர்த்தும் சிந்தனைகள்

மகிழ்ச்சியாக இருக்க, வெற்றிப் பாதைக்கு என நிறையக் கூறுபவர் பி.சி. கணேசன்.
(பக்கங்கள் - 136) விலை ரூ. 22.00

## கருநீலக் கண்கள்

இயல்பான நடையில் கந்தா ஒன்பது சிறப்புச் சிறுகதைகளைத் தந்திருக்கிறார்.
(பக்கங்கள் - 171) விலை ரூ. 28.00
(இரண்டும் - கங்கை புத்தக நிலையம், 13, தீனதயாளு தெரு, தி. நகர், சென்னை - 17.)

## அங்கங்களும் அந்தரங்கங்களும்

ஜோதிட ரீதியாக படங்களுடன் விளக்கியிருப்பவர் பண்டிதர் காழியூர் நாராயணன்.
(பக்கங்கள் - 88) விலை ரூ. 14.00
(கிரி பப்ளிகேஷன்ஸ், 58/2, டி.எஸ்.வி. கோயில் தெரு, மயிலாப்பூர், சென்னை - 4.)

## 12 பாவ பலன்கள்

ஜோதிடத்தில் ஆர்வமுள்ளவர்களுக்கு விருப்பமான நூல். ஆசிரியர் - சுப. சுப்பிரமணியன்.
(பக்கங்கள் - 288) விலை ரூ. 40.00

## உவகையூட்டும் விடுகதைகள்

படிக்க சுவாரஸ்யமானவை. ஆசிரியர் அ. சா. குருசாமி.
காசுக்கு கொம்பு முளைத்தால் கடிக்கும் அது என்ன? (கொசு)
(பக்கங்கள் - 104) விலை ரூ. 14.00
(இரண்டும் - நர்மதா பதிப்பகம், 16/7, ராஜா பாதர் தெரு, பாண்டிபஜார், தி.நகர், சென்னை - 17.)

## செவாலியர் சிவாஜி

நடிகர் திலகத்தின் கலைச் சேவையின் பரிமாணங்களைத் தொகுத்திருப்பவர் பாரிஸ் ஜமால்.
(பக்கங்கள் - 128) விலை ரூ. 21.00
(விற்பனை - மணிமேகலை பிரசுரம், த.பெ. எண் : 1447, 4, தணிகாசலம் சாலை, தி.நகர், சென்னை - 17.)

## பூக்காத மாலை

மேலாண்மை பொன்னுசாமியின் சிறுகதைத் தொகுப்பு. வாழ்வியலில் நொடிந்து போனவர்களின் போராட்டங்களைக் கூறுகிறது.
(பக்கங்கள் - 204) விலை ரூ. 35.00
(குமரிப் பதிப்பகம், 8, நீலா தெற்கு வீதி, நாகப்பட்டினம் - 611 001.)

## தீராத விளையாட்டு ஸாயி

ஸாயி பகவானின் அற்புத லீலைகளைக் கூறுபவர் ரா. கணபதி. நிறைய வண்ணப்படங்களுடன்.
(பக்கங்கள் - 137) விலை ரூ. 20.00
(திவ்ய வித்யா பதிப்பகம், 106/1, ஹபிபுல்லா சாலை, தி. நகர், சென்னை - 17.)

ரசத்தை இறக்கும் முன்பு, ஒரு ஸ்பூன் கறிவேப்பிலைப் பொடியைத் தூவி இறக்கினால், மணமாக இருக்கும்.
– உமா



இந்த நகையெல்லாம்
வேணாம்.
சுஸ்வாத்
பட்சணப் பையை
எடு முதலில்



கல்யாண ஸ்வீட்ஸ், சீர்முறுக்கு, சீர்வரிசை
பட்சணங்கள் எவ்வளவு தேவை
ஆனாலும் அர்ஜெண்ட் ஆர்டர் பேரில்
தயார் செய்து தருகிறோம்.

- ☐ சுத்தமான நெய்யில் தயாராகும் ஸ்வீட் வகைகள்
- ☐ சுத்திகரிக்கப்பட்ட, கொலஸ்ட்ரால் தொல்லை இல்லாத தாவர எண்ணெயில் தயாராகும் கார வகைகள்
- ☐ அதிகப்படியான எண்ணெய் அகற்றப்படுவதால் நீண்டநாள் கெடாமல் இருக்கும் தென்னிந்திய பட்சணங்கள் (Free of Oil)
- ☐ Instant இட்லி மிக்ஸ், தோசை மிக்ஸ், அடை மிக்ஸ், வடை மிக்ஸ், புளியோதரை மிக்ஸ் etc.

**OUR SPECIALITIES :**

- ☐ புழுங்கலரிசி கைமுறுக்கு, தட்டை, சீடை மிக்ஸர் (Free of Oil) etc.
- ☐ மைசூர் பாகு, போளி, லட்டு, கோதுமை அல்வா, etc.

SUSWAAD



**The Delicious Home made Sweets and Savouries**

1/2, Venkatraman Street,
(Near Kasi Arcade, Pondy Bazaar),
T. Nagar, Madras - 17.
Ph : 8282324 P.P.

*Also Available at :*

C/0. Unique Electronics
160, Royapettah High Road,
Mylapore, Madras - 4.
Ph : 4992190

EXPORT ORDERS & ENQUIRIES FOR TECH. KNOWHOW SOLICITED.

# சொல்ல விரும்புகிறோம்!

● "அடுத்த ஜென்மத்திலும் இதே கணவர் வேண்டுமா?" நல்ல ஓர் அருமையான கேள்வி. ஆனால், சொல்லி வைத்தாற்போல் எல்லோரும் (ஒருவரைத் தவிர) இதே கணவர் வேண்டும் என்று கூறியிருந்தது பயத்தினாலோ... என்னவோ! இதே கேள்வியைச் சில கணவன்மார்களிடமும் கேட்டுப் பார்த்தால் சுவையாகவும் சுவாரஸ்யமாகவும் இருக்குமே!

நீடாமங்கலம், எத்திராஜம் ஆராவமுதன்.

● ரிஷபனின் 'இரவில் சூரியன்' குறுநாவல் அருமையான திருப்பத்தில் 'அடுத்த இதழில் முடியும்' என நிறுத்தப்பட்டதே? முடிவு தெரிய இன்னும் 24 நாட்கள் நாங்கள் காத்திருக்க வேண்டியுள்ளதே? 'இரவில் சூரியன்' - சோகமான முடிவோ? அந்த முடிவைத் தாங்கக் கூட மனத்தில் தெம்பில்லை.

கல்பாக்கம், ராதிகா சாய்கண்ணன்.

● இன்றைய பெண்கள் படிப்பதும், முன்னேறுவதும் கூட ஆச்சரியமில்லைதான். ஆனால் நாடு சுதந்திரம் பெறும் நிலையில், கல்வி தாகம் கொண்டு கடல் கடந்து தன்னை உயர்த்திக் கொண்ட ராஜம்மாள் தேவதாஸ் அவர்கள்



இதே கேள்வியை கணவன்மார்களிடமும் கேட்கலாமே!

கடந்து வந்த பாதை, முயற்சிக்கு முட்டுக்கட்டை வரும்போது மூலையில் முடங்கிவிடும் இன்றைய பெண்களுக்கு ஓர் வழிகாட்டியாகும்.

ராமநாதபுரம், பா. உஷாராணி.

● டிசம்பர் கணவர் சிறப்பிதழ் சென்ற மாத இதழை விட படுசூப்பர்! அட்டையில் ஆற்காடு நவாப் தம்பதியர் படம் அருமை! சுபஸ்ரீ எழுதிய 'நெஞ்சில் உறுதி வேண்டும்' கதை நெஞ்சைத் தொட்டது! பெண்ணுக்கு அநீதி இழைப்பதென்றால் அவள் கற்பைக் கேவலப்படுத்துவதுதான் என நினைக்கும் ஒவ்வோர் ஆணும் படிக்க வேண்டிய அற்புதமான கதையைப் பிரசுரித்தமைக்காக உங்களுக்குப் பெண்கள் சார்பில் என் நன்றிகள் கோடி!

சென்னை - 40, ராதா நாயகம்.

● சிறு உரசல்களில் பற்றிக் கொள்ளும் மாமியார் - மருமகள் சண்டை - இடையில் சிக்கித் தவிக்கும் ஆணின் ஆர்ப்பாட்டம் - போதாக்குறைக்கு உசுப்பேற்றிவிட ஒரு பாட்டி - கண்காட்சி மூலம் பழம் பொருட்கள் விலை போவது என ஒன்றுக்கொன்று தொடர்புபடுத்தி நகைச்சுவை இழையோட 'உஷா ஸ்ரீகுமார்' அளித்திருந்த 'ஓல்டு எல்லாம் கோல்டு' சிறுகதைக்குப் பாராட்டுக்கள்!

ஹரியானா, சி. மகேஷ்.

● 'சந்தித்தேன் சகோதரிகளை' பகுதியைப் படித்து வியக்கிறேன். சத்தமில்லாமல் 'மங்கையர் மலர்' மங்கையருக்கு எத்தனை விதமாக உதவுகிறது! தமிழ்நாடு மருத்துவமனையின் முழுமையான செய்தி அப்தான் சொல்கிறேன். கருத்துக்களைச் சொல்வதோடு, தானே முன்மாதிரியாக நடந்து காட்டும் மங்கையர் மலருக்கு எங்கள் வாழ்த்துக்கள்.

சென்னை - 96, கமலா தெய்வசிகாமணி.

● மண்ணுலகில் ஒரு நரகலோகம் பற்றிய ஆசிரியரின் கட்டுரை மிகவும் அருமை. இக்கட்டுரையினைப் படிக்கும் பெற்றோர்கள் அதனை நகல் எடுத்து பள்ளித் தலைமையாசிரியையிடம் கொடுத்து, ஆசிரியர்கள் அனைவருக்கும் சுற்றறிக்கையாக அனுப்ப வேண்டும். அன்பின் முக்கியத்துவத்தை ஒரு கூட்டம் நடத்தி அவர்களுக்கு விளக்க வேண்டும்.

சிதம்பரம் - 1, ஸ்ரீவித்யா காளிதாஸ்.

● "முந்தானை முடிச்சு" படத்தினால், முருங்கைக் காய் விலை ஏறியது அன்று. மங்கையர் மலரில் வந்த "வெண்டைக்காய் சாப்பிடுங்கள்!" கட்டுரையால் வெண்டைக் காய் விலை ஏறிவிட்டது இன்று!

நீடாமங்கலம், ராணி கோவிந்தகுமார்.

● ஒவ்வோர் ஆணின் வெற்றிக்கும் பின்னால் ஒரு பெண் இருப்பதுபோல், ஒரு பெண்ணின் வெற்றிக்கும் பின்னால் ஓர் ஆண் உண்டு என்பதைத் தெளிவாக விளக்கியது ஷமீமா பேகம், சௌகத் அலி இவர்களது பேட்டி!

கீராந்தி, மஹாராஜ்.

● "இவர்களெல்லாம் சாப்பாட்டு ராமிகள் இல்லை!" என்ற கட்டுரையில் என் போன்ற பெண்களின் மனப் புண்ணை, அதன் வலியை மிகத் துல்லியமாகக் கூறியுள்ளார். நானும் ஒரு பாதிக்கப்பட்ட பெண் தான். மனிதநேயம் இல்லாத விமர்சனங்கள் என் இதயத்தை குத்திக் கிழித்தது ஏராளம், ஏராளம். இக்கட்டுரையைப் படித்த பின்பாவது மனிதர்கள் திருந்த வேண்டும்.

பெயர், ஊர் வேண்டாமே ப்ளீஸ்!

# நீங்கள் 'புன்னகைஅரசி' ஆக வேண்டுமா?

*சில இதழ்களுக்கு முன் பல் வரிசை சீராக அமைவதற்கான சிகிச்சை பற்றி ஒரு பேட்டி வெளியிட்டிருந்தோம். ஏராளமான வாசகர்கள் அதைப் பற்றி மேலும் விளக்கம் கேட்டு எழுதியிருந்ததால், இங்கு அதைப் பற்றிய விரிவான செய்திகளை அளிக்கிறோம்.*

*அழகு சிகிச்சை எல்லாவற்றிற்கும் வந்திருப்பது போல பல்லிற்கும் வந்து விட்டது. சொல்லப் போனால் பல்லுக்குத் தானே ரொம்ப முக்கியம்? 'பளிரே'ன்று சிரிப்பு, மலர்ந்த புன்னகை எப்பேர்ப்பட்ட வரையும் அழகாக்குமே!*

**கொ**ஞ்ச காலம் முன்பு வரை பல் மருத்துவம் என்றாலே பற்சொத்தை, பற்களை அகற்றுதல், வாய் துர்நாற்றத்திற்கான சிகிச்சை, என்றுதான் இருந்தது. இப்போது இந்த நிலை



* பல் அழகிற்குக் காத்திருப்பவர்கள்...

மாறி "முகச்சீரமைப்பு" ஓர் அரிய கலையாக பரவி வருகிறது.

எடுப்பான பற்களை உடையவர்கள் இன்று ஒரே நாளில் அழகுபெறுவதுடன் வாழ்வில் தாங்கள் இழந்த தன்னம்பிக்கையையும் பெற்று புன்சிரிப்புடன் வலம் வருகின்றனர். அத்தகைய அரிய சிகிச்சையை செய்வதில் நிபுணர், தென் ஆசியாவிலேயே மிகக் குறுகிய காலத்தில் மிக அதிகமான ஆபரேஷன்களை வெற்றிகரமாக தன் இளவயதிலேயே செய்து வருகிறவர் டாக்டர் எஸ்.எம். பாலாஜி.

இவர் சிதம்பரம் அண்ணாமலை பல்கலை கழக பல் மருத்துவக் கல்லூரியில் பயின்று ஜெர்மனி சென்று அத்துறையிலேயே மேற்படிப்புப் பயின்று வந்து இன்று பல்லாயிரக்கணக்கான இளைஞர்களை தன்னம்பிக்கையோடும் அழகிய புன்சிரிப்போடும் வாழ வைத்துக் கொண்டு இருக்கிறார்.



* டாக்டர் எஸ்.எம். பாலாஜி

இயற்கையிலேயே முன் பற்கள் எடுப்பாக இருந்தாலும், பாரம்பரியத்தின் காரணமாகவோ, அல்லது ஹார்மோன்களின் குறைபாடுகள் காரணமாகவோ தாடை எலும்பு வளர்ச்சி அதிகமாகி முகம் விகாரத் தோற்றமடைந்திருந்தாலும் facio maxillary சர்ஜரி மூலம் ஒரே நாளில் முகத்தை சீரமைத்து வசீகரமாக்க முடியும் என நிருபித்து வரும் டாக்டர் பாலாஜி இதுவரை இரண்டாயிரத்திற்கும் மேற்பட்ட இவ்வகை ஆபரேஷன்களை மிகக் குறுகிய காலத்திற்குள் செய்து வந்திருக்கிறார்.

முன்பெல்லாம் தாடை எலும்புகள் முறிந்து போனால், முறிந்த தாடை எலும்புகளை சரி செய்ய, பற்களை கம்பிகளால் இறுக்கிக் கட்டி மேல் தாடையையும் கீழ்த்தாடையையும் இணைத்து விடுவார்கள். இம்முறையில் கம்பிகளை அகற்றும் வரையில் வாய் வழியாக சாப்பிட முடியாது. அதன் காரணமாக பலவீனம் ஏற்பட்டு உடல் நலம் பாதிக்கப்படும் நிலை இருந்து வந்தது. இதை "இண்டர்மார்க்சிலரி ஒயரிங் முறை" என்பார்கள்.

• ஆபரேஷனுக்கு முன்...



• ஆபரேஷனுக்கு பின்...



ஆனால் டாக்டர் பாலாஜி, நவீன முறையில், உடைந்து விட்ட தாடை எலும்பை பிளேட் ஸ்குரு போட்டு முறுக்கி இணைப்பதால் மறுநாளே சாப்பிட முடியும்.

## பிறவிக் குறைபாடுகள்:

குழந்தை பிறக்கும் போதோ அல்லது பிறப்பதற்கு முன்னர் கருவிலேயோ தோன்றி வாழ்நாள் முழுவதும் தொடரும் குறைபாடுகளை பிறவிக் குறைபாடுகள் என்கிறோம்.

தாடையில் தோன்றும் குறைபாடுகள்

1. தாடையின்மை
2. சிறு தாடை
3. பெருந்தாடை

• மேல் தாடை அல்லது கீழ்தாடை இவற்றின் ஒரு பகுதியோ அல்லது முழுமையாகவோ தோன்றாமலிருக்கும் ஓர் அரிய நிலைதான் தாடையின்மை என்பது.

• சிறு தாடையில் இரு வகை உண்டு. 1. பிறவி சிறுதாடை, 2. பிறவிக்குப்பின் பெற்ற சிறுதாடை.

பிறவி சிறுதாடைக்கான காரணங்கள் சரியாக விளக்கப்படவில்லை. பாரம்பரியக் காரணங்களாலோ அல்லது எலும்பின் வளர்ச்சி குறைபாடுகளாலோ தோன்றலாம். மேல் தாடையின் முன் பகுதி சிறுத்திருந்தால் முகத்தின் மையப் பகுதி சிறுத்திருக்கும். வாய் மூலம் சுவாசிக்கும் பழக்கம் இதனாலேயே ஏற்படுகிறது.

தாடை அளவிற்கு அதிகமாக பெருத்திருப்பதே பெருந்தாடை ஆகும். பிட்யூட்டரி சுரப்பியின் கோளாறுகளும், பேஜட் நோயின் காரணமும் கபால எலும்புகள் மற்றும் தாடை எலும்புகள் பெருக்கக் காரணமாகிறது.

இக்குறைபாடுகளை ஆபரேஷன் மூலம் நீக்கி முகத்தைச் சீரமைக்க முடியும் என்கிறார் பாலாஜி.

## பாதி முக வளர்ச்சி:

பாதி முக வளர்ச்சி என்பது (facial Hemi Hypertrophy) முகத்தின் ஒரு பாதி பகுதி மறு பாதி பகுதியை விட சிறுத்தோ பெருத்தோ

● நாம் எந்த அளவிற்கு நமது அழகிலும் ஆரோக்கியத்திலும் கவனம் செலுத்துகிறோம் என்பதனை தெளிவாக எடுத்துக்காட்டுவது நமது பற்களாகும். பேசும் போதும், சிரிக்கும் போதும் வரிசைக் கிரமமாக இருக்கும் பற்கள் ஒரு தனிக் கவர்ச்சியை பெண்களுக்கும் ஆண்களுக்கும் தருகிறது. பற்களை காலை எழுந்த உடனும், ஒவ்வொரு உணவிற்குப் பிறகும் சுத்தம் செய்வது நல்லது. முக்கியமாக இனிப்புப் பதார்த்தங்கள் உண்டவுடன் வாய் கொப்பளிப்பது நல்லது.

● பற்பசைக் கொண்டுதான் பல்லைத் துலக்க வேண்டுமா? அது வெறும் வாசனைக்குத்தான் என்றும், நுரைவருவதால் அனைவரும் விரும்பி உபயோகிக்கின்றனர் என்றும் வெறும் விரலால் ஈறுகளையும் பற்களையும் அழுத்தித் தேய்த்தாலே போதும் என்றும் பல்வேறு கருத்துக்கள் நம்மிடையே நிலவி வருகிறது. பற்பசை கொண்டு பல் துலக்குவதுதான் நவீன வாழ்க்கையில் எளிதாக பல்லைச் சுத்தப்படுத்தும் வழி.

● பல பெண்கள் நகம் கடிப்பதை ஒரு ஃபாஷனாகவும், விட முடியாத பழக்கமாகவும் கொண்டுள்ளனர். நகத்தினிடையில் சேரும் அழுக்குகள் வயிற்றில் சேரும் என்பது தெரிந்த விஷயம். பல்லின் முற்பகுதியும் தேயும் என்பதையும் தெரிந்து கொள்ளுங்கள்.

● ஒரு பெண் கருவுறும்போது, மூன்றாம் மாதத்தில் கருவிலுள்ள குழந்தையின் பற்களின் அஸ்திவாரம் தோன்ற ஆரம்பிக்கின்றது. பற்களின் பாதுகாப்பு அப்போது முதலே ஆரம்பமாகிறது. அந்நேரத்தில் கர்ப்பிணி பெண்கள் கால்சியம், புரதச் சத்து, நிறைந்த உணவு வகைகளையும், இச்சத்து நிறைந்த பாலையும் பருகுவது அவசியம். கால்சியம், வைட்டமின் "ஏ"யும், "சி"யும் குறைவதினால்தான் பற்களில் பெரும்பாலான குறைபாடுகள் தோன்றுகின்றன.

● வளரும் குழந்தைகளும்சரி, வளர்ந்துவிட்ட நாமும் சரி, சாக்லேட்டுகளின் மீதுள்ள மோகத்தைத் தவிர்ப்பது நல்லது.

● குழந்தைகள் கைசூப்பும் பழக்கம் உடையவர்களாய் இருந்தால் அதை உடனே நிறுத்த முயற்சியுங்கள். தொடர்ந்து இப்பழக்கம் இருக்குமானால் பற்கள் முன்பக்கம் தள்ளியபடி வளர்ந்து அழகையே கெடுக்கும். அப்படியும் எடுப்பாக வந்து அழகையே பாழாக்கும் நிலை வந்து விட்டால் கவலைப் படாதீர்கள். "ஒரே நாள் ஆபரேஷன் மூலம் சரி செய்து விடுகிறேன்..."என்கிறார் டாக்டர் பாலாஜி.

● பெண் கணவரது அன்புக்கும் பரிவுக்கும், பாராட்டுதலுக்கும் ஏங்கும்போது தொடர்ந்து சிகரெட், பீடி, சுருட்டு பிடிப்பதால் ஏற்படும் துர்நாற்றமுடன் கணவன் அவளை நெருங்கினால் எப்படி இருக்கும்! ஆகவே கணவர்களே! இந்த கெட்ட பழக்கத்தை விட்டு விடுங்கள்.

● சிலர் மிக அழகாய் இருப்பார்கள். அருகில் சென்று பேசுவோம் என்று கிட்டே போனால் வாயில் வீசும் துர்நாற்றம்...! வாய்மூலம் சுவாசிப்பவர்களுக்கும் குறட்டை விடுபவர்களுக்கும் இக்குறை ஏற்படும். அதிகப் பசியுடன் இருப்பவர்களுக்கு மூக்கிலும் வாயிலும் துர்நாற்றம் ஏற்படும். காரணம் இரத்தத்தில் சர்க்கரை குறைவதுதான். நன்றாக உணவு உண்டபின் இது மறைந்து விடும்.

காணப்படுவதாகும். ஹார்மோன்களின் குறைபாடுகளே இதற்குக் காரணம். மற்றும் குரோமோசோம்களில் ஏற்படும் அசாதாரணத் தன்மை, கருவின் வளர்ச்சியில் ஏற்படும் மாறுதல்கள், போன்ற சில காரணங்களும் இக்குறைகளை ஏற்படுத்துகிறது.

பிறக்கும் போது மிகச் சிறியதாக தோன்றும் இக்குறைபாடுகள் வயது ஏற ஏற பெரிதாகி விகாரத்தன்மையை ஏற்படுத்துகிறது. ஆண்களைவிட பெண்களே இக்குறைபாட்டினால் பாதிக்கப்படுவதாக ஆய்வுகள் கூறுகின்றன. அழகு அறுவை சிகிச்சை மூலம் இக்குறைபாட்டினை நிவர்த்தி செய்யலாம்.

### உதடுகளில் தோன்றும் குறைகள்:

உதடு மற்றும் அண்ணப் பகுதியில் தோன்றும் பிறவிக் குறைபாடுகள் தனித் தனியாகவோ அல்லது மற்ற சில குறைபாடுகளுடன் சேர்ந்தோ இருக்கலாம்.

- இரட்டை உதடு
- பிளவு உதடும், பிளவு அண்ணமும்
- கீழ் உதட்டுப் பிளவு
- மேல் உதட்டுப் பிளவு

அண்ணப் பிளவுடைய குழந்தைகள் பால் குடிப்பது கூட ஒரு பிரச்னையாக இருக்கும். குடிக்கும் பால் மூக்கில் புக வாய்ப்புண்டு. இக்குழந்தைகள் பேசுவதற்குக் கூட சிரமப்படும். இத்தகைய குழந்தைகளை உடைய தாய்மார்கள் கவலைப்பட தேவையில்லை. விதிதான் காரணம் என நொந்து கொள்ளத் தேவையில்லை. அறுவை சிகிச்சை மூலம் இக்குறைபாட்டை எளிதில் நீக்கலாம் என்கிறார் டாக்டர் பாலாஜி.

# "உங்கள் பொன்னான கைகள் புண்ணாகலாமா?"






உதவிக்கு வந்துவிட்டது ரத்னா!
ரத்னா, பாத்திரங்களின்
மூலை முடுக்கிலுள்ள
பிசுக்கையும் முழுவதுமாக
அகற்றிடும். மேலும் உங்கள்
கைகளை மிகவும்
மென்மையாக வைத்திடும்...
வேலையே செய்யாத மாதிரி.




**உங்கள் கைகளின் நம்பிக்கை.**

AKSHAR

# என் கடைசி காலத்தில், 'கவர்ச்சிகரமான ஆதாயம் கிடைக்கும்' என்பது போன்ற பசப்பு வார்த்தைகளை நம்பி நான் ஏமாற முடியாது".



திரு. V. கிருஷ்ணன்,
(ஓய்வு பெற்ற ராடார் இன்ஜினியர்)
1, பிரபாகரன் தெரு, ஹிந்துஸ்தான் லீவர் காலனி,
சென்னை – 600 075. போன் : 403605

"தொந்தரவு ஏதும் படாமல் வரும் நிலையான
வருமானம் தரும் நிம்மதியே அலாதி!
அதற்காக, ரிசர்வ் பாங்கின் விதிமுறைகளைக் கடைப் பிடிப்பதோடு, முதலீடு செய்தவர்களின் பாதுகாப்பிலும் கண்ணும் கருத்துமாக இருக்கும் ஒரு நிறுவனத்தைத் தேடிக் கொண்டிருந்தேன். ராம் காஷ்யப் இன்வெஸ்ட்மெண்ட் லிமிடெட்டைக் கண்டு பிடித்தேன்!"




ராம் காஷ்யப் நிறுவனத்தின் சிறப்பு அம்சங்களை கண்டறியுங்கள்

• வட்டி வழங்குவதிலும் அசலைத் திருப்பிக் கொடுப்பதிலும் நம்பிக்கைக்கு CARE நிறுவனத்தார் கொடுத்துள்ள தகுதிச்சான்று 'BBB-FD' (அதாவது போதிய பாதுகாப்பு)

• பங்கு வெளியீடு முதல் ஃபிக்ஸட் டெபாஸிட் வரை மக்களிடம் பெற்றிருக்கும் பூரண நம்பிக்கை.

• நேர்மைக்கும் செயலாற்றலுக்கும் பெயர் பெற்றவர்களைத் தன்னகத்தே கொண்டு திறமையான சேவை அளிக்கிறது.

• தமிழ்நாடு மற்றும் ஆந்திராவிலுள்ள எல்லா முக்கிய நகரங்களிலும் கிளைகள். (அது மட்டுமல்லாமல் நாடு முழுவதிலுமே கிளைகளைத் துவக்க உள்ளது).

* குமுலேடிவ் டெபாஸிட் திட்டத்தில்

ஆகவே, வாழ்வின் பரபரப்புக்கள் ஓய்ந்த உங்களது காலகட்டத்தில் எந்தத் தொந்தரவும் படாமல் நீங்கள் பலனை அனுபவிக்க முடியும்.



**Ram Kaashyap**
*Investment Ltd*

**உலகக் கண்ணோட்டம்; தனி மனித மேம்பாடு**

பதிவு அலுவலகம் : 53, பிஷப் கார்டன் (கிரீன்வேஸ் சாலை அருகில்),
சென்னை – 600 028. போன் : 4936931, 4936932

நிர்வாக அலுவலகம் : மூகாம்பிகா காம்ப்ளெக்ஸ், 5 'D' ஐந்தாவது மாடி,
4, வேடி. தேசிகாச்சாரி ரோடு, ஆழ்வார்பேட்டை, சென்னை – 600 018. போன் : 4995148.

கிளைகள் : • சென்னை : • மயிலாப்பூர் • மேற்கு மாம்பலம் • அண்ணா நகர் (கிழக்கு)
• அடையாறு • கோயம்புத்தூர் • திருச்சி • தஞ்சாவூர் • கும்பகோணம் • மதுரை • விஜயவாடா
• சித்தூர் • ஹைதராபாத் • செகந்திராபாத் • விசாகப்பட்டினம்
• ராஜமுந்திரி • பெங்களூர்

**டெபாசிட் திரட்டும் விழா நடைபெறுகின்றது**

சட்ட பூர்வமான ஃபிக்ஸட் டெபாசிட் விளம்பரம் 30.05.1995 தேதியிட்ட 'ஹிந்து' நாளிதழில் வெளியிடப்பட்டுள்ளது.

Insight 1227

### நாக்கில் தோன்றும் குறைபாடுகள்:

* சிறு நாக்கு
* பெருநாக்கு
* பிளவு நாக்கு
* கருக்கம் (அ) பள்ளங்களை உடைய நாக்கு
* முடி நாக்கு
* நாக்கு தைராய்டு

ஆகியவை நாக்கிலே காணக் கூடிய குறை பாடுகள். இவைகளால் சாப்பிடவும், பேசவும் சிரமமாக இருக்கும். பற்களின் வரிசை ஒழுங் கற்று விகாரத் தோற்றமும் ஏற்படுகிறது. இக் குறைபாடுகளை வெளியே சொல்லவும் நாணப்பட்டு அச்சப்பட்டுக் கொண்டிருப்பவர் கள் இனி வருந்தத் தேவையில்லை. அறுவை மருத்துவம் மூலம் இக்குறைபாடுகளை சீர் செய்யலாம்.

### புற்று நோய்:

உடலின் எந்தப் பகுதியிலும் தோன்றக் கூடிய புற்றுநோய் நம் நாட்டைப் பொறுத்த வரை அதிக அளவில் வாய்ப்பகுதியிலேயே தோன்றும் வல்லமை படைத்திருக்கிறது. ஆந் திராவில் அண்ணப்பகுதியில் அதிக அளவி லும், கேரளாவில் கன்னப் பகுதியில் அதிக அளவிலும், குஜராத்தில் உதடுகளில் அதிக அளவிலும், காஷ்மீரத்தில் வயிற்றிலும் புற்று நோய் இருப்பதாக ஆய்வுகள் கூறுகின்றன. இந்தியாவின் பல்வேறு பகுதியில் நிலவும் புவி யியல் மாறுபாட்டிற்கேற்ப புற்று நோய் தோன் றும் பகுதியும் மாறுபடுகிறது.

வாய்ப்புற்று நோய் உடலின் மற்ற அங்கங் களில் தோன்றும் புற்று நோயைப் போலவே மிக விரைவில் வளர்ச்சியடையும் தன்மை கொண்டது. ஆரம்ப நிலையிலேயே அறியப் பட்டு மருத்துவம் செய்யப்படாவிடில் வாயில் எவ்விடத்தில் தோன்றினாலும் உயிரைக் குடிக் கும் தன்மை கொண்டவையாகவே இருக்கிறது.

புற்று நோய் தோன்றிய இடத்தில் இருந்து நிணநீர், குருதி இவற்றின் மூலம் மற்ற அங் கங்களுக்கு வேகமாக பரவுமானால் சிகிச்சை செய்வது அரிதாகும். வாய்ப் புற்று நோய்க்கான காரணம் இதுதான் என்று வரையறுக்கப்பட வில்லை. தொடர்ச்சியாக ஏதாவது ஒரு பொருள் வாயின் ஒரு பகுதியில் உறுத்திக் கொண்டிருந்தால் அவ்விடத்தில் புண் தோன்றி புற்று நோயாக மாறும் வாய்ப்புண்டு.

* புகையிலையை வாயில் அடக்கி வைப்ப தும்,
* புகை பிடிப்பதும்
* கூரான அல்லது குத்தும் தன்மையுடைய சொத்தைப் பற்களும்
* சரியாக செய்யப்படாத செயற்கை பற் தொகுப்புகளும்
* ஒழுங்கற்ற பல்லடைப்புகளும்
* உறுத்திக் கொண்டிருக்கும் பற் சீரமைப்புக் கருவிகளும் காரணமாகலாம்.

சிறந்த கவனிப்புகள் மூலம் இக்குறைகளை கட்டுப்படுத்த முடியும்.

### வாய் துர்நாற்றம்:

பல் மருத்துவத்திலே அதிக அளவில் சிகிச் சைக்கு வரும் குறைபாடு இது.

* பற்சொத்தை
* பற்களில் சீழ்கட்டுவது
* ஈறு நோய்கள்
* பற்களுக்கிடையே உணவுப் பொருட்கள் தங்கி அழுகுவது
* பற்கள் சரிவர சுத்தம் செய்யாமல் இருப் பதே வாய் துர்நாற்றத்திற்கான பொதுவான காரணங்கள்.

உடலின் மற்ற பகுதியில் ஏற்படும் வியாதி யின் காரணங்களாலும் வாய் துர்நாற்றம் ஏற்படும்.

### பற்காரை படிதல்:

பற்களில் கழுத்து பாகத்தில் பச்சை மஞ்சள் காவி நிறங்களில் பற்காரை படிவது, பற்கள் சரிவர துலக்கப்படாமையாலும், பற்களின் மேல் உணவுப் பொருட்கள், அணுக்கள், உமிழ் நீரில் உள்ள மியூசின், பாக்டீரியாக்கள்

---

பல் ஈறு நோய்களை நீக்கி அவை களை பலமுடனிருக்கச் செய்ய சில யோகாசன முறைகள் உண்டு. சிரஸா ஸனம், சர்வாங்காசனம் ஆகிய இரண் டும் பல், ஈறு, வாய், தொண்டை, மூக்கு இவற்றிற்கு அதிக குருதி ஓட்டத்தைக் கொடுப்பதால் இவ்வாசனங்களைத் தொடர்ந்து முறையோடு செய்தால் பல், ஈறு நோய்கள் வராது என்கின்றனர் யோகாசன நிபுணர்கள்.



ஆகியவை தங்குவதாலும் ஏற்படுகிறது. இதனால் வாயில் துர்நாற்றம் ஏற்படுவதுடன் ஈறுகளில் இரத்தம் கசிந்து பற்கள் பலவீனப் படவும் செய்கிறது.

மருத்துவரிடம் காட்டி இக்கரையை சுலப மாக அகற்றிவிடலாம்.

**ஈறுகளில் இரத்தம் வடிதல்:**

* பற்படலம், பற்காரை
* தொத்து நோய்கள்
* உணவில் வைட்டமின் 'சி' குறைவு
* சிறுமிகளுக்குப் பூப்பெய்தும் பருவம்
* இரத்த நோய்கள்
* இரத்தக் குழல் நோய்கள்
* இரத்த உரைவுக் கோளாறு

இக்குறை உள்ளவர்கள் உடனடியாக பல் மருத்துவரிடம் காட்டி சிகிச்சை பெறுவது நல்லது.

**உடைந்த பல் பொருத்துதல் :**

விளையாடும் போதும் விபத்துக்களில் அடிபடும் போதும் ஒரு பல் விழுந்து விட்டால், அந்தப் பல் உடையாமல் இருந்தால் அதை அப் படியே மருத்துவமனைக்கு கொண்டு வாருங் கள். உடையாத அப்பல்லைச் சுத்தம் செய்து நவீன முறைப்படி 'பற் கூழ்' அகற்றி பின் அடைத்து, தாடை பற்குழியில் பொருத்து கம்பி போட்டு கட்டி ஆறு வாரம் வைத்திருந்தால் அப்பல் எலும்போடு இணைந்து இழந்த பொலிவை மீண்டும் தரும்.

**ஞானப்பல்:**

ஞானப்பல் என்று சொல்லப்படும் கடை வாயின் கடைசிப்பல் முளைக்கும் போது தாடையிலே இருகுவலி ஏற்பட்டு கன்னத்தில் வீக்கம் ஏற்படும். இதை சிலர் "பொன்னுக்கு வீங்கி என தவறாக நினைத்து பச்சிலை அரைத்து மஞ்சளுடன் பூசுவார்கள்.

வீக்கம் கண்டவுடன் அது "பொன்னுக்கு வீங்கி" என முடிவு செய்யு முன் அது "பல் லுக்கு வீங்கி" அதுவும் ஞானப்பல்லுக்கு வீங்கி எனக் கண்டறிந்து பல் மருத்துவ சிகிச்சை பெறுவது உத்தமம்.

**பெண்களுக்குத் தானாக தோன்றி மறையும் பல் நோய்கள்:**

பெண்களில் சிலருக்கு பூப்பெய்தும் போதும், கர்ப்பமடைந்திருக்கும் போதும் மாத விலக்கு நிற்கும் போதும் ஈறுகள் தடித்து, இடைவிடாது இரத்தம் கசியலாம். உடலில் உள்ள நாள மில்லா சுரப்பிகள் மாறுபட்டு வேலை செய்வதால் இந்நிலை ஏற்படும். இது இயற்கையாக நிகழ்வது. அந்தந்த பருவங்கள் முடிந்ததும், சுரப்பிகள் சீரானதும் இரத்தம் கசிவது நின்று விடும். ஆகவே இந்நிலைகளில் அச்சப்படத் தேவையில்லை.

இந்த வகையில் டாக்டர் பாலாஜி பலருக் கும் தன்னம்பிக்கையூட்டி வாழ்வில் வெற்றியு டன் வலம் வர செய்து கொண்டு இருப்பது பாராட்டுக்குரிய விஷயமே!

இவர் சென்னை மைலாப்பூர் ஆலிவர் ரோட்டில் உள்ள இசபெல்லா மருத்துவமனை யில் அதிக அளவில் இம்மாதியான ஆப ரேஷன்களைச் செய்து வருகிறார்.

294 திருவல்லிக்கேணி நெடுஞ்சாலையிலும், கானியப்பா மருத்துமனையிலும் கூட நோயாளி களை கவனிப்பதால் இசபெல்லா மருத்துவ மனையில் மாலை நாலரையிலிருந்து ஏழரை வரை புன்னகை அரசிகளையும், அரசர்களை யும் உருவாக்கும் பணியில் ஈடுபட்டுக் கொண் டிருக்கிறார்.

தொகுப்பு : லீலா பத்மனாபன்

படங்கள், அட்டை வண்ணப்படங்கள்: ஜி. சுரேஷ்



மனிதனுடைய முப்பத்திரண்டு பற்களும் தனித்தனி உருவமைப்புடை யதாகவும் அளவில் மாறுபட்டும் இருக்கும். கைரேகைகளை போலவே பற்களும் மனிதனுக்கு மனிதன் மாறு படுகின்றன. உலகில் எந்த இருமனி தனின் பற்களின் அமைப்பும் ஒத் திருப்பதில்லை. ஆகவே பல் மனிதர் களை அடையாளம் காட்ட மிகவும் பயன்படுகிறது.

– தொகுப்பு : லீலா



திரும்பவும் நமக்குப் பிடித்த சமாசாரம்தான். உடனே புரிந்து கொண்டு 'நகை'க்கிறீர்களே!

ஆமாம். நகை விஷயம்தான் அது.

தங்கம் என்றாலே பளபளக்கும் மஞ்சள் நிறம் தான் நமக்கு ஞாபகத்துக்கு வரும். பொன்னுக்குப் பொன்னிறம் மட்டும்தானா? இதோ இன்னொரு நிற மான ப்ரௌன் கோல்ட் (Brown Gold) பற்றி அறிய லாமா?

இன்றைக்குப் பெண்களைப் பெரிதும் கவர்ந்திழுக் கும் நவீன நகைதான் 'ப்ரௌன் கோல்ட்'. பரபரப்பான விற்ப னையில் முன்னிலை வகிக்கிறது. இந்த நகைகளைப் புதிதாக அறிமுகப்படுத்தியிருக்கிறது 'லலிதா ஜுவல்லரி'.

பழம் பாட்டிக்குப் பாம்படம் வேண்டுமா?

நவநாகரீக நங்கைக்கு (கோல்ட் பிளேட்டில்) தங்கத் தகட்டில் செய்யப்பட்ட காது தொங்கட்டான் வேண்டுமா?

காலம் காலமாக விரும்பப்படும் காக மாலை வேண்டுமா?

# 'ப்ரௌன் கோல்ட்'

தற்கால பொன்னாரம் வேண் டுமா?

- எல்லாவற்றையும் ஒருசேர இங்கே பார்க்க முடிகிறது.

நாம் நகைகளைப் பார்வையிட்ட படி நடக்க எதிரே வருகிறார் 'லலிதா' வின் மேனேஜிங் டைரக்டர் சுகுமார். அவரிடமே விளக்கம் கேட்டோம் :



**ப்ரௌன் கோல்ட் என்றால் என்ன? தற்பொழுது என்னென்ன அணிகலன்களாக வந்து கொண் டிருக்கின்றன? அதைப் பராமரிப்பது எப்படி?**

" 'மின்னுவதெல்லாம் பொன்னல்ல' என்ற பழமொழி நமக்குத் தெரிந்ததுதான். அதன் அடிப்படைக் கருத்தில் 'பொன் மின்னும்' என்பதிருக்கிறது. ப்ரௌன் கோல்ட் ஒரு மின்னாத பொன். ஆனால் 22 காரட்தான். ஒரு புதுத்தொழில் நுட்பத்துடன் செய்து முடித்த தங்கநகைகளுக்கு ஒரு Rust கலந்த ப்ரௌன் நிறம் கொடுத் தோம். ஒரு பரிசோதனை முயற்சி யாக ஆரம்பித்த இந்த டிசைன் பெரும் வெற்றி அடைந்திருக்



• லலிதா

# ஒரு மின்னாத பொன்!

கிறது. இந்த ப்ரௌன் கோல்ட் ஆபரணங்கள் 1993 களிலேயே அறிமுகப்படுத்தப்பட்டது. நாளடைவில் அதிக வரவேற்பு அடைந்திருக்கின்றன," என்றபடி சுகுமார் கண்ணாடிக்குள் அலங்காரமாக நிற்கும் நுணுக்கமான கலை வடிவங்களோடு கூடிய ப்ரௌன் கோல்ட் நகைகளைக் காட்டுகிறார்.

மஞ்சள் தங்கத்திலிருந்து மாறுபட்ட நிறம். ஆனால் அழகானவை. வித்தியாசமாக, வேறுபாடாக, அதேநேரத்தில் விரும்பக் கூடியதாக இருக்கின்றன.

டிசைன்களில் புதுமை - எடைகளில் புதுமை - என்று இருந்ததெல்லாம் போக தங்கத்தின் நிறத்திலேயும் ஒரு புதுமையைப் புகுத்திச் செய்து பார்ப்போமே என்று தைரியமாக அறிமுகப்படுத்தியிருக்கிறார்கள்.

"இப்போது வேலைக்குப் போகும் பெண்களிலிருந்து பிரபலமான முன்னணி நட்சத்திரங்கள் வரை விரும்பி வாங்கக் கூடிய நகையாக ப்ரௌன் கோல்ட் மாறிவருகிறது" என்று சொல்லியபடி எல்லா ப்ரௌன் டிசைன்களையும் எடுத்துக் காட்டுகிறார். ஒவ்வொரு நகையைப் பற்றியும் சுகுமார் தொழில்நுட்பத்துடன் விளக்

• சுகுமார்





கம் அளித்த பாங்கு சுவாரஸ்யமாக இருந்தது.

- பிறகு பேச்சு பொதுவாகத் திரும்பியது.

***பொதுவாக என்ன வகையான நகைகள் அதிகம் விற்பனையாகின்றன?***

"நடுத்தர வர்க்கத்தைச் சேர்ந்த ஒவ்வொரு குடும்பங்களிலும் குறைந்தது 25 பவுன் இருப்பதாக வைத்துக் கொண்டால் அந்த எடையில் மூன்று அல்லது நான்கு நகைகள்தான் முன்பு வைத்திருப்பார்கள். தற்பொழுது அந்தப் போக்கு மாறிவிட்டது. அதனால் எடை குறைவான மெல்லிய நகைகளே அதிக எண்ணிக்கையில் விற்பனையாகின்றன.




***விற்கும்போது நாம் நஷ்டமடையாமல் இருக்க எப்படிப்பட்ட நகைகளைத் தேர்ந்தெடுப்பது நல்லது?***

"மரபு வழிப்படி soldering செய்து உற்பத்தியாகும் நகைகளை விற்கப் போகும் போது - மிகக் குறைந்த விலைக்கே பிற கடைகள் எடுத்துக் கொள்ளும். இதைத் தவிர்க்க வாங்கிய கடைகளிலேயே நகையை விற்றால் நமக்குப் பெரிய பிரச்னையே இல்லை. இருப்பினும் மிக அதிக எண்ணிக்கையில் soldering points உள்ள நகைகளைத் தவிர்த்து விடுவது நல்லது."

***சில ஃபேன்ஸி நகைகள் தூய மஞ்சள் நிறமாக இல்லாமல் வெளிர் நிறமாகத் தெரிவதற்குக் காரணம் என்ன?***

"இந்தியாவில் மற்ற நாடுகளைப் போல அல்லாமல் ஒரு விநோதமான சூழ்நிலை தங்கநகை உற்பத்தியில் இருக்கிறது. இந்தியா ஒரு காலத்தில் பலப்பல தனித் தனி ராஜ்யங்களாக இருந்த பிரதேசமானதால் ஒவ்வொரு ராஜ்யத்திற்கும் என்று வித்தியாசமான கலை நுணுக்கங்களும் வேலைப்பாடுகளும் இருந்து வந்திருக்கின்றன. இன்று அத்தனை மாறுபட்ட நகைகளும் ஒரே கூரையின்கீழ் கிடைக்கின்றன. தரத்தைக் கட்டுப்பாட்டுக்குள் வைத்திருந்தாலும் அவர்கள் உபயோகிக்கும் கெமிக்கல்ஸ், நீர், சீதோஷ்ணநிலை - சில பாரம்பரிய மரபுகள் காரணமாக நகைகளின் நிறத்தில் நுண்ணிய வேறுபாடுகள் இருக்கின்றன. இதை நன்றாக புரிந்து கொண்டிருக்கும் வாடிக்கையாளர்கள் இவற்றைப் பெரிது பண்ணுவதில்லை. ஆனால் விவரங்களைத் தெளிவாகக் கேட்டுத் தெரிந்து கொள்கிறார்கள்."

***ஆக, எல்லா நகைகளையும் நீங்கள் 'நல்ல தரமானதே' என்று சொன்னாலும் தங்க நிற வேறுபாட்டினால் குறிப்பிட்ட சில***

***நகைகள் அணிந்திருக்கும்போது இது, 'தங்கமா?' என்று சக தோழிகள் கேட்டு விட்டால் போதும், 'பொசுக்'கென்று ஆகி விடுகிறது - இதற்கு என்ன செய்வதாம்?***

"தங்க நகை செய்து முடிந்து ஷோ ரூமில் விற்பனைக்கு வரும்போது புதுப் புதுப் பொலிவோடும் மெருகோடும் மின்னு கின்றன. ஷோரூம் லைட் வெளிச்சத்தில் நகையைப் பார்ப்பதற்கும் வெளியே பகல் வெளிச்சத்தில் பார்ப்பதற்குமே அதன் ஜொலிப்பில் வித்தியாசம் தெரியும். ஆனால், தங்கத்தின் நிறம் மாறுபடுவதற்கும் மங்குவ தற்கும் அணியும்போது நாம் மேற்கொள்ள வேண்டிய சில எச்சரிக்கைகளை மறந்து விடுவதே காரணம். அதிக இடுக்குகளும் சந்துகளும் மிகுந்த நுண்ணிய வேலைப் பாடுகள் கொண்ட நகைகளை அணிந்து கொண்டு குளிப்பதால் கடின நீரிலுள்ள உப்புகளும் (hard water) சோப்புத் துகள் களும் நகைக்குள் படர்ந்து ஜொலிப் பைக் குறைக்கத்தான் செய்யும். குளிக்கும் போது தாலிச் சரடைத் தவிர வேறு நகைகளைக் கழற்றி விடுவது நல் லது. ஆனால் இதைத் தினப்படி தொடர் வழக்கமாகக் கொள்ளுவதும் சற்றுக் கடினம்தான். இருந்தும் இந்த முறையைக் கடைப்பிடித்தால் நகையின் ஜொலிப்பு பளபளக்கும் புதுத்தன்மை மாறாமல் இருக்கும் என்பது உறுதி."

***ஒரு மாடலை நீங்கள் விற்பனைக்கு அனுப்புவதற்கு முன்னதாக அது விற்பனை யாகிவிடும் என்று எப்படித் தீர்மானிக் கிறீர்கள்?***

"பெரும்பான்மையான மாடல்கள் நாங் களே டிஸைன் செய்வதுதான். பன்னிரண்டு பேர் கொண்ட குழு வேறு எந்த வேலை யையும் செய்யாமல் கம்ப்யூட்டர் உதவி யுடன் உள்ளூர் மற்றும் வெளிநாட்டு நகை களுக்குரிய புத்தகங்களின் உதவியுடன் தொடர்ந்து டிசைன்களை உருவாக்கிக் கொண்டே இருக்கிறோம். அதை எங்களது பிரத்தியேகப் பட்டறைகளிலும் மொத்த வியாபார டீலர்களிடமும் தந்து நகைகளைச் செய்து கொள்கிறோம். அதனால் மாடல்கள் புதுமையாகவும் வித்தி யாசமாகவும் இருப்பது நியாயம் தானே? அந்த மாடல்கள் விற்ப னைக்கு வருவதற்கு முன்பே நிச் சயமாக விற்றுவிடும் என்ற நம் பிக்கை உண்டு."

***டிசைன்ஸிற்கு உங்கள் ஷாப் மிகவும் பிரபலமாக இருக்கிறது. 'செட்' நகைகளை விளம்பரப் படுத்துகிறீர்களே, இது விரும்பப் படுகின்றதா?***

"நிச்சயமாக விரும்புகிறார்கள். மெல்லிய நகைகள் குறைந்த எடையில் தற்போது நிறையக் கிடைப்பதால் அந்தந்த நெக்ல ஸுக்கு மேட்சாக ட்ராப்ஸ் வாங்கி வைத்து செட்டாகத்தான் அணிகிறார்கள்.



மிக்ஸியில் இட்லிக்கு அரைப்பதாக இருந்தால், ஊற வைத்த அரிசியையும் உளுந்தையும் முப்பது நிமிடங்கள் பிரிட்ஜில் வைத்திருந்து அரைத்தால், சூடாவதைத் தவிர்க்க முடியும்.

- குப்பம்மாள்





வாழைப்பூ செய்யும்போது பசியுடன் வந்த என் நாத்தனார், "எப்படி நறுக்கி எப்போ செய்வீங்க?" என்று பெருமூச்சு விட்டார். ஆய்ந்ததும் முழுசாய் மிக்ஸியில் போட்டு இரண்டே சுற்று சுற்றினேன். அழகாய் உதிர்ந்த பூவைப் பார்த்து ஆச்சரியப்பட்டார் நாத்தனார்.

- கி. மஞ்சுளா

கல் நெக்லஸுக்கு பிளெயின் கம்மலுக்குப் பதிலாக மேட்சிங் கல் தோடுகளே அணிகிறார்கள். அதுமட்டுமல்லாது அந்தக் கல்லின் நிறத்துக்குப் பொருத்தமாகப் புடைவையும் அணிகிறார்கள். செட்டுகள் 20 கிராமிலிருந்து 300 கிராம் வரை எங்களிடம் இருக்கிறது. முத்து செட், பச்சைக்கல் செட், கிறிஸ்டல் செட், பவள செட், சிவப்புக்கல் செட், நவரத்தின செட், டர்க் காய்ஸ் செட், அமத்தீஸ்ட் செட், டைமண்ட் செட் எனச் சொல்லிக் கொண்டே போகலாம்."

திரு. சுகுமார் ஆங்கில விரிவுரையாளராக இருந்து வந்ததாலும், இப்போதும் பல சமூக சேவைகளில் ஈடுபட்டிருப்பதாலும் அவருடைய பேச்சு எப்போதும் சுவாரஸ்யமாக, சமூகம் தழுவியதாகவே இருக்கும். அவர் சொன்ன மூன்று விஷயங்கள் சிந்திக்க வேண்டியதாக இருந்தன -

***1. Excellence is never an accident.***

***உன்னதம் எப்பொழுதுமே விபத்தல்ல.***

***2. There is no growth without sacrifice and hardwork.***

***கடின உழைப்பில்லாமல், தியாகங்கள் இல்லாமல் வளர்ச்சியில்லை.***

***3. Competition should inspire us and it should not scare us or make us anxious.***

***போட்டி நமக்கு உத்வேகத்தைத் தர வேண்டும், மாறாக அவை அச்சத்தையும் பதற்றத்தையும் தரக்கூடாது.***

லலிதா ஜூவல்லரி இந்த அளவிற்கு இன்று முன்னணியில் இருப்பதற்குக் காரணத்தை அவருடைய பேச்சிலிருந்தே புரிந்து கொள்ள முடிந்தது.

***லலிதாவின் வளர்ச்சியில் உங்கள் மனைவியான திருமதி லலிதாவுக்கும் பங்கு இருக்கிறதா? உங்களோடு நகைகளைப் பற்றி விவாதிப்பாரா?***

நிச்சயமாகப் பங்குண்டு. எங்களது டிசைன்களை விமர்சனம் செய்வதிலும் - விளம்பர உத்திகளை உற்றுக் கவனித்து கருத்துக்கள் சொல்வதிலும், கடையில் பணிபுரியும் பெண் அலுவலர்களிடம் சிநேகபூர்வமாகப் பழகுவதிலும் இவ்வளவுக்கும் மேலாக இரவு பதினோரு மணிக்கு வீடு திரும்பும்போது புன்னகை மாறாமல் வரவேற்பதிலும் தொழில் அறிந்து விட்டுக் கொடுத்து ஈடுகொடுப்பதிலும் அவர்களுக்குப் பெரும் பங்குண்டு. அவரே எனக்குப் பெரிய பலம் என்றும் சொல்லலாம்.

பேட்டி : **மலர்விழி**

# ஆண்டுக்கு ஆண்டு தேதிக்கு தேதி...

வருகிறது புத்தாண்டு. திரும்பிப் பார்ப்பதற்குள் அந்த ஆண்டு பறந்து அடுத்த ஆண்டு மலர்கிறது. மறுநாள் புத்தாண்டின் முதல் நாள் என்னும்போதே 'நாளை காலை முதலில் கோயிலுக்குச் சென்றுவர வேண்டும்' எனத் திட்டமிடுவோர் எத்தனை பேர்? 'வருஷம் முதல் நாள் குழந்தைகளை அடிக்காதே - கீழே விழாமல் நட - நாளைக்குச் செய்வது ஆண்டு முழுவதும் தொடரும்' என்ற அறிவுரைகள்தான் எத்தனை? 'நல்ல ராசியான கையினால் மட்டுமே முதல் நாள் பணம் வாங்க வேண்டும்' எனச் சிலரும் - 'வருஷம் முதல் நாளும் அதுவுமா யாருக்குமே பணம் கொடுத்து விடாமல் அப்புறம் வருஷம் பூராவும் கொடுத்துக் கிட்டேதான் இருக்கணும்' என்று சிலரும் தீர்மானம் செய்வதும் உண்டு. ஆண்டின் முதல் நாள் செய்வதை ஆண்டு முழுவதும் செய்வோமென்ற சென்டிமென்ட் சரியென நாம் கொண்டால் ஆண்டின் முதல் நாள் விடுமுறை விடுகிறார்களே? ஆண்டு முழுவதுமா விடுமுறை விடுகிறார்கள்? இப்படிச் சிலரைக் கேட்டபோது -







கோமதி



ரேவதி



**திருமதி நாகரத்தினா** *(உரிமையாளர் - ஐடியல் எக்ஸ்போர்ட்ஸ்):*

ஆண்டின் முதல் நாளை நாம் எப்போதும் மகிழ்வுடன்தானே எதிர்கொள்கிறோம்? ஆண்டு முழுவதும் மகிழ்ச்சி தொடருமா என்பது தெரியாத நிலையில் அது தொடரவேண்டும் என்று நம்பிக்கையுடன் ஆண்டவனை வேண்டி ஆண்

இரவு நேரங்களில் வெளியே செல்லும்போது வீட்டில் ரேடியோ அல்லது டி.வியை சின்ன வால்யூமில் வைத்துவிட்டுச் செல்லவும். ஒரிரு ரூம்களில் விளக்குகளையும், ஃபேன்களையும் 'ஆன்' செய்து வைக்கவும். உள்ளே யாரோ இருக்கிறார்கள் என்ற நினைப்பில் திருடர்கள் கைவரிசையைக் காட்டாமல் போய்விடுவார்கள்.

- உஷா



டைத் தொடங்குகிறோம். ஆண்டின் முதல் நாளில் அனைவரும் ஒரு 'கெட்டு-கெதர்'போல ஒன்றாகக் கூடிக் களித்து மகிழ வேண்டுமென்பதற்காகத்தான் விடுமுறை விடப்படுகிறதோ? என்னைப் பொறுத்தவரை இந்த முதல் விடுமுறை நாளைப் பயனுள்ள வகையில் கழிக்க வேண்டும்.

தெரிந்த துறையில் புதிய தொழில் ஏதாவது தொடங்கலாம். நம்மால் முடிந்த உதவிகளைப் பிறருக்குச் செய்யலாம். என் போன்ற பெண் தொழில் முனைவோர்கள் ஒன்று கூடித் தங்களின் எதிர்காலத் திட்டங்களை விவாதிக்கலாம். தொழில் தொடங்கும் எண்ணமும், திட்டங்களும், தகுதிகளும் உள்ள பெண்களுக்கு இதுபோன்ற சந்திப்புகளின் போது தேவையான வழிவகைகளைக் கூறி உதவிகள் செய்யலாம்.

**டாக்டர் கோமதி** *(பல் வைத்திய நிபுணர்)* :

**பு**த்தாண்டு விடுமுறைநாள் என்பதே ஆங்கிலேயரிடமிருந்து நமக்கு வந்த ஒன்றுதான். டிசம்பர் 31-ந்தேதி இரவு 12 மணி அடிக்கும் நேரம் புது வருடம் பிறப்பதை ஒட்டி ஆரவாரமான கொண்டாட்டங்கள் அவர்கள் பழக்கங்கள். இரவு வெகுநேரம் விழித்திருந்து கொண்டாடுவதால் மறுநாள் நிச்சயம் ஓய்வு தேவை. அதனால் இப்படி விடுமுறை விடும் வழக்கம் வந்திருக்கலாம். ஆனால் உண்மையான மகிழ்ச்சி என்பது நாம் செய்யும் நல்ல காரியங்களால் மட்டுமே உண்டாவது. நாம் இறந்த பின்பும் நிலைத்துவாழும் கண்களை தானம் செய்வதும், இறைக்க இறைக்கச் சுரக்கும் ஊற்று போல ஊறும் இரத்தத்தை ஆபத்தில் உள்ளவர்களுக்குத் தாராளமாக வழங்குவது போன்ற தீர்மானங்களையும் இந்த நாளில் நாம் ஏற்கலாம்.

என் போன்ற மருத்துவர் ஆண்டின் முதல் நாள் அன்று 'ஃப்ரீ மெடிகல் கேம்ப்', 'ஃப்ரீ மெடிகல் செக்-அப்' போன்றவைகளைச் செய்ய முன்வரலாம். என்னைப் பொறுத்தவரை ஆண்டின் முதல் நாளன்று என்னிடம் வரும் நோயாளிகளில் வசதி குறைந்தவர்களுக்கு இலவசமாகவே வைத்தியம் பார்க்கிறேன்.

**திருமதி ரேவதி விஜயகுமார்** *(வங்கி ஊழியர்)* :

**எ**ன்னைப் பொறுத்தவரை இந்த விடுமுறை நாளைக் குடும்பத்துடன் மகிழ்ச்சியாகக் கழிக்க வேண்டும் என்பேன். குழந்தைகளின் எதிர்காலம் பற்றி உட்கார்ந்து பேச நல்ல ஒரு தொடக்கமாக அமையும். குழந்தைகளுடன் அமர்ந்து மனம்விட்டுப் பேசி நல்ல கருத்துக்களையும் - செய்திகளையும் அவர்கள் மனத்தில் பதியும் வண்ணம் எடுத்துச் சொல்ல வேண்டும். ஆண்டுக்கு ஒரு நாளாவது - ஆண்டின் முதல் நாள் அன்று மட்டுமாவது சண்டை சச்சரவுகளைத் தவிர்த்து குடும்பத்துடன் கோயிலுக்குச் சென்று பிரார்த்தனை செய்யலாம். நம்முடைய எதிர்பார்ப்புகளுக்கு அளவே கிடையாது. ஆனால் நம்மால் செய்ய முடியக் கூடியவைகளைப் பற்றி மட்டுமே உறுதி மொழிகள் எடுத்துக் கொள்ள வேண்டும். சென்ற ஆண்டு ஜனவரி முதல் நாள் நாம் எடுத்த உறுதி மொழிகளை ஆராய்ந்து - அவைகளில் எத்தனை சதவிகிதத்தைச் செயல்படுத்த முடிந்தது என்பதைக் கணக்கிட்டாலே - வரும் ஆண்டுக்குப் புதிய தீர்மானங்கள்

# "அம்மாவின் புதிய ஃபாஸ்ட்-ஃபுட் நிலையம்!"



உங்களுக்குப் புரிந்திருக்குமே. அவைதான் கிராம்டன் கிரீவ்ஸ் சமையலறை சாதனங்கள். குறிப்பாக, அவன் டோஸ்டர் க்ரில்லர், ஆட்டோமாட்டிக் எலக்ட்ரிக் குக்கர், மற்றும் ஃபுட் ப்ராஸஸர். எங்களது ஃபுட் ப்ராஸஸரை எடுத்துக் கொள்ளுங்கள். அது 10 நொடியில் 4 வெங்காயங்களை நறுக்குகிறது. 90 நொடியில் 400 கிராம் சப்பாத்தி மாவைப் பிசைகிறது மற்றும் 60 நொடியில் ஆரஞ்சு சாறு தயார். எனவே உங்கள் குழந்தைகள் மிகவும் ஆரோக்கியமான முறையில் நாளைத் தொடங்கலாம். நீங்கள் மிச்சப்படுத்தும் நேரத்தில், சுவையான மெதுவடை தயாரிக்கலாமே. அல்லது நீங்கள் எப்போதும் விரும்பும் முட்டை கலவாத கேக். எங்களது அவன் டோஸ்டர் க்ரில்லர் இந்த வேலைகளை எளிதில் செய்து தரும். உங்கள் கணவருக்குப் பிடித்தமான இட்லிகளைத் தயாரிக்க, எங்களது ஆட்டோமாட்டிக் எலக்ட்ரிக் குக்கரைச் சிபாரிசு செய்கிறோம். ஆம். அதுவும் கூட, அருமையான புலாவு மற்றும் சுவையூறும் அல்வா தயாரித்து தருமே. அதுமட்டுமல்ல. சமையல் வேலை முடிந்ததும், குக்கர் தானாகவே உணவைச் சூடாக வைத்திருக்கும் வேலையைத் தொடங்குகிறது. இன்னும் சொல்லிக் கொண்டே போகலாம். இனியும் என்ன தயக்கம்? உங்கள் அருகமைந்த எங்களது விற்பனையாளரிடம் சென்று வியப்பூட்டும் இம் மூன்றையும் காணலாமே. மேலும் உங்கள் குழந்தைகள் விளையாடிக் களைத்து வீடு திரும்பும்போது சுவையான பிஸ்ஸா தயாரித்து வைத்து அவர்களுக்கு ஆச்சரியம் அளிக்கலாமே.

கிராம்டன் கிரீவ்ஸ் சாதனங்கள். ருசிகரமான வாழ்க்கைக்கு. **கிராம்டன் கிரீவ்ஸ்**

• ஃபுட் ப்ராஸஸர் • மினி கிரைண்டர் • ஜூஸர் மிக்ஸர் கிரைண்டர் • ஸிட்ரஸ் ஜூஸர் • அவன் டோஸ்டர் க்ரில்லர் • ஸாண்ட்விச் டோஸ்டர் • பாப்-அப் டோஸ்டர் • ஆட்டோமாட்டிக் எலக்ட்ரிக் குக்கர் • காப்பி-டீ மேக்கர்.

The Thapar Group கிராம்டன் கிரீவ்ஸ் லிமிடெட், ஃபேன்ஸ் அண்ட் அப்ளையன்ஸஸ் டிவிஷன், காஞ்சூர் மார்க், பாண்டுப், பம்பாய்-400 042. போன்: 578 4129/578 2451. ஃபேக்ஸ்: 5783468



குட்டிப் பாப்பா தவழ ஆரம்பித்துவிட்டாள். இனியென்ன, கொண்டாட்டம்தான்! ஆனால் அந்த இரண்டு முழங்கால்களும் தரையில் உராய்ந்து புண்ணாகிவிடுமே... ஐயோ பாவம்! பேசாமல் பாப்பாவுக்கு அப்பாவின் சாக்சை மாட்டிவிடுங்கள். (காட்டன் சாக்ஸ் அணிவிக்கவும்) தொடை வரை மூடியிருக்கும். முழங்கால்களும் 'பட்டா'க இருக்கும்.

– உஷா

---

தேவையா, இல்லையா? என்பது புரிந்துவிடும்.

**திருமதி கானப்ரியா** *(பள்ளி ஆசிரியை)* :

"என்னைப் பொறுத்தவரை இந்த நாளில் நான் என் பழைய மாணவிகளில் பலரையும் நினைவுகூர்வது உண்டு. பள்ளியில் நான் மிகவும் கண்டிப்பான ஆசிரியை எனப் பெயரெடுத்தவள். ஆனாலும் எங்கள் பள்ளியைச் சேர்ந்த பல மாணவிகளுக்கு மாலையில் பள்ளி முடிந்த பின்பு உட்கார்ந்து நான் தனியான பயிற்சியளித்து விட்டுத்தான் வீட்டுக்கு வருவேன். இதுபோன்ற பயிற்சிகளுக்கு நான் பணம் எதுவும் வாங்குவது கிடையாது. ஜனவரி முதல் நாளன்று என் தற்போதைய மாணவிகள் மட்டுமின்றி பழைய மாணவிகளிடமிருந்தும் புத்தாண்டு வாழ்த்துமடல்கள் வரும். சிலர் நேரிலும் வந்து வாழ்த்துக்கள் சொல்வதுடன் - தங்களின் பணி, குடும்பம் பற்றிச் சொல்லிவிட்டுச் செல்வார்கள். என் மகிழ்ச்சிக்கு அளவேயிருக்காது. வரும் ஆண்டில் எந்தவிதமான பயிற்சிகளை என் மாணவிகளுக்கு அளித்து நல்ல ரிசல்ட் பெற முயற்சி செய்ய வேண்டுமென்பதுதான் ஆண்டின் முதல் நாளன்று என் மனத்தில் நிற்கும் எண்ணங்களாக இருக்கும்."

**திருமதி ஆண்டாள் பிரியதர்ஷிணி** *(கவிதாயினி - எழுத்தாளர் - தொலைக்காட்சி நிகழ்ச்சித் தயாரிப்பாளர்)* :

புத்தாண்டு தினத்தில் எல்லாம் நல்லபடியாக நடந்தால் - வருடம் முழுவதும் நலமே என்ற நம்பிக்கை வைக்கலாம். அது வருடம் முழுவதும் தினங்களை நகர்த்துவதுடன் மனங்களை உயர்த்தவும் உதவும்.

அந்த நல்ல நாள் நல்ல எண்ணங்களை நமக்குள் விதைக்கத் தகுந்தது. ஆல மரமாக அவைகள் தழைக்காவிட்டாலும் அருகம்புல் போல அந்த அளவாவது நமக்குள் புதிய சிந்தனைகளை விளைவிக்கட்டும்.

'பழையன கழிதலும் - புதியன புகுதலும்' என்பது வீட்டுக்குள் இருக்கும் ஓட்டை உடைசல்களைக் குறிப்பதன்று. நம் சிந்தனையில் வேர்விட்டிருக்கும் வெறுப்பு, வீராப்பு, சோம்பேறித்தனம், பொறாமை, பொரச்சரிப்பு, சுறுசுறுப்பின்மை இவைகளை விலக்கி அன்பு, நேசம், விடாமுயற்சி போன்றவைகளை இந்த நல்ல நாளிலிருந்து நடைமுறைக்குக் கொண்டுவரலாம். இதுபோன்ற நாட்கள் நம்மை நாமே 'ரீசார்ஜ்' செய்து கொள்ள உதவுகின்றன.

வருடம் முழுவதும் இயந்திர கதியில் ஓடும் நாம் இன்று ஒரு நாளாவது அலுவலகத்திலிருந்து, ஆயாசமான ஓட்டத்திலிருந்து விலகியிருப்பதால் ஒரு நன்மை! குடும்பத்தினருடன் களிக்கலாம். மனதை நிதானப்படுத்திச் செழிக்கலாம். அமைதியும் - நிதானமும் கொண்டு இந்த நாளைக் கழிக்கலாம் - இவை பல சாதனைகளைப் புரிய நமக்குப் படிக்கட்டுகளாக அமையும்.

தொகுப்பு :

**வைதேகி தேசிகன்**



பதில்கள் : மைதிலிபாபு

# பரு வந்தால் 'டெட்டால்' போடலாமா?

இப்பொழுதெல்லாம் பெண்களுக்கு 'ட்ரஸ் சென்ஸ்' மிகவும் அதிகமாகி விட்டது. எவ்வாறெல்லாம் உடை உடுத்தினால், தன் அழகை, கம்பீரத்தை எடுத்துக் காட்ட முடியும் என்பதை நன்கு உணர்ந்தவர்களாகவே இருக்கிறார்கள். நன்கு ரசனையுடன் உடை உடுத்தி, கடைகளில் கிடைக்கும் ஃபேன்சி நகைகளை போட்டுக் கொண்டு பெண்கள் கண்களைக் கவர்கிறார்கள் என்பதில் ஐயமில்லை!

முன்பு புடவை வாங்கினால் அதற்கேற்றபடி அதே கலரில் ரவிக்கை அணிவது ஃபேஷனாக இருந்தது. இப்பொழுது அப்படியல்ல! வண்ண வண்ண டிசைன்களில் கண்ணைப் பறிக்கும் ரவிக்கைகள் வந்துள்ளன. மயில் தோகை விரித்து ஆடுகின்றன! பட்டாம் பூச்சி கண் சிமிட்டுகிறது! மலர்ந்த பூக்கள்

பணத்தில், நாம் அணியும் உடைக்கு ஏற்றவாறு காது, கழுத்துக்கு நகைகள் கிடைக்கின்றன.

அம்சமான உடை, அழகான நடை கூடவே உங்கள் புன்னகை! இதற்கு மேல் வேறு என்ன வேண்டும் உங்களுக்கு!

? என்னுடைய தோழியின் கன்னத்தில் பரு வந்த பொழுது டெட்டால் போட்டால் சரியாகிவிடும் என்று அறியவே அப்படி செய்ததில் கன்னம் முழுதும் புண்ணாகி கறுப்பாக மாறிவிட்டது. அத்துடன் மத்தாப்பு கொளுத்தும் போது (லேசாக) கன்னத்தில் பட்டுவிடவே மேலும் கறுப்பு சேர்ந்து அசிங்கமாக உள்ளது. எனவே அதை போக்க எளிய வழிகளை சொல்லுமாறு கேட்டுக் கொள்ளுகிறேன்.

பாண்டிச்சேரி, வி. ரேவதி.

! பரு முகத்தில் வந்தால் அதற்கு நீங்களாகவே

ஃபேஷியல் செய்வதும் நல்லதே.

? என் கழுத்தில் சிலந்தி ஏற்பட்டு அதை கிழித்து அந்தப் புண் வடுவாகி விட்டது. வடு ஐந்து பைசா அளவிற்கு உள்ளது. இதை மறைக்க ஏதேனும் வழி சொல்லுங்கள்.
செங்கம், மாணிக்கவீணா
! உங்களை நேரில் பார்த்தால்தான் சிகிச்சை என்னவென்பதை சொல்ல முடியும். மேலும் உங்கள் பிரச்னை தோல் சம்பந்தப்பட்டதாக இருப்பின், நல்ல தோல் நிபுணரைப் பார்ப்பதே சிறந்தது. சாதாரணமாக கழுத்து கறுப்பாக இருப்பின் ப்ளீச் செய்வது நல்லது.

? என் வயது 17. நான் சிவப்பு நிறம். என் முகத்தில் நிறைய பருக்கள் உள்ளன. கிரீம்ஸ் யூஸ் பண்ண எனக்குப் பயமாக உள்ளது. சந்தனம் பூசியும் போகவில்லை. என் தோழி சொன்னாள், வெளிநாட்டிலிருந்து வரும் கிரீம் ஒன்றைத் தடவினால் போய்விடும் என்று. இதனால் ஏதாவது பின் விளைவு வருமா?
ஆழியூர், டி. சூரத்நிஸாதாவூது.
! நீங்கள் யூஸ் பண்ணும் கிரீம் எந்த வகையைச் சேர்ந்தது, அதன் பின் விளைவுகள் என்ன என்பதை அறியாமல் முகத்தில் போடக் கூடாது. இதனால் பரு அதிகமாக வாய்ப்புகள் உள்ளது. முகத்தில் பரு வருவதற்கு உடம்பில் கொழுப்புச் சத்து அதிகம் இருப்பதும் ஒரு காரணமாகும். சந்தனம் பூசுவது முகத்திற்கு நல்லதுதான். கூடவே சிறிது பன்னீரும் சேர்த்துக் கொள்ளலாம்.

? நான் நல்லெண்ணெய் தேய்த்து சிகைக்காய்+வெந்தயம் அப்போதைக்கப்போதே அரைத்துத்தான் குளிக்கிறேன். இருந்தும் என் முடி சிவந்தும் வெடித்தும் உள்ளது. நுனி மட்டும் அல்லாமல், மேல் முடியும் வெடித்துள்ளது. முடி சிவப்பு நீங்கவும், வெடிப்பில்லா

## மங்கையர் மலர் & மீரா ஹெர்பல் பவுடர் இணைந்து வழங்கும் கூந்தல் பராமரிப்புப் பக்கங்கள்

மல் வளரவும் என்ன செய்வது?
டி.பரமத்தி, வி. சிவகாமி.
! முடி வெடிப்பு இல்லாமலும் பொலிவாக இருக்கவும் சிறிது conditioning effect கொடுக்க வேண்டும். சிகைக்காய் + வெந்தயத்துடன் நாட்டு மருந்துக்கடையில் கிடைக்கும் பூந்திக் கொட்டையும் சேர்த்து அரைத்துக் குளிக்கலாம். அரப்பு கூட முடிக்கு நல்லது. சீகைக்காய் + வெந்தயம் அரைத்த விழுதுடன் அரப்பு சேர்த்துக் குளிக்கலாம். தலைக்குக் குளித்ததும் மெதுவாக சிக்கு எடுத்து நுனியை நன்கு வாரி பின்னினால் வெடிப்பு ஏற்படாது. தலை காயாமல் வாரக் கூடாது.

? எனக்கு மூக்கின் இரு பக்கங்களிலும் கறுப்பாக ரொம்ப நாட்களாக இருக்கிறது, இதை போக்குவது எப்படி? இது எதனால் வருகிறது. எனக்கு வயது 23 மட்டுமே. (என் தலையில் பொடுகு இருக்கிறது) மற்றும் என் முதுகில் கறுப்பு கறுப்பாக இருக்கிறது. இதனால் ரவுண்ட் நெக் ஜாக்கெட் போட கஷ்டமாக இருக்கிறது. இதையும் போக்குவது எப்படி?
! உங்கள் தலையில் உள்ள பொடுகு பிரச்னையால்தான் மூக்கு, முதுகு இவற்றில் எல்லாம் கறுப்பு, கறுப்பாக உள்ளது. என்னதான் ப்ளீச் ஃபேஷியல் எல்லாம் செய்தால் கூட அடிப்படை காரணமாகிய பொடுகை நீக்க வேண்டும். இதற்கு நீங்கள் தினம் வெறும் வயிற்றில் வெந்தயம் + கருவேப்பிலை சாப்பிடலாம். பொடுகு அதிகமாகக் காரணம் உடம்பில் இரும்புச்சத்து குறைவாக உள்ளதுதான். இரும்புச் சத்து குறைவுக்கு நல்ல டாக்டரிடம் சென்று சிகிச்சை எடுக்கலாம்.

# "நீதி நிர்வாகத்தையும் இல்லற நிர்வாகத்தையும் சரிக்கட்ட வேண்டியிருந்தது!".



திருமதி. மாலதி தியாகராஜன்
A-4, நர்மதா அபார்ட்மெண்ட், 53, சுப்பிரமணியம் தெரு, அபிராமபுரம்,
சென்னை – 600 018. போன் : 4995877

**"எனது கணவர் தனது அலுவலக வேலையிலேயே மூழ்கிக் கிடப்பவர். குழந்தைகளோ அவரவர் தனது வாழ்க்கையில் நன்கு வேரூன்றி விட்டனர். நான் வீட்டை அமைதியாகச் சமாளிக்கும் அதே சமயம், எனது பணத்தைப் பெருக்குவதற்கு நம்பகமான ஒரு நிறுவனம் எனக்குத் தேவையாக இருந்தது".**




**ராம் காஷ்யப் நிறுவனத்தின் சிறப்பு அம்சங்களை கண்டறியுங்கள்**

- வட்டி வழங்குவதிலும் அசலைத் திருப்பிக் கொடுப்பதிலும் நம்பிக்கைக்கு CARE நிறுவனத்தார் கொடுத்துள்ள தகுதிச்சான்று 'BBB-FD' (அதாவது போதிய பாதுகாப்பு)
- பங்கு வெளியீடு முதல் ஃபிக்ஸட் டெபாசிட் வரை மக்களிடம் பெற்றிருக்கும் பூரண நம்பிக்கை.
- நேர்மைக்கும் செயலாற்றலுக்கும் பெயர் பெற்றவர்களைத் தன்னகத்தே கொண்டு திறமையான சேவை அளிக்கிறது.
- தமிழ்நாடு மற்றும் ஆந்திராவிலுள்ள எல்லா முக்கிய நகரங்களிலும் கிளைகள். (அது மட்டுமல்லாமல் நாடு முழுவதிலுமே கிளைகளைத் துவக்க உள்ளது).

* குமுலேடிவ் டெபாசிட் திட்டத்தில்

**கடின உழைப்பால் ஈட்டிய உங்கள் பணத்தைச் சிறந்த முறையில் நிர்வாகம் செய்ய உத்திரவாதம் இதுவே.**



**Ram Kaashyap Investment Ltd**

**உலகக் கண்ணோட்டம்; தனி மனித மேம்பாடு**

**பதிவு அலுவலகம் :** 53, பிஷப் கார்டன் (கிரீன்வேஸ் சாலை அருகில்), சென்னை – 600 028. போன் : 4936931, 4936932

**நிர்வாக அலுவலகம் :** மூகாம்பிகா காம்ப்ளெக்ஸ், 5 'D' ஐந்தாவது மாடி, 4, லேடி தேசிகாச்சாரி ரோடு, ஆழ்வார்பேட்டை, சென்னை – 600 018. போன் : 4995148.

கிளைகள் : • சென்னை : • மயிலாப்பூர் • மேற்கு மாம்பலம் • அண்ணா நகர் (கிழக்கு) • அடையாறு • கோயம்புத்தூர் • திருச்சி • தஞ்சாவூர் • கும்பகோணம் • மதுரை • விஜயவாடா • சித்தூர் • ஹைதராபாத் • செகந்திராபாத் • விசாகப்பட்டினம் • ராஜமுந்திரி • பெங்களூர்

**டெபாசிட் திரட்டும் விழா நடைபெறுகின்றது**

சட்ட பூர்வமான ஃபிக்ஸட் டெபாசிட் விளம்பரம் 30.05.1995 தேதியிட்ட 'ஹிந்து' நாளிதழில் வெளியிடப்பட்டுள்ளது.

insight 1929

Ad start

பரிசு பெற்ற கட்டுரை

# குழந்தையை அழகாக வளர்க்க...

## நல்ல ஒழுக்கத்தைக் கற்றுக் கொடுங்கள்

குழந்தைகளுக்கு விபரம் புரிய ஆரம்பித்த வயதில் (5, 6 வயதுக்கு மேல்) நானும், என் கணவரும், குழந்தைகள் வகுப்பில் முதல் ராங்க் வாங்க வேண்டும், 90, 95 மார்க் வாங்க வேண்டும் என நினைக்கவில்லை. முதலில் அவர்களுக்கு நல்ல பழக்க, வழக்கம் கற்றுக் கொடுக்க வேண்டும் என்பதில் உறுதியாக இருந்தோம். கண்டித்தோ, அடித்தோ, பிள்ளைகளை வழிக்குக் கொண்டு வர முடியாது.

"முன்னேறு செல்லும் பாதையில்தான் பின்னேறு செல்லும்" என்பதை புரிந்து கொண்டு நாங்களும் எங்கள் குழந்தைகளோடு குழந்தைகளாகி கற்றுக் கொடுத்தோம்.

முதலில் காலையில் விழித்த உடன் படுக்கையை மடித்து வைப்பதில் ஆரம்பித்தோம். அதற்காக நாங்களும் குழந்தைகள் விழித்தவுடன் அவர்கள் கவனிக்கும்படி எங்கள் படுக்கையை உதறி மடித்து வைப்போம். அப்பொழுது 'குட்டி பையா இன்று நீதான் உன் படுக்கையை பர்ஸ்ட் மடித்து வைக்கப் போகிறாய்' என்று பேசிக் கொண்டே செய்வோம். ஒரு மாதத்திற்குள் படுக்கையை மடித்து வைத்து விட்டுத்தான் அடுத்த வேலை என பழகினார்கள். அதே போல் அவர்களுக்கு, பல் தேய்க்கும் போது கீழ் பற்கள் தேய்க்க வேண்டும், வாய் கொப்பளிக்கும் போது நுரை போக, ஒருவிரலால் பற்களை லேசாக அழுத்தி கழுவ கற்றுக் கொடுத்தோம். நானோ, என் கணவரோ, ஒருவர் அவர்களு டன் பல் தேய்ப்போம்.

அடுத்து சாப்பிடும் போது ஒரு பருக்கை கூட கீழே சிதறாமல், சாப்பிடும் போதும், காய் கறி தோல், அல்லது பழம் சாப்பிடும் தோல் இவற்றை அருகில் ஒரு பேப்பர் அல்லது தட்டு வைத்து குப்பைகளை அதில் போட பழகிக் கொடுத்தோம். சாப்பிட்டு முடிக்கும் போது தட்டில் சாப்பாட்டை மிச்சம் வைக்காமல் நாங்களும் சாப்பிட்டதால், குழந்தைகளும் அநாவசியமாக வீணாக்காமல் எதையும் சாப்பிட கற்றுக் கொண்டார்கள்.

இந்தப் பழக்கம் உறவினர் வீட்டிற்குச் செல்லும் போது, பாரேன் குழந்தைகள் சாப்பிடும் அழகை, அது சாப்பிட்ட தட்டை தானே கழுவி வைக்கும் அழகென்ன, குழந்தைகளை அழகாக வளர்த்திருக்கிறாள் என எங்களுக்கு நல்ல பெயர் வாங்கிக் கொடுத்தது.

டீ.வி. அதிகமாக பார்ப்பதைவிட புத்தகங்களைப் படிக்கும் பழக்கமே அறிவை வளர்க்கும் என்பதால் நாங்களும் டீ.வி. பார்ப்பதை குறைத்துக் கொண்டு புத்தகங்கள், செய்தித் தாள்களை வாசிப்போம். அந்த நேரம் குழந்தைகள் கையில் குழந்தைகளுக்கான புத்தகங்கள் வாங்கி படிக்கக் கொடுத்தோம். நாங்கள் இடை இடையே நல்ல சுவையான பத்திரிகை விஷயங்களை நகைச்சுவையுடன் பரிமாறிக் கொள்வோம். அதே பழக்கம் அவர்களுக்கும் தொற்றிக் கொண்டது. படிப்பதில் ஏதோ சுவை இருக்கிறது என்பதை புரிந்து கொண்டு கவனமாக படித்துத் தங்களுக்குள் பரிமாறிக் கொண்டார்கள்.

இப்படியே எல்லா விஷயமும் ஒழுங்காக கவனமாக செய்ய கற்றுக் கொண்டதால் எதைச் செய்தாலும் கவனமுடன், பிறர் கவனத்தை ஈர்க்கும் வகையில் செய்தனர். இதே கவனமுடன் பள்ளிப் பாடங்களையும் படித்து அதிலும் சிறந்து விளங்கினர். நாங்கள் அவர்களை படிப்பதற்காக அடித்ததே இல்லை.

இன்று என் மகன் கம்ப்யூட்டரில் அதிகாரியாக டில்லியில் இருக்கிறான். அவன் சும் நண்பர்கள் எப்படி உன்னால் டென்ஷன் இல்லாமல் எல்லா காரியமும் செய்ய முடிகிறது என ஆச்சரியப்படுவார்களாம். என் மகள் கல்லூரியில் பேராசிரியையாக இருக்கிறாள்.

இவையெல்லாம் நாங்கள் அழகாக குழந்தைகளை வளர்த்திருக்கிறோம் என பெருமிதப் படவைக்கிறது.

**வள்ளியம்மாள் தனசேகரன்,**
**சென்னை - 51.**

**பிரசுரத்திற்கு....**

## பொறுமையும் நிதானமும் வேண்டும்

என் பேத்திக்கு ஒரு வயது 9 மாதம் தான் ஆகின்றது. மிகவும் துரு துருவென்று இருக்கும். பெயர் ஐஸ்வர்யா. (ஐஸூ என்று செல்லமாகக் கூப்பிடுவோம்) அரைகுறையாக பேசுவாள்.

ஒரு வாரம் என் பெண்ணின் வீட்டில் தங்கி இருக்கும்படி சூழ்நிலை அமைந்தது.

**இந்த மாதம் பரிசுக் கட்டுரைக்கு**

**மீராவின்**

**அன்பளிப்பு ரூ. 1000 மதிப்புள்ள குக்கர்**

**அடுத்த மாதம் போட்டிக்கான கட்டுரை.... பொருள் :**

**'நான் கண்ட புது ஹேர்-ஸ்டைல்....'**

**கடைசி தேதி : 15.1.96**

தினம் என் பேத்தி குளிக்க, பல் தேய்க்க, டிரஸ் போட்டு, பொட்டு வைக்க என ஒரே கலாட்டாதான். என் பெண் ஒரு சமயம் குழந்தையை அடித்தும் விடுவாள்.

"இன்று குழந்தைக்கு நான் டிரஸ் செய்து விடுகிறேன், நீ போ" என்று என் பெண்ணை அனுப்பிவிட்டு என் பேத்தியிடம் சென்றேன்.

"ஐசுமா, நான் கடைக்குப் போகின்றேன். உனக்கு சாக்லேட், பழம் வாங்க வேண்டும் வருகின்றாயா" என்றதும், "உம்" என்று தலை ஆட்டியது. "நான் குளித்து ரெடியாகி விட்டேன். நீ குளிக்க வேண்டாமா?" என்றதும் வந்து விட்டது. "ஐசுமா. ஈ. ஈ என்று சத்தம் வரும் வரை பல் தேய்த்தால்தானே சாக்லேட்டை கடித்துச் சாப்பிட முடியும் உனக்கு என்ன அழகான பற்கள், தேய்க்கட்டுமா" என்றதும் தலையை ஆட்டியது. என் விரலில் பேஸ்டை வைத்து தேய்த்ததும் ஈ, ஈ, எனச் சத்தம் வரவும் அவளுக்கு மிகவும் குஷியாகி விட்டது.

"வாசனை சோப்பு எவ்வளவு நன்றாக இருக்கின்றது" எனச் சொல்லியபடியே தண்ணீர் ஊற்றி அழைத்து வந்தேன். "எவ்வளவு அழகான சிகப்பு கலர் டிரஸ்" என்று சொல்லியபடியே கவுனை போட்டு விட்டேன்.

"பொட்டு கலர் கலராக வைத்தால் ஐஸூ எவ்வளவு அழகாக இருக்கும்! கண்ணாடியில் காட்டுகின்றேன்" என்றும், "உனக்கு எந்தக் கலரில் பொட்டு வேண்டும்" என்று கலர் சாந்து குப்பிகளை காட்டினேன். அதற்குப் பிடித்த 2 கலர்களை காட்டியது. அதையே வைத்துவிட்டு கண்ணாடியில் காட்டினேன்.

குழந்தைக்கு ரொம்பவும் குஷியாகிவிட்டது. என் மாப்பிள்ளையிடமும் பெண்ணிடமும் சென்று தான் அழகாக டிரஸ் செய்து கொண்டதாக காண்பித்துக் கொண்டது. நான் வரும் வரையிலும் தினமும் இன்று என்ன கலர் பொட்டு வைத்துக் கொள்ளலாம், எங்கு போகலாம் என பேசிக் கொண்டே குளித்து, அழகாக டிரஸ் செய்து கொண்டு ரெடியாகிவிடும்.

குழந்தையை அழகாக வளர்க்க, பொறுமையும், நிதானமும் அவசியம் வேண்டும் என்று என் பெண்ணிடம் சொல்லி விட்டு வந்தேன்.

**– புவனா பிரகாஷ், ஸ்ரீநிவாசபுரம்.**

## எல்லாம் தெரியணும்

ஒருமுறை எங்கள் வீட்டிற்கு உறவினர் ஒருவர் வந்து இருந்தார். கூட அவரை வரவேற்று காப்பி கொடுத்து டிபன் சாப்பிட்டு விட்டுச் செல்லலாம் என்று சொல்லி அவரிடம் என் கணவர் பேசிக் கொண்டு இருந்தார். பிறகு என் குழந்தைகளைப் பற்றி பேசிக் கொண்டு இருந்தார். என் 8 வயது மகனை அழைத்து அவன் பெயர், படிக்கும் வகுப்பு, பாடங்கள், புத்தகங்கள், வாங்கும் ரேங்க் என்று எல்லாவற்றையும் கேட்டு கூச்சம் நிறைந்த என் மகனை கலகலக்க வைத்துக் கொண்டிருந்தார். பிறகு குறள், செய்யுள் என சிலவற்றை சொல்லச் சொன்னார்.

அப்போது நான் என் மகனை அழைத்து சட்னிக்குக் கடலை இல்லை என்று வாங்கி வரச் சொன்னேன், அப்போது என் பாட்டி, "அவனை அனுப்பாதே அவனுக்கு இதெல்லாம் எதுவுமே தெரியாது, நானே போறேன்" என்று கிளம்பினார்.

"இருங்க" என்று என் பாட்டியை உறவினர் தடுத்தார். "கடை எங்கே இருக்கு?" என்று கேட்டார்.

"இங்கே பக்கத்தில்தான் ரெண்டே எட்டில்!"

"ரோட்டைக் கடக்கணுமா?"

"அதெல்லாம் இல்லே இப்படியே பிளாட்பாரத்தோட போய் இடது பக்கம் திரும்பினா முக்கில கடை, இதோ வந்திடறேன், இட்லி சாப்பிட்டுப் போகலாம்" என்று என் பாட்டி கிளம்பினார்.

"கண்டிப்பா இருந்து, இட்லி சாப்பிட்டுப் போறேன். நீங்கள் இருங்க, பையனை வாங் கிட்டு வரச் சொல்லுங்க."

விருப்பமில்லாமல் அரைமனதுடன் பையனிடம் காசைக் கொடுத்து அனுப்பினார் என் கணவர். பையனை அனுப்பி விட்டு ஏதோ முக்கிய விஷயம் பேசப் போகிறார் என்று எண்ணினோம்.

"பையன் போயிட்டாங்க. அவன் கேட்கக் கூடாத சமாச்சாரம் ஏதும் இருக்கா?" என்று நாங்கள் கவலையுடன் கேட்டோம்.

உறவினர் சிரித்தார்.

"என்னங்க! பையனுக்கு எட்டு வயது ஆகி றது, உடைச்ச கடலை வாங்கக் கூட அவனுக் குத் தெரியாதுன்னு நீங்களே முடிவு பண்ணிக் கிட்டிருந்தால், பையன் கதி என்ன ஆகிறது? ரோட்டைக் கடந்து கடைக்குப் போகணும்னா லும் யோசிக்கணும். அது கூட இல்லே. பேசின வரை, பையன் புத்திசாலிதான், நீங்கள்தான் அவனைக் குறைவா மதிப்புப் போடறீங்க. அவன் படிப்பைத் தவிர ஒன்றுமே தெரியாத கிணற்றுத் தவளையா ஆயிட்டா, அதுக்குக் காரணம் நீங்கதான். குழந்தைகளுக்கு எல்லாம் தெரியணுங்க. அப்பத்தான் அவங்க வருங் காலம் சிறப்பா இருக்கும். திடீர்னு அனுபவ மும் திறமையும் வந்திடுமா என்ன? மார்க்கெட் டுக்குப் போகும் போது, கூடவே கூட்டிக்கிட் டுப் போங்க. எல்லாத்தையும் வாங்கத் தெரிஞ் சுக்கட்டும்."

என் கணவர் அசந்து நின்றது தெரிந்தது. "இந்தக் கோணத்தில் இதுவரை பார்த்ததே இல்லீங்க. இப்படி யாருமே சொன்னது கூட இல்லே!" என்றோம்.

– பி. மாலா பாபு, சேலம்.

## புற அழகுடன் அக அழகும் கூடும்

**வா**ழ்க்கை என்னும் கடல் கட்டுக்குள் இருக்க எப்படி 10 கட்டளைகளை பின்பற்ற வேண்டுமோ, அது போலவே குழந்தை அழ காக வளர, 10 கட்டளைகளை பின்பற்ற வேண் டும்.

கட்டளை 1 : தாயின் தாய்ப்பால் - பிறந்த 2 மணி நேரத்திலிருந்து குறைந்தது ஒரு வருடம் வரை குழந்தைக்குக் கிடைப்பது.

கட்டளை 2 : குழந்தை பிறந்த பின் போட வேண்டிய தடுப்பு ஊசிகள் பி.ஸி.ஜி., டிரிபிள் ஆன்டிஜன், ஓரல் போலியோ, டி.டி. போன்ற வற்றை அந்தந்த காலக் கட்டத்தில் கொடுப் பது.

கட்டளை 3 : தொப்புள் கொடி விழுந்த பின்னர், 9 மாதம் வரை, விடியற்காலையில் தலை உச்சி, புருவங்கள், மற்றும் உள்ளங்கால் பகுதிகளில் ஒரு சொட்டு ஒரே ஒரு சொட்டு விளக்கெண்ணெய் தேய்த்து விட்டால், கிதோஷ்ண நிலை பாதிப்பு இருக்காது.

கட்டளை 4 : அடர்த்தியான புருவங்கள் பெற, தவறாமல் நாள்தோறும் புருவங்களில் தடவினால் பிரமிக்கத்தக்க வளர்ச்சி இருக்கும்.

கட்டளை 5 : 3 மாதம் ஆன பிறகு சிறிய அளவில் சத்தான கஞ்சியும் சேர்த்து கொடுக்க வேண்டும். 6 மாதத்தில் சிறிய அளவில் திட உணவு - மசித்த உருளைக் கிழங்கு (அ) கேரட், சிறிய வாழைப்பழத் துண்டு, குறைந்த அளவு கீரை என கொடுக்கத் துவங்க வேண்டும்.

கட்டளை 6 : 4 மாதம் ஆனவுடன் குழந் தையின் இரண்டு கால்களிலும் ஆலிவ் எண் ணெய் தடவி 1 மணி நேரம் காலை இளம் வெயிலில் படும்படி விடுவது ஆரோக்கிய மான, வலுவான கால்களுக்கு நாம் போடும் உரம்.

கட்டளை 7 : கடலை பருப்பு, முழு பயிறு, எலுமிச்சை மூடி (சிறிய அளவில்) ரோஜா மொட்டு, வெட்டி வேர், கசகசா, கஸ்தூரி மஞ் சள் இலைகளை நன்கு மைய அரைத்து, சோப் பில்லாமல் இந்தப் பௌடரை உபயோகப் படுத்திக் குளிப்பாட்டினால் குழந்தை தங்க நிற மாக மின்னுவான்.

கட்டளை 8 : கூடிய வரையில் அலோ பதியை அதிகம் உபயோகிக்காமல் இருப்பது ஆரோக்கியம். தேவையானால் இந்திய மருந்து களை பயன்படுத்தலாம்.

கட்டளை 9 : நல்ல சூழ்நிலை, ஆரோக்கிய மான சுற்றுப்புறம், இனிய இசை - இவை குழந்தையின் அழகை பராமரிக்கும்.

கட்டளை 10 : பெற்றோராகிய நாம் சொல் லிக் கொடுக்கும் நல்ல பழக்க வழக்கங்கள் - அவர்களின் உள் அழகை அள்ளிக் கொண்டு போகும்.

என் வாழ்வில் நான் நடைமுறையில் அனுபவித்தது மேற்கூறிய 10 கட்டளைகளும். இவற்றைப் பின் பற்றினால் புற அழகுடன் அக அழகும் கூடிய குழந்தைகள் உருவாகும்.

- டி. இராஜேஸ்வரி,
சென்னை - 8.

**தக்காளி சூப் நீர்த்து இருந்தால் மாவு கரைத்து விடுவதற்கு பதில் அதில் ஒரு வெந்த உருளைக் கிழங்கை மசித்து சேர்க்கவும். சத்தும், ருசியும் அதிகரிக் கும்.**

**– உஷா.**



வேர்க்குரு பவுடர், முகப்பரு க்ரீம், ஆன்டிஸெப்டிக் லோஷன், பொடுகு ஷாம்பூ, பியூட்டி சோப்...

# அதெல்லாம் மறந்துவிடுங்கள்.



மறக்காமல் ஒரு ஆயுர்வேத குளியல் தினசரி எடுத்தால் போதும். 18 மூலிகைகள் கலந்த பரிசுத்த தேங்காய் எண்ணெயில் தயாரான மெடிமிக்ஸ் ஆயுர்வேத பாத் சோப் வாங்குங்கள். விலை ரூ. 6.50* மட்டுமே.

**வேர்க்குருவை மறந்துவிடுங்கள்** - மெடிமிக்ஸ் சோப்பிலுள்ள கஸ், ஆனந்த மூல் மற்றும் தனியா வேர்க்குருவை எதிர்க்கின்றன.

**முகப்பருவை மறந்துவிடுங்கள்** - மெடிமிக்ஸ் சோப்பிலுள்ள சித்ரக் மற்றும் தாரு-ஹரித்ரா முகப்பருவை தடுக்கின்றன.

**ஸெப்டிக்கை மறந்துவிடுங்கள்** - மெடிமிக்ஸ் சோப்பில் சருமத்தை பாதுகாக்க சிறந்த இயற்கை ஆன்டிஸெப்டிக் குக்கல், தேவதாரு மற்றும் நிம்பா துவக் உள்ளன.

**பொடுகை மறந்துவிடுங்கள்** - மெடிமிக்ஸ் சோப்பிலுள்ள வாச்சா, பாகுச்சி மற்றும் யஷ்டிமது பொடுகை எதிர்த்து போராடுகின்றன.

**அழகு சாதனங்களை மறந்துவிடுங்கள்** - மெடிமிக்ஸ் சோப்பிலுள்ள குடஜா, ஜீரா, வாயுவிடங்க, ஜ்யோதிஷ்மதி, மகாபாரிவாச்சா, ஆரண்யஜீரகா மற்றும் மதுஸ்னுஹி ஆகியவை வியர்வை நாற்றத்தை அகற்றுவதுடன் சருமத்திற்கு அழகூட்டுகின்றன.

**பக்க விளைவுகளை மறந்துவிடுங்கள்** - ஆயுர்வேதத்தில் நம்பிக்கை வையுங்கள். உங்கள் குடும்பத்தினருக்கு கேசம் முதல் பாதம் வரை முழுமையான பராமரிப்பை மெடிமிக்ஸ் ஆயுர்வேத பாத் சோப் மூலம் தினசரி அளியுங்கள்.

* Per 75g. pack

பரிபூரண
ஆயுர்வேத
குளியலுக்கு




குடும்ப
பராமரிப்பு சோப்
**மெடிமிக்ஸ்**

இப்போது கண்கவரும் புதிய பேக்கில்

# 1995ல் பரபரப்பாகப் பேசப்பட்ட பெண்மணிகள்

**டயானா**

**1995**ஆம் ஆண்டில் டயானா சார்லஸ் பி.பி.சி. தொலைக்காட்சிக்குப் பேட்டி கொடுத்ததின் மூலம் பரபரப்பாக உலகெங்கும் பேசப்பட்ட பெண்மணியானார். சார்லஸிடமிருந்து பிரிந்து வாழ்ந்தாலும் டைவர்ஸ் பெறும் எண்ணம் இவருக்கு இல்லை. சார்லஸ் பட்டத்து அரசராகிவிடக் கூடாது என்பதில் உறுதியாக இருக்கிறார்! சார்லஸ் தனக்குச் செய்த துரோகத்தை டி.வி. பேட்டியில் பட்டியல் இட்டார் டயானா. தனது மகன் வில்லியம்ஸின் நலன் கருதியும் வருங்காலத்தில் அவன் இளவரசர் பொறுப்பு வகிக்க வேண்டும் என்பதாலும் டைவர்ஸ் பற்றி சிந்திக்கவில்லை என்கிறார் டயானா. இங்கிலாந்து ராணியின் குடும்பம் டயானாவுடன் இப்போது பேச்சு வார்த்தையைத் துவக்கியிருக்கிறது.

**ஆங்சான்சூகியி**

பர்மா நாட்டின் தேக்கு புகழ்பெற்றது! ஒரு காலத்தில் இந்தியாவிலுள்ள கட்டிடங்களுக்காக பர்மா தேக்கை கொண்டு



• ஹிலாரி



• சந்திரிகா



• தஸ்லிமா நஸ்ரின்

• ஆங்சான்சூகியி

வந்ததுண்டு! இன்று பர்மா நாட்டின் பெயரே மாறிவிட்டது. மியான்மர் என்று மாற்றப்பட்டுள்ள பர்மா நாட்டில் இராணுவ ஆட்சி நடைபெறுகிறது. பர்மா நாட்டில் ஜனநாயகம் தழைத்தோங்க வேண்டும் என்பதற்காக குரல் கொடுத்து வருபவர் ஆங்சான் சூகிவி. மியான்மர் நாட்டின் பிரபல சுதந்திரப் போராட்டத் தலைவர் ஆங்சானின் மகளான இவர் 1988ல் நாட்டில் ஏற்பட்ட குழப்பத்தை அடுத்து உருவெடுத்த ஜனநாயக ஆதரவு இயக்கத்திற்குத் தலைவியானார். இராணுவ ஆட்சியை எதிர்த்து குரல் கொடுக்க ஆரம்பித்தார். ஜனநாயக தேசிய லீக் கட்சியை நிறுவி 1990ஆம் ஆண்டு தேர்தலில் போட்டியிட்டு அமோகவெற்றி பெற்று ஆட்சியை பிடிக்க வேண்டிய தருணத்தில் சூகியை காவலில் வைத்தது இராணுவம். தேர்தலுக்கு முன்பே 1989ஆம் ஆண்டே வீட்டுக் காவலில் வைக்கப்பட்டார்.

இவருடைய போராட்டம் சிறைச் சாலையிலும் தொடர்ந்தது. இராணுவம் ஆட்சியை ஒப்படைக்க மறுத்தது. 1991ஆம் ஆண்டு அமைதிக்கான நோபல் பரிசு பெற்றார். 1995ஆம் ஆண்டில் விடுதலை செய்யப்பட்டு இருக்கிறார். இவருடைய உரத்த குரல் பர்மா தேசம் முழுவதும் எதிரொலிக்கிறது. இவருக்கு பாராட்டுக்களும், பரிசுகளும் உலகெங்கும் கொடுக்கப்பட்ட போதிலும் தன் தேசத்தை விட்டு வெளியே வர இவர் தயாரில்லை! வேறு நாட்டிற்குச் சென்று விட்டு மீண்டும் மியானமர்குள் கால் எடுத்து வைக்க இராணுவ ஆட்சி தடை போட்டு விடுமோ என்று ஐயப்படுகிறார். ஐம்பது வயதான இந்த சுதந்திரப் போராட்ட வீராங்கனையின் போராட்டம் ஓயவில்லை.



• டயானா

## ஹிலாரி கிளின்டன்

ஹிலாரி கிளின்டன் அமெரிக்க ஜனாதிபதியின் மனைவி. இவரை "நிழல் அதிபர்"என்று கூட அமெரிக்கப் பத்திரிகைகள் சொல்கின்றன. ஆனால் இதை ஹிலாரி மறுக்கிறார். இவருடைய ஆலோசனையை ஜனாதிபதி கேட்பதுண்டு. உலகின் முக்கியமான நாடுகளுக்கு அடிக்கடி ஹிலாரி விஜயம் செய்கிறார். இதனால் அந்த நாடுகளுடன் உறவு வலுப்பெறும் என்று கிளின்டன் நம்புகிறார். ஹிலாரி தனது சுற்றுப் பயணத்தின் போது மகளிர் மேம்பாட்டில் அதிக அக்கறை காட்டுகிறார். உலக மக்கள் தொகையில் பெண்களின் பங்கு சரிபாதியாக இருப்பினும் பல நாடுகளில் பெண்களுக்குக் கல்வியறிவு, பொருளாதாரம், சுகாதாரம் ஆகியவற்றில் போதுமான வாய்ப்புகள் இல்லை என்பது இவரது வாதம். டில்லியில் ராஜீவ் காந்தி பவுண்டேஷனில் பேசும் போது கூட இதைக் குறிப்பிட்டார்.

குடும்பம் என்பது எப்படி பரஸ்பரம் விட்டுக்கொடுப்பதின் மூலம் ஒழுங்காக நடைபெறுகிறதோ அதே போன்று வளர்ந்து வரும் நாடுகளும் வளர்ந்து விட்ட நாடுகளும் ஒன்றை ஒன்று புரிந்து கொண்டு செயல்பட வேண்டும் என்பது ஹிலாரியின் விருப்பம்.

"பல ஆண்டுகளுக்கு முன்பு கிளின்டனைவிட நான் அதிகமாக சம்பாதித்தேன். அப்போது என்னால் குடும்பம் சிறப்பாக நடந்தது. இன்று என் கணவர்தான் சம்பாதிக்கிறார். அவரால் குடும்பம் சிறப்பாக நடக்கிறது. எங்களுக்குள் ஈகோ பிரச்சனை இல்லை, என்று இவர் வங்க தேச மகளிரிடம் சொன்னபோது எல்லோரும் மூக்கின்மேல் விரல் வைத்தார்களாம்! சீனாவில் நடந்த பெண்கள் மாநாட்டில் ஹிலாரி கலந்து கொண்டு 'பெண்கள் பிரச்சனைப் பொருளாக இல்லாமல் பிரச்சனைகளைத்

தீர்ப்பவர்களாக இருக்க வேண்டும்'என்று சொன்னதை எல்லோரும் கைதட்டி வரவேற்றார்கள்.

### சந்திரிகா

இலங்கை குட்டி நாடானாலும் நீண்ட காலமாகத் தமிழர் பிரச்சனையைத் தீர்க்காமல் இருந்து வந்திருக்கிறது. திருமதி பண்டார நாயகாவிற்குப்பின்(பண்டார நாயகா பிரதமராக இருந்தவர். சந்திரிகாவின் தாயார்) இன்று அதிபராகி ஆட்சி பீடத்தில் இருப்பவர் திருமதி சந்திரிகா. இலங்கையில் ஜனநாயகம் இருக்கிறது. அமைதியின் பேரில் வாக்கு கேட்டு 63 சதவிகிதம் ஓட்டு பெற்றவர் சந்திரிகா. ஆனால் இன்று யாழ்பாணம் எரிந்து கொண்டிருக்கிறது. அரசின் கட்டுப்பாட்டில் வந்து விட்டது. சந்திரிகா லண்டனில் இலங்கையின் அரசியல் வன்முறை பற்றி ஆராய்ச்சி மேற்கொண்டவர். மனித உரிமை அமைப்புக்களோடு நெருங்கிய தொடர்பு கொண்டவர்.

சினிமா நடிகரான விஜயகுமாரணதுங்கேயை கைபிடித்தவர்-1988ல் விதவையானார். தீவிரவாதிகளான ஜனதா விமுக்தி பெரமுனா இயக்கத்தினர் விஜயகுமாரணதுங்கேயைக் கொன்றனர். இது சந்திரிகாவின் கண் எதிரே நடந்தது. இந்த நிகழ்ச்சி சந்திரிகாவை அரசியலில் நுழைய வைத்து, ஆட்சியைத் தக்க வைத்துக் கொள்ளவும் காரணமானது. சமாதானத்தை எல்லோரிடமும் விரும்பினார் சந்திரிகா. பாதுகாப்புப் படையினர் மீது புலிகள் சுட்டதால் சமாதான உடன்படிக்கையைத் தள்ளி வைத்து விட்டு களத்தில் இராணுவத்தை இறக்கினார்.

"பயம் என்ற ஒன்றே எனக்குக் கிடையாது. பிரச்சனைகளை சமாளிக்க லண்டனில் படிக்கும் போதே கற்றுக் கொண்டவள். எனக்கும் கவலைகள் உண்டு. என் இரண்டு குழந்தைகள் உயர் படிப்புப் படித்து நன்றாக தலை எடுக்க வேண்டும் என்பதே அது!"-என்கிறார் சந்திரிகா. இவரது அட்டைப் படத்தைப் போட்டுச் செய்திகள் வெளியிடாத அயல்நாட்டுப் பத்திரிகைகளே இல்லை!

### தஸ்லிமா நஸ்ரின்

வங்கதேச பெண் எழுத்தாளர் தஸ்லிமா நஸ்ரீன். இவர் எழுதிய ஒரு புத்தகம் சர்ச்சைக்கு உள்ளானது. முஸ்லீம் மக்களை இவரின் புத்தகம் புண்படுத்துவதாக அமைந்துள்ளது என்று சொல்லி இவரை தூக்கிலிட வேண்டும் என்று முஸ்லீம் பழமைவாதிகள் கூறிவருகின்றனர். ஆனால் தான் நிரபராதி என்னும் தஸ்லிமா இப்போது ஜெர்மனியில் தஞ்சம் புகுந்துள்ளார். மதநிந்தனை செய்ததாக அவர் மீது வங்கதேச அரசு வழக்குப் போட்டுள்ளது. தனக்கு எதிராக வழக்குத் தொடுக்க அனுமதி கோரும் தஸ்தாவேஜில் அரசு அதிகாரி கையெழுத்திட்டது செல்லாது என்று கூறி இவ்வழக்கை தள்ளுபடி செய்ய நஸ்ரீன் தரப்பில் மனு தாக்கல் செய்யப்பட்டது. இந்த மனு தள்ளுபடி செய்யப்பட்டது. இந்த வழக்கில் தஸ்லிமா நஸ்ரீன் நேரில் ஆஜராக தேவையில்லை என்று கோர்ட் கூறியுள்ளது.

இந்த பெண் எழுத்தாளருக்காக பல நாடுகள் ஆதரவு குரல் எழுப்பிய போதிலும் முஸ்லீம் பழமை வாதிகள் மனம் மாறவில்லை. நஸ்ரீன் மீதான மத நிந்தனை குற்றம் நிரூபிக்கப்பட்டால் அவருக்கு அதிகபட்சமாக இரண்டாண்டு சிறை தண்டனை கிடைக்கும். மிகத் துணிச்சலான பெண்மணியான நஸ்ரீன் கொஞ்ச காலம் வெளியுலகிற்குத் தெரியாமல் மறைந்து வாழ்ந்தார். இப்போது பத்திரிகைகளுக்கு முகம் காட்டி பேட்டி கொடுத்து வருகிறார். பெண்களின் முன்னேற்றம் அவர்களின் படிப்பறிவில்தான் இருக்கிறது என்பது இவரின் எண்ணம்.

கட்டுரை தொகுப்பு :

**கிழாம்பூர் சங்கர சுப்பிரமணியன்**

---

**இந்துப் பண்டிகைகளான பொங்கல், தீபாவளி போது உங்கள் குழந்தைகளின் அக்கம்பக்கத்து கிறித்துவ, முஸ்லீம் குழந்தைகளையும் அழைத்துக் கொண்டாடுங்கள். உங்கள் குழந்தை இரட்டைப் பூரிப்பு அடைவதுடன் ஒன்றுபட்ட சமுதாய நோக்குடன் வளரும்.**

**—கே. ஐஸ்வர்யா**





சுந்தரம் சாரீஸ்

மூல நோய். இது பெண்களுக்கும் முதியோர்களுக்கும், பொதுவாக உண்டாகும் மலத்துவார நோயாகும். அலுவலகத்தில் பணிபுரிபவர்கள், அதிக நேரம் உட்கார்ந்திருப்பவர்கள், மாமிசம், மீன், முட்டை, மிளகாய், பட்டை, லவங்கம் போன்ற உஷ்ணமான உணவு வகைகளைச் சாப்பிடுபவர்கள், வெளியூரில் வேலை செய்பவர்கள், ஓட்டல் சாப்பாட்டில் உயிர் வாழ்பவர்கள், காரமான உணவு சாப்பிடுபவர்கள், மது மற்றும் போதைப் பழக்கத்திற்கு அடிமையானவர்கள் இவர்களுக்கு மலத்துவாரத்திற்குள் மருக்களின் வடிவில் கட்டிகள் தோன்றும். இவைகளிலிருந்து சில சமயம் இரத்தம் கொட்டும்.

## உள் மூலம் :

மூல நோய்க் கட்டிகள் கூர்மையான காம்பு வடிவிலும், திராட்சைகளின் கொத்தாகவும் காணப்படும். இவைகளில் வீக்கம், எரிச்சல் உண்டாகும். இடுப்பு முதல் பாதம் வரை வலி, சோர்வு, உடல்வலி, மலத்துவாரத்தில் எரிச்சல், வீக்கம் ஏற்படும். நடமாடவோ ஓய்வு எடுக்கவோ மிகவும் சிரமமாக இருக்கும். இவைகளை மருந்தால் கரைப்பது, அகற்றுவது கடினமான காரியமாகும். அதற்குத் தற்காலிக நிவாரணம் களிம்பு, மாத்திரைகள், ஊசிகள் என்று பல மருந்துகள் பலவிதமான முறைகளில் இருக்கின்றன. ஆங்கில மருத்துவர்கள் மூல நோய்க்கு அறுவை சிகிச்சை முறையைப் பயன்படுத்தி வருகிறார்கள். இதற்கு இப்போது ஒரு புதிய சிகிச்சை முறையும் வந்திருக்கிறது. சில நிமிடங்களில் இரத்தம் சிந்தாமல் மருத்துவமனையிலும் தங்காமல் சாதாரண மனிதனும் அறுவை சிகிச்சை செய்து கொள்ளலாம் என்பதுதான் அது!

வட ஆற்காடு அம்பேத்கர் மாவட்டம், வாணியம்பாடி பஸ் நிலையம் அருகில் காதர் பேட்டை மசூதிக்குப் பின்புறத்தில் ஜஹாங்கிரான் தெருவில் நவீன அறுவை சிகிச்சை வசதிகள் கொண்ட ஒரு மருத்துவமனை அமைந்திருக்கின்றது. (போன் - 04174 - 22288, 231106) வெளிநாடுகளில் மிகவும் பரிசுத்தமான முறையில், விஞ்ஞான முறையில்' நவீன முறையில் அறுவை சிகிச்சை மருத்துவமனைகள் அமைப்பதைப் போல் வாணியம்பாடி என்னும் சிற்றூரில் ஒரு கோடி ரூபாய் பொருள் செலவில் ஒரு மருத்துவமனை அமைந்திருக்கிறது என்றால் ஆச்சரியம்தானே? இந்த நவீன மருத்துவ அறுவை சிகிச்சை மருத்துவமனையைக் கட்டியிருப்பவர் சென்னை ஸ்டேன்லி மருத்துவமனையின் முன்னாள் மருத்துவப் பேராசிரியரான டாக்டர் பி. ரியாஸ் அஹமது அவர்களைச் சந்தித்தோம்.

எம். பி. பி. எஸ்., எம்.எஸ். பட்டமும், டிப். என்.பி. என்னும் மேல்மட்டப் படிப்பும் பெற்ற இவரிடம் வாணியம்பாடியில் ஏன் இவ்வளவு பெரிய மருத்துவமனையைக் கட்டியிருக்கின்றீர்கள்? என்று கேட்டதற்கு,

அறுவை சிகிச்சை என்றால் நகரங்களுக்குத்தான் செல்லவேண்டும் என்ற நிலையை மாற்றவேண்டும் என்றுதான் இங்கு ஆரம்பித்தேன். சாதாரண பாமர மக்களும் அறுவை சிகிச்சையினால் பயனடைய வேண்டும். நான் பிறந்த ஊரான வாணியம்பாடியைச் சுற்றி 500க்கும் மேற்பட்ட கிராமங்கள் இருக்கின்றன. இங்கு வசிப்பவர்கள் பொதுவாக விவசாய கூலி வேலை செய்பவர்கள், தோல் பதனிடும் தொழிற்சாலைகளில் பணிபுரிபவர்கள்தான். இவ்வூரில் பொதுவாக பகல் நேரங்களில் மட்டுமே மருத்துவ வசதிகள் கிடைக்கின்றது. இரவு நேரங்களில் அரசு மருத்துவமனையைத் தவிர எந்தத் தனியார் மருத்துவமனையும் திறந்திருப்பதில்லை. அதனால் இவ்வூரில் இரவு நேரங்களில்தான் அதிகமான மரணங்கள் ஏற்படுகின்றன. இக்கருத்தைக் கொண்டு வருமானத்

# ஐஸ்கட்டியாக ஓர் ஆபரேஷன்



திற்கான மருத்துவமனை என்பது இல்லாமல் அவசர நிலைக்காகவே மருத்துவம் என்பதை உண்மையாக்க இந்தக் கிராமத்தில் இருபத்து நாலு மணிநேரம் ஆஸ்பத்திரி என்ற பெயரில் இதைப் பத்து ஆண்டுகளுக்கு முன்பு கட்டினேன். சென்னை அரசு ஸ்டேன்லி மருத்துவமனையின் பேராசிரியர் பதவியை வேண்டாம் என்று கூறி ராஜினாமா செய்துவிட்டு லட்சியத்திற்காக இம்மையத்தை உருவாக்கினேன். இங்கு இன்டென்சிவ் கேர் யூனிட் என்னும் அவசர சிகிச்சைப் பிரிவு இருக்கின்றது. அப்டோமன் சர்ஜரி என்னும் அப்பன்டிஸைடிஸ், வயிற்றுப்புண், குடல் புண், விரைவாதம், ஹெர்னியா, கர்ப்பப்பை கட்டிகள், கர்ப்பப்பை புண் மற்றும் அழுகிப் போன கட்டி

* டாக்டர் ரியாஸ் அஹமது



களையும் உறுப்புகளையும் உடனடியாக அகற்றிவிட்டுப் பல மனித உயிர்களைக் காப்பாற்றும் பொருட்டு அதிக நவீன வசதிகள் கொண்ட அறுவை சிகிச்சை மையத்தைக்

"மூல நோய்க்கு முன்பெல்லாம் அறுவை சிகிச்சை செய்து வந்தோம். அதற்கு மயக்கம் கொடுக்க வேண்டும். மருத்துவமனையில் குறைந்தது எட்டு நாட்கள் தங்கியிருக்க வேண்டும். இரத்த இழப்பும் ஏற்படும். அதுமட்டுமின்றி நோயாளிகள் குறைந்தது ஏழு நாட்கள் வலியால் அவதிப்பட வேண்டியிருக்கும். தினம் கட்டுப் போடும்போதெல்லாம் வலி தோன்றும். இதன் காரணமாக நோயாளிகள் ஆபரேஷன் செய்து கொள்ள தயங்கித் தயங்கி காலம் கடத்தி முற்றிய பிறகே டாக்டரிடம் வருவார்கள்.

நோயாளிகள் இந்தச் சிரமங்களைத் தவிர்ப்பதற்காக தற்போது மூல நோய்க்கு ஆபரேஷன் இல்லாத புதிய சிகிச்சை முறை ஒன்றைக் கண்டுபிடித்துள்ளனர். கிரியோ சிகிச்சை என்று இதற்குப் பெயர். இதற்கு ஒரு நவீன மிஷின் உள்ளது. இதில் கைத்துப்பாக்கி போன்ற ஒரு கருவியும், அந்தக் கருவியின் நுனியில் நீண்ட கம்பியும் இணைக்கப்பட்டிருக்கும். சிகிச்சைக்கு முன்பு நோயாளியை ஆபரேஷன் தியேட்டருக்குக் கொண்டு சென்று இனிமா மூலம் மலம், கசடுகளை வெளியேற்றுவோம். பின்பு ஆசனவாய் உட்பகுதியில் அதாவது, மூல நோய் கட்டிகள் உள்ள பகுதியில் ஓர் ஆயின்ட்மென்ட் (பசை) தடவுவோம். பின்பு துப்பாக்கிக் கருவி முனையில் உள்ள கம்பியை உள்ளே செலுத்தி, கருவியை இயக்குவோம். அப்போது கம்பி நுனியில் வெப்ப நிலை மைனஸ் 170 சென்டிகிரேடுக்கு வரும். அந்த மிகக் குளிர்ந்த நிலையில் மூலக்கட்டிகள் ஐஸ் கட்டியாக மாறி உருகி வெளியேறிவிடும். இதனால் மூலக்

***இந்த மூல நோய் எப்படி ஏற்படுகின்றது, அதற்கான காரணங்கள் என்ன?***

ஆசன வாயின் உட்பகுதியில் மூன்று இடங்களில் பட்டன் அளவில் பஞ்சு மெத்தை போல் உள்ளது. பொதுவாக இது எல்லோருக்கும் இருக்கும். இந்தப் பஞ்சு போன்ற பட்டன் இரண்டு வேலைகள் செய்கின்றது. உடனே மலங்கழிக்க வேண்டிய நெருக்கடியான சூழ்நிலை வந்து போக முடியாத கட்டம் இருந்தால் இந்த மூன்று பஞ்சு மெத்தை போன்ற பட்டன்களும் சுருங்கி இணைந்து மலம் வெளியேற விடாமல் ஆசன வாயை அடைத்துக் கொள்ளும். மற்ற நேரங்களில் காற்றை மட்டும் வெளியேற்றி மலத்தைத் தடுத்து வைத்துக் கொள்ளும். மலச்சிக்கல் காரணமாக முக்கும்போது அழுத்தம் ஏற்பட்டு இந்தப் பஞ்சு மெத்தை போன்ற பட்டன்களை அழுத்தும். இந்த அழுத்தம் காரணமாகப் பஞ்சு மெத்தை போன்ற பட்டன்கள் நாளுக்கு நாள் வீங்கிக் கொண்டே வரும். இப்படி உப்பிக் கொண்டே வந்து வெடித்துவிடும் போது இரத்தம் பீறிட்டு வெளியேறுகிறது. இதையே மூல நோய் என்கிறோம்.

***மலச்சிக்கல் ஏற்படுவது ஏன்?***

குறிப்பிட்ட நேரத்தில் சாப்பிட மாட்டார்கள். நேரம் தவறிச் சாப்பிடுவார்கள். இதனால் நேரம் தவறி மலம் போகும். மாமிச உணவு அதிகமாகச் சாப்பிடுபவர்கள் காய்கறி, கீரை வகைகளை அறவே சாப்பிட மாட்டார்கள். தண்ணீர் மிகக் குறைந்த அளவே குடிப்பார்கள். இதனால் மலம் இறுகிவிடுகிறது. சாதாரணமாக வெளியேறுவது இல்லை. எனவேதான் முக்கி வெளியேற்ற வேண்டியுள்ளது.

***தொடக்கத்திலேயே மூல நோய்க்கு சிகிச்சை பெறாவிட்டால் என்ன பாதிப்பு உண்டாகும்?***

பஞ்சு மெத்தை போன்ற பட்டன் வெடித்து இரத்தம் வெளியேறுகிறது அல்லவா? இப்படி வெடித்த பகுதியில் தொற்று நோய்க் கிருமிகள் தாக்கும்போது வலி தோன்றும். உட்கார்ந்தாலோ, சைக்கிள் ஓட்டினாலோ இந்த வலி அதிகமாகும். இந்த நிலையிலும் சிகிச்சை பெறாமல் விட்டுவிட்டால் அருகில் பரவி சீழ் கட்டிகளைத் தோற்றுவித்து விடும். பிறகு அந்த இடத்தில் சீழ் சிறிது சிறிதாக வெளியேறி உள்ளாடைகளில் பட்டுக் கொண்டே இருக்கும். துவாரம் மூடாமல் அப்படியே காணப்படும். இதை 'ஏனஸ் பிஸ்டுலா' என்பார்கள். இந்த நிலையில் ஆபரேஷன் தவிர்க்க முடியாதது.

***இப்படி மூல நோய் வராமல் தவிர்க்க வழி என்ன?***

காய்கறி, கீரை, பழவகைகள் அதிகம் உட்கொள்ள வேண்டும். கிழங்கு வகைகளைத் தவிர்த்து நார்ச்சத்து மிகுந்த உணவு வகைகளை எடுத்துக் கொள்ள வேண்டும். நிரம்ப தண்ணீர் அருந்த வேண்டும். அப்படியும் மலச்சிக்கல் ஏற்பட்டால் டாக்டரை அணுகி மலத்தைச் சீராக வெளியேற்ற சிகிச்சை எடுத்துக் கொள்ள வேண்டும். இதன் மூலம் மூல நோய் வராமல் தவிர்க்கலாம்.

மேற்கண்டவாறு டாக்டர் பி. ரியாஸ் அஹமது கூறினார்.

தொகுப்பு, படங்கள் : **ஜி. சுரேஷ்**

---

**குழந்தை வீசி எறிந்த 'மாரி பிஸ்கட்', நான் பஜ்ஜி செய்வதற்காக வைத்திருந்த கரைத்த மாவில் விழுந்துவிட்டது! அதை எடுத்து எறிய மனமில்லாமல், அதை அப்படியே பஜ்ஜி மாவில் நனைத்து பஜ்ஜி போல் போட்டு எடுத்தேன்! அந்த 'பிஸ்கட் பஜ்ஜி' ஒரு மாறுபட்ட சுவையுடன் நன்றாக இருந்தது. மறுபடியும் ஐந்தாறு பிஸ்கட்டுகளை மாவில் நனைத்து பஜ்ஜி செய்ய வேண்டியதாயிற்று!**

**– சுசீலா பொன்னுசாமி**



# புடவைக்கு ஏற்ற ரவிக்கை

* ஆத்ரேயா கோல்ட்

* லைட் எம்பிராய்டரி

கடந்த மாத இதழில் டிஸைனர் ப்ளவுஸ் பற்றிப் பார்த்தீர்கள்.

வள்ளுவர் கோட்டம், சுதந்திரத் தின பூங்காவிற்கும் நுங்கம்பாக்கம் போலீஸ் ஸ்டேஷனுக்கும் இடையில் உள்ள 'ஆத்ரேயா கார்மெண்ட்ஸ்' நிறுவனத்தின் உரிமையாளர் வசந்தா ராஜகோபாலன் இனி குறிப்பிட்ட புடவைகளுக்கு என்ன விதமாக ப்ளவுஸ் அணிவது சிறப்பு எனக் கூறுகிறார் -

**பொதுவாக டிரஸ் பற்றி உங்கள் அபிப்பிராயம் என்ன?**

"அன்றாட வாழ்க்கையில் ஏற்படும் வெற்றி தோல்விக்கும் நாம் அணிந்து கொள்ளும் உடைக்கும் மிகப் பெரிய தொடர்பு இருக்கிறது என்பது நமக்கு ஆச்சர்யம் அளித்தாலும் உண்மை அதுதான். நாம் அழகாக டிரஸ் பண்ணிக்கிட்டா பெரிய தன்னம்பிக்கை உண்டாகிறது. மனம் மகிழ்ச்சியாயிருக்கும். எதிர் தரப்பினர் நம் கருத்துக்களை ஆழமாக கவனிப்பார்கள் - இவையெல்லாம் மனோரீதி

* மிரர் வொர்க்



• வசந்தா ராஜகோபாலன்

யான உண்மைகளாக்கும்."

"சில இளம் பெண்களைப் பார்த்திருப்பீர்கள். சம்பந்தமே இல்லாத உள்பாவாடை, கொஞ்சமும் புடைவையோடு சேராத ஏதோ ஒரு ப்ளவுஸ், கண்களை உறுத்தும்படியான அடிக்கிற கலரில் ப்ரா... என்று ஒன்றோடு ஒன்று சேராதபடி அணிந்து கொண்டு எதையோ பறிகொடுத்தவர்கள் போல அலங்கோலமாக காட்சி தருவார்கள். அதே, ஐம்பது வயதிலும் அழகு குறையாமல் மிக நேர்த்தியாக, பாங்கு மாறாமல் உடுத்தும் பெண்களும் இருக்கத்தான் செய்கிறார்கள். அலங்கோலமாக இல்லாமல் பொருத்தமாக உடுத்துவது என்பது தனிக்கலை."

**"பொதுவாக எல்லாப் பெண்களுக்குமே ஓரளவு 'மேட்சிங்' ரவிக்கைகளைப் பற்றித் தெரிந்து வைத்திருப்பார்கள். எந்தெந்த விதமான புடைவைகளுக்கு எந்தெந்த விதமான ரவிக்கைகள் பொருந்தும் என்பது பற்றிச் சொல்லுங்கள்?"**

"அப்படியென்றால் ரவிக்கைகளை நான்கு பிரிவுகளாகப் பிரித்துக் கொள்வோமா? அதாவது தினப்படி ரவிக்கைகள், ப்ளெயின் புடவைகளுக்கு ஏற்றவை, பட்டுப் புடைவைகளுக்கு ஏற்றவை, ரெகுலருக்கு ஏற்றவை மற்றும் பார்ட்டி ஃபங்க்ஷன்களுக்கு ஏற்ற ப்ளவுஸ்கள். இந்த வரிசையில் நான் உங்களோடு இப்போது பகிர்ந்து கொள்ள இருப்பது ரெகுலர் ரவிக்கைகள் பற்றித்தான்."

**"ரெகுலர் ரவிக்கைகள் என்றால் செல்ஃப் நிற ரவிக்கைகள். பிரிண்ட்டிங் ரவிக்கைகள் இவைகள் தானே...."**

"அது மட்டுமின்றி வேறு பலவும் உண்டு. நாங்கள் லாங்ஸ்லீவ், பைப்பிங் ப்ளவுஸ், சின்ன மிரர்வொர்க் ப்ளவுஸ், லைட் எம்பிராய்டரி ப்ளவுஸ், 'ப' கழுத்து 'வி' கழுத்து, 'U' கழுத்து, ஆத்ரேயா ஜாஸ்மின், ஆத்ரேயா கோல்ட், ஆத்ரேயா டைமண்ட் போன்ற ரவிக்கைகள் எளிமையான ஆடம்பரமில்லாமல் அதே நேரத்தில் எளிமையான அழகு கொண்டவைகளாக வடிவமைத்திருக்கிறோம்" - என்கிறார் வசந்தா ராஜகோபாலன்.



**தினப்படி புடைவைகளுக்கு இது அவ்வளவாக பொருந்தும் என்றா சொல்கிறீர்கள்?**

"நிச்சயமாக பொருந்தும். தினப்படி பயன்படுத்தும் ரவிக்கைகளைப் பற்றிச் சொல்வதற்கு முன்பு ரெகுலர் புடைவைகள் எவை என்று பார்க்கலாமா?

"அலுவலகம் போகிற பெண்கள் ஏறக்குறைய ரூ. 250 லிருந்து ரூ. 500 வரையிலான புடைவைகளையே உடுத்துகிறார்கள். இதில் அதிகமாக காட்டன் மற்றும் சின்தெடிக் அடங்கும். அநேகமான புடைவைகளில் பெரிய பெரிய பிரின்ட், பொடி பொடி பிரின்ட், இன்னும் சிலவற்றில் அழகான 'பல்லு' அமைந்திருக்கும். ஒரு சிலவற்றில் பார்டர் டிஸைன் பிரின்ட் ஆகியிருக்கும். இவற்றிற்கெல்லாமே நான் சொன்ன மாடல் ரவிக்கைகள் பொருந்தும். இந்த ரெகுலர் மாடல் ரவிக்கைகள் மிக மென்மையான எளிமை அழகு வாய்ந்தவைதாம்."



• சாரி

ஒவ்வொரு ரெடிமேட் ரவிக்கையிலும் - பிரமாதமான அழகும், 'தொழில் சுத்தம்' என்பார்களே அந்தப் பூரணத்துவமும் இருக்க வேண்டும்.

"உதாரணமாக பெரிய பெரிய பிரின்டுகள் கொண்ட புடைவைகளுக்கு செல்ஃப் நிற ப்ளவுஸ்கள் நன்றாக இருக்கும். ரவிக்கையின் பின் கழுத்துப் பகுதி சற்று ஆழமாக இருந்தால் புடைவையின் அழகும் ரவிக்கையின் விதமும் அணிந்திருப்பவர்களைப் பிரமாதப்படுத்தும். செல்ஃப் நிற ரவிக்கைகளில் கழுத்து கை

# கங்கை வழங்கும் நாவல்கள்

மூன்று முடிச்சுக்கள்
- டைரக்டர் கே. பாலச்சந்தர் 37.00
ஆசையிருக்கு தாசில் பண்ண (நாடகம்)
- டைரக்டர் கே. பாலச்சந்தர் 20.00
சிவப்பு இதயங்கள் - வாசவன் 26.00
இது எங்கள் பூமி
- எஸ். லட்சுமி சுப்பிரமணியம் 37.00
இளவரசி மோகனாங்கி
- கோவி. மணிசேகரன் 32.00
இன்னொருத்தி •
இன்னொருத்தி - சிவசங்கரி 40.00
இவர்களும் அவர்களும் - சிவசங்கரி 14.00
ஏரிக்கடியில் சில கனவுகள்... " 11.00
இனி " 45.00
வேரில்லாத மரங்கள் " 42.00
புல்தடுக்கி பயில்வான்கள் " 20.00
வெட்கம் கெட்டவர்கள் " 15.00
அணில்கள் " 14.00
துள்ளமுடியாத புள்ளிமான் " 14.00
அம்மா பிள்ளை " 27.00
அவர்கள் பேசட்டும் " 22.00
நெருஞ்சிமுள் " 28.00
போகப் போக " 40.00
கிணற்றுத் தவளைகள் " 14.00
ஏன்? " 34.00
நதியின் வேகத்தோடு " 36.00
நண்டு " 45.00
நேசம் மறப்பதில்லை - பிரபஞ்சன் 40.00
இனியவளே.....
- என்.சி. மோகன்தாஸ் 25.00
உன்னிடம் ஒரு ரகசியம் " 36.00
கனா காணும் உள்ளம் " 37.00
வானம் தொடாத நட்சத்திரம் " 17.00
புரொபசர் மித்ரா - ரா.கி. ரங்கராஜன் 32.00
சின்னக் கமலா " 44.00
மறுபடியும் தேவகி " 58.00
பல்லக்கு " 28.00
அடிமையின் காதல் " 82.00
இது சத்தியம் " 90.00
காதல் மேல் ஆணை
(மூலம் : டேனியல் ஸ்டீல்)
தமிழில் - ரா.கி. ரங்கராஜன் 60.00
சத்தியத்துக்குக் கட்டுப்பட்டால்
- சு. சமுத்திரம் 26.00

பொய்ச்சேவல்
- கோவி. மணிசேகரன் 14.00
சொர்க்கம் பக்கத்தில் - தேவிபாலா 50.00
நிஜமான நிழல்கள் " 35.00
நாளைக்கும் நிலவு வரும் " 40.00
யாருக்கு யார் சொந்தம் என்பது
- இரா. பகவானந்ததாசன் 13.00
மௌனம் எனது தாய்மொழி " 22.00
இளம் சருகுகள் - பி.வி.ஆர். 28.00
ஆடாத ஊஞ்சல் " 30.00
வானமெல்லாம் ஆசைக்
காற்றாடி " 45.00
எல்லாம் இன்பமயம் " 26.00
பெண்ணே நீ ஏழடி நடந்தாய் " 32.00
ஸ்லீப்பர் கோச் " 45.00
குப்பத்து சாஸ்திரிகள் " 40.00
முற்றத்து முல்லைகள் " 30.00
பூப்பந்தல் " 30.00
காயாத நிலவுகள் " 11.00
நான் விட்டில் அல்ல
- அனுராதா ரமணன் 16.00
வானம் வரை ஆசை " 40.00
ஜ்வாலை - மகரிஷி 9.00
கனவோடு சில நாட்கள் " 22.00
துளசிதளம்
- எண்டமூரி வீரேந்திரநாத்
சுசீலா கனகதுர்கா 37.00
மீண்டும் துளசி " 50.00
வெள்ளை ரோஜா " 48.00
எல்லைகளின் விளிம்பில்
- வாஸந்தி 22.00
ப்ளம் மரங்கள் பூத்துவிட்டன " 16.00
பறவைகள் பறக்கின்றன " 22.00
மூங்கில் பூக்கள் " 15.00
என் கண்ணில் பாவையன்றோ
- உமாசந்திரன் 20.00
ஊன்று கோல் " 27.00
வாழ்வுக்கு ஒரு தாரகை " 30.00
ஒன்றிய உள்ளங்கள் " 72.00
காதல் மந்திரம்
- கோட்டயம் புஷ்பநாத் 50.00
உறவின் எல்லை
- தகழி சிவசங்கரபிள்ளை 36.00

தேவையான பிரதிகளை வி.பி.பி. மூலம் பெறக் கடிதம் எழுதுங்கள். வி.பி.பி. தபால் செலவு தனி.
விலைப் பட்டியலுக்கு எழுதுங்கள் :



## கங்கை புத்தக நிலையம்

13, தீனதயாளு தெரு, தி. நகர், சென்னை - 600 017.

> உபயோகிக்கப்படாத புதிய தபால் தலைகள் ஒன்றோடு ஒன்று ஒட்டிக் கொண்டு விட்டனவா? அவற்றை சில நிமிடங்கள் உங்கள் ஃப்ரிஜில் வைத்து எடுத்த பின் சுலபமாக, கிழியாமல் பிரிக்க முடியும்.
>
> — உஷா



விளிம்புகளில் புடவையின் ஒத்த நிறத்தைக் கொண்டு பைப்பிங் செய்தும் அணியலாம்."

"பொடிப் பொடி பிரின்டுகள், பிரின்ட் அதிகம் இல்லாத பார்டர் மட்டும் பார்வையாக உள்ள புடைவைகளுக்கு பின்டெக், லைட் எம்பிராய்டரி, மிரர் வொர்க் ரவிக்கைகள் மேட்சாக அமையும்."

**இந்தமாதிரியான ப்ளவுஸ்களை தைக்க எத்தனை மணி நேரம் எடுத்துக் கொள்கிறீர்கள். இதன் விலை எப்படி? என்று ப்ராஜெக்ட் மானேஜர் திரு சாரியிடம் விசாரித்த பொழுது,**

"எம்பிராய்டரி ப்ளவுஸ்களைப் பொருத்த வரை மெஷின், ஹேண்ட் எம்பராய்டரி உண்டு. மிரர் ஹேண்ட் எம்பிராய்டரி ரவிக்கைகள் ஒரு நாளில் ஒருவர் - மூன்று ப்ளவுஸ்களை மட்டும் தயாரிப்பார். சாதாரண ப்ளவுஸ்களை விட டிஸைன் ரவிக்கைகள் விலை கூடுதலாகவே இருக்கும். அதற்குக் காரணம் அவற்றிற்கு நாம் கூடுதலாக பயன்படுத்தும் துணி. கூடுதலான கைவேலை, கூடுதலான நேரம் இவற்றைக் கணக்கிட்டே விலையை நிர்ணயம் செய்கிறோம்."

மேலும் சொல்கிறார் சாரி.

"அடுத்ததாக 'ஆத்ரேயா ஜாஸ்மின்' இது ரவிக்கைகளின் பின் கழுத்துப் பகுதிகளில் மட்டும் மல்லிகை மொட்டுகளைப் போல இருக்கும். ஜாஸ்மின் ரவிக்கைகளை எல்லா வித புடைவைகளுக்கும் அணியலாம். அநேகமாக செல்ஃப் நிறங்களிலேயே உருவாக்குகிறோம். பெரும்பாலனவர்கள் விரும்பி வாங்குகிறார்கள். இதே போன்று மற்றொன்று 'ஆத்ரேயா கோல்ட்' அதாவது பின் கழுத்துப் பகுதியில் 'X' ஷேப்பில் டிஸைன் செய்திருக்கிறோம். இதுவும் எளிமையான ரெகுலர் ரவிக்கைதான்."

" 'ப' கழுத்து 'வி' கழுத்து ரவிக்கைகளை இனப்படிக்கு ஏற்றதாக நாங்கள் சொல்வதில்லை. காரணம் எப்படி பத்திரமாக பயன்படுத்தினாலும் அதன் முனைகள் விரைவிலேயே கிழிந்து விடுகின்றன. அதனால் எப்போதாவது பயன்படுத்துவதுதான் நல்லது" என்கிறார் வசந்தா ராஜகோபாலன்.

**பழைய காலத்து பஃப்கை இப்போது மறுபடியும் ஃபாஷனாகி வருகிறது போலிருக்கிறதே?**

"ஆமாம் பஃப் கை ரவிக்கைகள் நைலக்ஸ் புடைவைகளுக்கு மிக நேர்த்தியாக இருக்கும். காரணம் நைலான் புடைவைகள் உடலோடு ஒட்டிக் கொள்ளக் கூடியவை. அதனால் பஃப் கையிலுள்ள சுருக்கங்கள் தூக்கலாக அழகாக இருக்கும். இந்த பஃப் மாடல் ரவிக்கைகளை மெலிவானவர்களும் நடுத்தர எடை கொண்டவர்களும் அதிகம் பயன்படுத்துகிறார்கள்."

**"இப்போது விதவிதமான மாடல்கள் பற்றிச் சொன்னீர்களே, இன்றைய பெண்கள் இப்படி ஃபேஷனாக ரவிக்கைகள் வாங்குவதையே விரும்புகிறார்களா?"**

"அதையேன் கேட்கிறீர்கள்? எங்களிடம் செல்ஃப் ரவிக்கைகள் மட்டுமே வேண்டும் என்று பிடிவாதமாக வாங்கிக் கொண்டிருந்த பெண்களில் பலர் விதவிதமான எங்கள் டிசைன் ப்ளவுஸ்களால் ஈர்க்கப் பலர் இப்போது இவற்றை வாங்க ஆரம்பித்து விட்டார்கள். இதற்கு எங்களிடம் உள்ள ரவிக்கைகள் போல் வேறு எங்கும் கிடைப்பதில்லை என்பதும் காரணமாக இருக்கலாம்."

**"நீங்கள் சொல்கிற ரெகுலர் ரவிக்கைகள் எல்லா வயதினருக்கும் பொருந்துமா? எந்த உடலமைப்புக் கொண்டோருக்கும் பொருத்தமாக இருக்குமா?"**

"அநேகமாக 45 வயது வரையில் உள்ள எல்லோருமே தாராளமாக அணியலாம். உடலமைப்பு என்றீர்கள் அல்லவா? சற்று உயரம் குறைந்தவர்கள் லாங்ஸ்லீவ் ப்ளவுஸ்கள் அணிந்தால் இன்னும் உயரத்தைக் குறைத்துக் காட்டும். எனவே இதைத் தவிர்த்து விடலாம். நல்ல நிறமாக இருப்பவர்கள் டார்க் நிறங்களிலும் மாநிறமாக இருப்பவர்கள் லைட் நிறங்களிலும் ப்ளவுஸ் வாங்கலாம்.

பொதுவாக சொல்ல வேண்டுமென்றால் ஒரு பெண் தனது உடலமைப்பு, நிறம் போன்றவற்றை நன்றாக புரிந்து அதற்கேற்றபடி ரவிக்கைகளை பயன்படுத்துவது நல்லது. அப்படி இல்லையெனில் சக தோழிகளிடம் கேட்டறியலாம். நமக்கு என்ன மாதிரி ரவிக்கைகள் அழகு தரக்கூடும் என்கிற அனுமானம் உங்கள் தோழிகளுக்கு அதிகமாக இருக்கலாம் இல்லையா? அல்லது ப்யூட்டி பார்லர் போகும் சமயங்களில் உங்கள் ப்யூட்டிஷியனிடமும் கேட்கலாமே?"

**நீங்கள் உங்கள் வாடிக்கையாளர்களுக்கு ஏற்ற ரவிக்கைகளை பரிந்துரை செய்வதுண்டா?**

"எப்போதும் பரிந்துரை செய்கிறோம். எங்கள் 'ஆத்ரேயா'வைப் பொறுத்தவரை நாங்கள் எங்களிடம் வரும் பெரும்பாலான வாடிக்கையாளர்களுக்கு ஏற்ற ரவிக்கைகளை தேர்வு செய்து கொடுப்பதோடு அவர்களுக்குப் பொருந்தும் வரை மிகுந்த கண்காணிப்பு எடுத்துக் கொள்கிறோம்" என்கிறார் வசந்தா ராஜகோபாலன்.

பேட்டி : **மலர்விழி**

# இம்மாத இல்லத்தரசி

முதல் பரிசு
ரூ. 300/-

## தூத்பேடா தலியா

*தேவையான பொருட்கள் :*

கோதுமை - 100 கிராம்,
பால் - ½ லிட்டர்
சர்க்கரை - 250 கிராம்,
துருவிய தேங்காய்ப்பூ - 1 கப்.
முந்திரி - 10 அல்லது 15,
ஏலக்காய் - 10,
நெய் - 2 டீஸ்பூன்,
உப்பு - ½ சிட்டிகை.




• பூர்ணிமா


• பத்மா

*செய்முறை :*

முதலில் கோதுமையைப் பொன் நிறமாக வறுத்து எடுக்கவும். (சட,சடவென சப்தம் வந்து, மணமும் வரவேண்டும்.) பின், அதை மிக்ஸியில் போட்டு பர, பரவென அரைத்து எடுத்துக் கொள்ளவும். முந்திரியைத் தண்ணீர் விட்டு அரைத்து எடுத்துக் கொள்ளவும். தேங்காய்ப் பூவை நெய்யில் வதக்கி எடுத்து வைத்துக் கொண்டு, ஏலத்தையும் பொடி பண்ணி வைத்துக் கொள்ளவும்.

இனி ஒரு பாத்திரத்தில் பாலை ஊற்றி, பால் காயவும் கோதுமை மாவைப் போட்டு வேகவிடவும். அது நன்றாக வேகவும் அரைத்து வைத்துள்ள முந்திரி விழுதைக் கரைத்து ஊற்றிக் கிண்டவும். அடுப்பு நிதானமாக எரியவேண்டும். அடுத்து சர்க்கரை, தேங்காய்ப்பூ, ஏலக்காய், உப்பு யாவற்றையும் போட்டு, ஒரு கொதி வரவும் இறக்கிவிடவும்.

இது சுவையும், மணமுமாக அபாரமாக இருக்கும்.


• உமா

• கீதா


• கமலா

- பூர்ணிமா பாலன்,
தூத்துக்குடி - 2.

## இரண்டாம் பரிசு
## ரூ. 200/-

### மேத்தி பரோட்டா

***தேவையான பொருட்கள் :***

வெந்தயக் கீரை - 1 கட்டு,
கோதுமை மாவு - 1 ஆழாக்கு,
தனியாப்பொடி - தேவையான அளவு,
மிளகாய்ப் பொடி - தேவைக்கேற்ப,
மசலாப் பொடி - சிறிதளவு,
எண்ணெய் - 2 ஸ்பூன்,
உப்பு - தேவைக்கேற்ப.

***செய்முறை :***

வெந்தயக் கீரையைக் கழுவி பொடியாக நறுக்கிக் கொள்ளவும், கோதுமை மாவுடன் சிறிது உப்பு, மிளகாய்ப் பொடி, தனியாப் பொடி, மசாலாப் பொடி சேர்த்து வெந்தயக் கீரையையும் சேர்த்துச் சிறிது எண்ணெய் விட்டுப் பிசைந்து கொள்ளவும். பிறகு சப் பாத்திகளாக மடித்து இட்டு தோசைக் கல்லில் போட்டு எண்ணெய் விட்டு இருபுறமும் திருப்பி எடுக்கவும்.

இதற்குத் தொட்டுக் கொள்ள -

**பயத்தம் பருப்பு கூட்டு :**

தேவையான பொருட்கள் :

பயத்தம் பருப்பு, துவரம் பருப்பு - ½ கப்,
வெங்காயம் - 2 (பெரியது),
தக்காளி - 2,
பச்சை மிளகாய் - 2,
கேரட் - 1,
முட்டைக் கோஸ் - சிறிதளவு,
பீன்ஸ் - 3,
பட்டாணி - 100 கிராம்,
இஞ்சி - 1 துண்டு,
உப்பு - தேவையான அளவு.

முதலில் பயத்தம்பருப்பு, துவரம்பருப்பைச் சிறிது நீரில் குழைய வேக வைக்கவும். வெங் காயம், தக்காளி, மற்ற காய்கறிகளைப் பொடி யாக நறுக்கிக் கொள்ளவும்.

வாணலியில் சிறிது எண்ணெய் விட்டு, வெங்காயத்தை வதக்கிக் கொள்ளவும். பிறகு இதில் இஞ்சி, பச்சை மிளகாய் சேர்த்து தக் காளியையும் சேர்க்கவும். சிறிது வதக்கிக் கொண்டு நீர்விட்டு மற்ற காய்கறிகளையும் சேர்க்கவும். காய்கறிகள் வெந்தவுடன் வேக வைத்த பருப்புகளையும் சிறிது உப்பு சேர்த்துக் கடைசியில் வாணலியில் எண்ணெய் விட்டு கடுகு, உளுத்தம்பருப்பு, கடலைப்பருப்பு போட்டுத் தாளித்துச் சேர்க்கவும்.

### ரெய்த்தா :

***தேவையான பொருட்கள் :***

தயிர் - 1 கப்,
வெள்ளரிக்காய் - 1,
மிளகாய்த்தூள் - தேவைக்கேற்ப,
சர்க்கரை - சிறிதளவு,
உப்பு - தேவைக்கேற்ப.

***செய்முறை :***

தயிரில் உப்பு, சர்க்கரை, மிளகாய்த்தூள் கலந்து வைக்கவும். வெள்ளரிக்காயைத் துருவிப் பிழிந்து கொண்டு அதில் கலக்கவும்.

இந்த உணவில் கோதுமை, தானிய வகைகள், கீரை, காய்கறிகள் சேர்ந்திருப்பதால் உடம்பிற்கு மிகவும் நல்லது.

***- பத்மா பரதன், சென்னை - 78.***

**தீங்குகளை மணலில் எழுது. நன்மைகளைச் சலவைக் கல்லில் எழுது.**
**- பிரான்ஸ் பழமொழி**
**தகவல் : வயலூர் பா. குணா**



## மூன்றாம் பரிசு
## ரூ. 100/-

### சம்பா டிலைட்

***தேவையான பொருட்கள் :***

சம்பா கோதுமை ரவை - 250 கிராம்,
முளை கட்டிய பச்சைப் பயறு - ½ கோப்பை,

எங்களது இதயங் கனிந்த புத்தாண்டு / பொங்கல் நல்வாழ்த்துக்கள்!

# K.R.P. பெனிபிட் பண்ட் லிட்.

பதிவு அலுவலகம் : JVL ஆர்கெட்,
199, வடக்கு உஸ்மான் ரோடு, தி.நகர், சென்னை-600017.
போன் : 8240120/8240121 (கோடம்பாக்கம் மேம்பாலம் அருகில்)
தலைமை & கிளை அலுவலகம் :
11, சிவசைலம் தெரு (முதல் மாடி) பெரியார் ரோடு சமீபம்,
தி.நகர், சென்னை-600017. போன் : 8250865
வேலை நேரம் : காலை 9 முதல் மாலை 6 மணி வரை. ஞாயிறு விடுமுறை

"அகிலம் அமைதி அறிவொளி வீசு"

"பெண்கள் நாட்டின் கண்கள்"

**கீழ்க்கண்ட வட்டி விகிதங்களில் டெபாசிட்டுகள் பெற்றுக்கொள்ளப்படும்**

**டெபாசிட்டுகள் ரூ. 1000/- மற்றும் ரூ. 500/-ன் மடங்குகளில் பெற்றுக் கொள்ளப்படும்**

| வட்டி விகிதம் | 15.5% P.A. | 16% P.A. | 17% P.A. | 18% P.A. | 20% P.A. | 21% P.A. |
|---|---|---|---|---|---|---|
| கால அளவு | 30 நாட்கள் | 45 நாட்கள் | 60 நாட்கள் | 90 நாட்கள் | 180 நாட்கள் | 270 நாட்கள் |

| கால அளவு | 1 வருடம் | 2 வருடம் | 3 வருடம் |
|---|---|---|---|
| மாத வட்டி வீதம் | 22% + 2% | 23% + 2.5% | 23.50% + 3% |
| 3 மாத வட்டி வீதம் | 22.41% | 23.44% | 23.96% |
| குமுலேட்டிவ் Yield Amount for an Investment of Rs. 2,500/- | 24.36% ரூ. 3109/- | 28.86% ரூ. 3943/- | 33.34% ரூ. 5000/- |

## KRP சிறப்புத் திட்டம் (ஜனவரி 20, 1996 வரை மட்டும்)

| முதலீடு | கால அளவு | வட்டி விகிதம் | ஊக்கத்தொகை |
|---|---|---|---|
| ரூ. 7,500 | 2 வருடங்கள் | 23.25% P.A. | 1 கிராம் தங்கக் காசு or ரூ. 450/- |
| ரூ. 5,000 | 3 வருடங்கள் | 23.50% P.A. | 1 கிராம் தங்கக் காசு or ரூ. 450/- |
| ரூ. 10,000 | 1 வருடம் | 22.00% P.A. | 1 கிராம் தங்கக் காசு or ரூ. 450/- |
| ரூ. 10,000 | 2 வருடங்கள் | 22.25% P.A. | 2 கிராம் தங்கக் காசு or ரூ. 900/- |
| ரூ. 10,000 | 3 வருடங்கள் | 22.50% P.A. | 3 கிராம் தங்கக் காசு or ரூ. 1,350/- |
| ரூ. 4,000 | 2 வருடங்கள் | 20.50% P.A. | 1 கிராம் தங்கக் காசு or ரூ. 450/- |
| ரூ. 8,000 | 2 வருடங்கள் | 20.50% P.A. | 2 கிராம் தங்கக் காசு or ரூ. 900/- |

1. பின் தேதியிட்ட காசோலைகள் முன்னதாகவே தரப்படும்.
2. மறு முதலீட்டுத் திட்டங்களில் உங்கள் முதலீடு 36 மாதங்களில் இரு மடங்காகிறது. (ஊக்கத்தொகை 7%)
3. சேவா தேவிகள் பங்குதாரர்களுக்கு மட்டும்.

Dr. லட்சுமி பிரகாஷ், M.Com., Ph.D., இயக்குனர்

ADSTART

"பெண்களையும், முதியவர்களையும், உங்களையும் மனதில் கொண்டு பெண்களால் நடத்தப்படும் பண்ட்"

மிக்ஸட் காய்கறித் துண்டுகள் (வெங்காயம், தக்காளி, பீன்ஸ், முட்டைகோஸ், பட்டாணி, கேரட், பீட்ரூட், நூல்கோல்) - 1 கோப்பை,
பொடியாக நறுக்கிய கீரை ஏதாவது ஒன்று (வெந்தயக் கீரை, முளைக்கீரை, பாலக்) - ½ கோப்பை,
பச்சை வேர்க்கடலை - 2 டேபிள் ஸ்பூன்,
பச்சை மிளகாய், இஞ்சி,
கொத்துமல்லி - தேவையான அளவு.
கரம் மசாலா பொடி - 1 டேபிள் ஸ்பூன்,
மஞ்சள் பொடி - ½ டேபிள் ஸ்பூன்,
ரீபைண்ட் ஆயில் - 4 டேபிள் ஸ்பூன்,
உப்பு - தேவையான அளவு.

*பச்சடி செய்ய :*

கெட்டித் தயிர் - 1 கோப்பை,
நெல்லிக்காய் - 2 (அ) 3 காயை வேக வைத்து மசிக்கவும்.
வாழைப்பழம், ஆப்பிள், ஆரஞ்சுப்பழம் ஒன்று (ஏதாவது) - சிறிய துண்டுகளாக நறுக்கவும். ஆரஞ்சுப் பழத்தை மணிகளை உதிர்த்துக் கொள்ளவும்.

*செய்முறை :*

பிரஷர் குக்கரில் எண்ணெய் ஊற்றி காய்கறி, வேர்க்கடலை, பயறு, கீரைகளை உப்பு, மஞ்சள் பொடி, பச்சை மிளகாய் போட்டு லேசாக வறுக்கவும். பிறகு கோதுமை ரவையைச் சேர்த்துச் சிறிது வதக்கி மசாலா பொடி போடவும். சுமார் 4 கோப்பை தண்ணீர் விட்டு உப்பு போட்டு நன்றாகக் கலந்து குக்கரில் வைத்து மூடவும். போதுமான அளவு விசில் வந்தவுடன் கேஸை சிம்மில் வைக்கவும். பத்து நிமிடம் வைத்து கேஸை அணைக்கவும்.

பச்சடிக்கு தயிரில் நீங்கள் விரும்பியதை மேற்சொன்னபடி சேர்த்துத் தேவையான உப்பு சேர்த்து, கடுகு உளுத்தம்பருப்பு தாளித்துப் பொடியாக வெட்டிய கொத்துமல்லியைச் சேர்க்கவும்.

சம்பா டிலைட்டைத் தயிர்ப் பச்சடியுடன் பரிமாறவும்.

*- உமா கிருஷ்ணன், சென்னை - 17.*

## ஆறுதல் பரிசு
## ரூ. 50/-

## க்ரீன் டிலைட்

*தேவையான பொருட்கள் :*

பச்சைப் பயறு (முழு பாசிப்பருப்பு) - 1 கப்,
கொத்துக்கடலை (குடமிக் கடலை) - 1 கப்,
கேரட் - 2,
வெங்காயம் - 1,
வெந்தயக் கீரை - 1 கட்டு,
பூண்டு - 6 பற்கள்,
இஞ்சி - சிறிய துண்டு,
எலுமிச்சம்பழம் - 1,
புதினா - சிறிதளவு,
கொத்துமல்லி - சிறிதளவு,
மிளகு - 6,
உப்பு - தேவையான அளவு.

*செய்முறை :*

பச்சைப் பயறு, கொத்துக்கடலை இரண்டையும் தனித்தனியாக இரவு ஊற வைக்கவும். காலையில் ஊறியவற்றைத் தண்ணீர் இறுத்து தனித்தனியாக சுத்தமான வெள்ளைத் துணியில் மூட்டை கட்டி வைக்கவும். மறுநாள்

**சில தாய்மார்கள் குழந்தைகளுக்கு பொம்மைகளை கொடுத்து விளையாட விடுகிறார்கள். அதோடு அவர்கள் கடமை முடிந்து விட்டதாக நினைக்கிறார்கள். இது தவறு. குழந்தைகளுடன் நாமும் சேர்ந்து விளையாடி ஊக்குவித்தால் குழந்தைகளும் சந்தோஷமாக விளையாடும். இருவருக்குமிடையே பாசம் வளரும்.**

**— ஆர். சுந்தரி**

பிரயாணத்துக்கு உருளைக் கிழங்கு மசாலா எடுத்துச் சென்றால், மறுநாள் ஊசிவிடும். உ. கிழங்கைச் சற்றுத் தடிமனாகச் சதுரம் சதுர மாக நறுக்கி, எண்ணெயில் போட்டு எடுத்து, உப்புக் காரம் பிசிறி எடுத்துக் கொண்டால், மறுநாள் ஊசாது. கறி போலவும் இருக்கும். பூரி, சப்பாத்திக்குச் சிறந்த தோழன்.

- ஆர். பார்வதி



காலை மூட்டையைப் பிரித்துப் பார்த்தால் முளை விட்டிருக்கும். இதனை ஒரு பாத்திரத்தில் போடவும். கேரட் மற்றும் இஞ்சியைத் தனியாகத் துருவிக் கொள்ளவும். கீரையைச் சுத்தம் செய்து ஆய்ந்து வைக்கவும். வெங்காயத்தை மிகவும் பொடியாக நறுக்கவும். மிளகைப் பொடிக்கவும். பூண்டைத் தோலி நீக்கி தட்டி வைக்கவும். கடலை, பயறு, கீரை, இஞ்சி, சிறிது உப்பு முதலியவற்றைக் கலந்து குக்கரில் ஆவியில் பதினைந்து நிமிடம் வைத்து அடுப்பை அணைக்கவும். அரை மணி நேரம் ஆறவிடவும். பிறகு துருவிய கேரட், வெங்காயம், பொடியாக நறுக்கிய புதினா, கொத்து மல்லித் தழைகள், மிளகுத்தூள் சேர்க்கவும். தேவையான அளவு உப்பை ஒரு கப்பில் எடுத்துக் கொண்டு அதில் எலுமிச்சம் பழத்தை பிழியவும். பிழிந்த சாற்றைக் கலந்து வைத்துள்ள சாமான்களுடன் சேர்க்கவும். ஒரு கப்பில் இக்கலவையைப் போட்டு சாப்பிடக் கொடுக்கவும். சுமார் நான்கு நபர்களுக்கு இந்த அளவு சாமான்கள் போதுமானது.

நொறுக்குத் தீனி பகல் வேளையில் சாப்பிடுபவர்கள் இதனை தாராளமாக நிறைய சாப்பிடலாம். வெயிட் போடாது. இதில் கொழுப்பு சத்துகள் கிடையாது. நிறைய நேரம் பசி தாங்கும். கர்ப்பிணிப் பெண்கள், பிரசவித்த தாய்மார்கள் தினமும் காலையில் இதனைச் சாப்பிட நல்ல பயனளிக்கும்.

*- ஆர். கலாவதி, பெங்களூர் - 3.*

## ஆறுதல் பரிசு ரூ. 50/-

### ரவா பன்ஸ்

***தேவையான பொருட்கள் :***

பம்பாய் ரவை - 2 கப்,
தயிர் - 2 கப்,
துருவிய தேங்காய் - 1 கப்,
கறிகாய்கள், துருவிய கேரட் - 1 கப்,
சிறியதாக நறுக்கிய குடைமிளகாய் - 1 கப்,
உரித்த பட்டாணி - 1 கப்,
துருவிய முட்டைகோஸ் - 1 கப்,
காலிப்ளவர், பீன்ஸ் - 1 கப்,
சிறிதாக வெட்டிய இஞ்சித் துண்டு,
பச்சை மிளகாய் - 6,
முந்திரிப் பருப்பு, பாதாம் பருப்பு - உடைத்தது - 1 கப்,
சமையல் சோடா - ஒரு சிட்டிகை,
தாளிக்க எண்ணெய்,
கடுகு - தேவையான அளவு,
நெய் - 2 கரண்டி,
உப்பு - தேவைக்கேற்ப.

***செய்முறை :***

ரவையை சலித்து, தயிரில் போட்டுக் கலக்கவும். கடுகு தாளித்து அதில் கொட்டவும். நறுக்கிய கறிகாய்களை நன்றாக அலம்பிச் சேர்க்கவும். இஞ்சியை நசுக்கி, உப்பு மிளகாயையும் சேர்க்கவும். கொத்துமல்லியைச் சிறிதாக நறுக்கிச் சேர்த்து கடைசியாக சோடாவைச் சேர்க்கவும். மாவு நன்றாகப் பொங்கிவரும். எண்ணெய் தடவிய பரந்த பேஸினில் கொட்டி, மேலே முந்திரிப்பருப்பு, பாதாம் தூவி நெய்யையும் மேலே ஊற்றி குக்கரில் வெயிட் வைக்காமல் நன்றாக வேகும் வரை வைக்கவும். நடுவில் குத்திய கத்தி ஒட்டிக் கொள்ளாமல் வந்தால் பன் வெந்து விட்டது என்று அர்த்தம். கேக்கைப் போல் வெட்டி சட்னியுடன் பரிமாறவும். இதில் ஒரு பூரண சாப்பாட்டிற்குள்ள சீரில் தயிர், காய் கறிகள், நெய், நட்ஸ் எல்லாம் இருப்பதால் இது பாலன்ஸ்ட் டயட். இதை மட்டும் சாப்பிட்டால் போதும்.

*- சசிலாமணி, ஹைதராபாத் - 16.*

நீங்கள் பிக்செட் டெபாசிட் துறையில் ஒரு கண்ணோட்டம் செலுத்தினால், கடந்த 50 ஆண்டுகளில் ஏகப்பட்ட மாற்றங்கள் ஏற்பட்டிருப்பதைக் காண்பீர்கள். ஆனால் கூர்ந்து கவனித்தால், சில விஷயங்கள் மட்டும் மாறவே இல்லை என்பதைக் காணலாம்.

எடுத்துக்காட்டாக, இன்வெஸ்ட்மென்ட் டிரஸ்ட் ஆஃப் இந்தியாவில் (ITI) தழைத்தோங்கி இருக்கும் திடநம்பிக்கை மற்றும் சேவைமிக்க பாரம்பரியம். கடந்த 50 ஆண்டுகளாக எங்கள் மதிப்பு மிக்க நிறுவனர் திரு. C.M. கோத்தாரி அவர்களின் முன்னோக்குக் கொள்கைகளால் எங்களது வணிகத்தின் ஒவ்வொரு அம்சமும் செயலூக்கம் பெற்றுள்ளது. ஒரு நிதி நிறுவனம் நீண்ட காலத்துக்கு தழைத்தோங்கி இருக்க ஒரு மதிப்புயர்ந்த சொத்து எதுவெனில், அதன் வாடிக்கையாளர்களின் திட நம்பிக்கைதான் என்பதை அவர் உறுதிபடக் கடைப்பிடித்து வந்தார். வாடிக்கையாளர்களுக்கு செய்யப்படும் சேவையை ஆழ்ந்த பொறுப்புடன் செய்வதுதான் வெற்றிக்கு வழி என நம்பினார்.

**ITI– 50 ஆண்டு திட நம்பிக்கை மற்றும் சிறந்த சேவை**

இந்த ஆண்டு ITI, திட நம்பிக்கை மற்றும் சிறந்த சேவை செய்யும் பாரம்பரியத்தின் பொன்விழாவைக் கொண்டாடுகிறது. லீசிங், ஹயர் பர்ச்சேஸ், மர்ச்சென்ட் பாங்கிங், மியூச்சுவல் ஃபண்டுகள் மற்றும் பிக்செட் டெபாசிட்டுகள் உள்பட எல்லா துறைகளிலும் நாங்கள் ஒரேசீரான வளர்ச்சியையும் சாதனைகளையும் குறிக்கும் பொன்னான 50 ஆண்டுகளைக் கொண்டாடுகிறோம். இந்த ஆண்டு ITI, மாற்றமில்லாத நம்பிக்கை மற்றும் சேவை இவைகளை நினைவுபடுத்தும் 50 ஆண்டுகளைப் பொன்விழாவாகக் கொண்டாடுகிறது.




**தி இன்வெஸ்ட்மென்ட் டிரஸ்ட் ஆஃப் இந்தியா லிட்.**

*ஒரு H.C. கோத்தாரி குரூப் நிறுவனம்*

"மஷ்கூர் பில்டிங்ஸ்", 1 கிருஷ்ணமாச்சாரி சாலை, நுங்கம்பாக்கம், சென்னை 600 034.
தொ.பே: 8276297, 8274871, 8274885, 8271691, 8255682

# கோடை மழை

"தாயி" வேலிக்கு மறுபுறத்திலிருந்து ஒரு குரல் கேட்டது. திரும்பினாள் பார்வதி. வேலிக்கு அந்தப் பக்கம் ஒரு பெண் நின்றிருந்தாள். சராசரிக்கும் சற்றுக் கூடுதலான உயரம். கொஞ்சம் பழுப்பான கருப்பு நிறம். அடர்த்தியான கருங்கூந்தலை தூக்கி வாரி அள்ளிச் செருகி இருந்தாள். கணுக்காலுக்கும் சற்று மேலே தூக்கிக் கட்டப்பட்ட நாட்டுப்புற புடவைக் கட்டு. உறுதியான உடற்கட்டு. கள்ளமில்லாமல் சிரிக்கும் முகம்.

'யாராயிருக்கும்? இந்தப் பக்கம் இவளைப் பார்த்ததாக ஞாபகம் இல்லையே,' பார்வதியின் சிந்தனை ஓடிக் கொண்டிருக்கையிலேயே, மறுபடியும் கூப்பிட்டாள் அந்தப் பெண்.

"தாயி, வடிச்ச கஞ்சிதானே அது? ஏன் கீழ கொட்டறீங்க? கழனிப் பானையில ஊத்தினாக்க மாடு, கன்னு குடிக்குமில்லை?" என்று பார்வதியின் கையிலிருந்த பாத்திரத்தை சுட்டிக்காட்டிக் கேட்டாள்.

அறிமுகமில்லாத அப்பெண்ணின் கேள்விக்குப் பதில் சொல்ல வேண்டிய அவசியமில்லாவிடினும், ஏனோ முகத்திலடித்தாற் போல் திரும்பிச் செல்லவும் முடியாதபடி ஒரு வசீகரம்.

"நம்ம வீட்ல மாடு கன்னு கெடையாது. இருக்கிறவங்களும் ஒழுங்கா வந்து கழனிப் பானைய எடுத்திட்டுப் போறதில்லை. நாத்த மெடுக்க ஆரம்பிச்சடுத்து. அதான்...." என்றாள் பார்வதி.

"இரு தாயி, ஒரு நொடியில வந்திடறேன். கீழ கொட்டிடாதே!" என்றபடி வேலியை ஒட்டிச் சென்ற சாலையைக் கடந்து போனவள் விரைவிலேயே கையில் ஒரு எவர்சில்வர் தூக்குடன் திரும்பி வந்தாள்.

"இதுல ஊத்து தாயி," வேலிக்கப்பாலிருந்தே அந்தத் தூக்கை பார்வதியிடம் நீட்டினாள் அவள்.

"நாங்க இங்கன ரோடு போடற வேல செய்யிறோம் தாயி. எங்களுக்கு தெக்கே ராமனாதபுரம் சீமை. அங்கன மளவே இல்லையா, ஒரு பயிரும் தலையெடுக்கல. மண்ணுல போட்ட கடல, தொவர எல்லா பூமாதேவிக் குன்னு போயிடுச்சி. இங்கன பஞ்சம் பொழைக்க வந்திருக்கோம் தாயி."

பார்வதி கேட்காமலேயே தன்னைப் பற்றிய விவரங்களை 'கடகட'வென்று கூறினாள். கஞ்சித் தூக்கோடு திரும்பி நடக்க ஆரம்பித்தவள், திரும்பி வந்தாள்.

'தாயி! நாங்க இங்கனதான், ரோடுக்கு அந்தப் பக்கமா, புளியந்தோப்புப் பக்கமா இருக்கோம். தெனைக்கும் எந்தூக்கக் கொண்டாந்து வெக்கிறேன். கஞ்சிய சாக்கடையில கொட்டாம அதில ஊத்தி வெக்கிறியா தாயி?"

இப்படித்தான் அவர்களின் அறிமுகம் ஆரம்பமானது. அடுத்தடுத்த நாட்களில், அவள் பெயர் முத்தம்மா என்பதும், ரெண்டு ஏக்கர் புன்செய் நிலத்துக்குச் சொந்தக்காரி என்பதும் பார்வதிக்குத் தெரிய வந்தது. 'நிலத்துக்கு சொந்தக்காரியாக இருந்தும், கௌரவம் பார்க்காமல் இப்படி ரோடு வேலை செய்யறாளே!' நினைத்துப் பார்க்கவே பார்வதிக்கு வியப்பாக இருந்தது.

கஞ்சியின் மூலம் வளர்ந்த அவர்கள் உறவு நாளாக, நாளாக நெருக்கமானது. இப்பொழுது பார்வதியின் வீட்டு வேலைகளை முத்தம்மா தான் செய்கிறாள்.

ஒரு நாள் பஸ்ஸில் சென்று கொண்டிருக்கும்பொழுது தற்செயலாக ரோடு போடும் வேலையில் ஈடுபட்டிருந்த முத்தம்மாவைக் காணவும், மனம் உருகி போனாள் பார்வதி. தலையில் கம்மாடு, கால்களில் தார் ஒட்டாமலிருக்க கோணியைக் கிழித்துக் கட்டியிருந்தாள். கலவை மெஷினிலிருந்து தார் கலந்த ஜல்லியை வாங்கி, சாலையின் மேல் கொட்டிக் கொண்டிருந்தாள். மதிய நேர உச்சி வெயில் சுட்டெரித்தது. ஆனாலும் அதைப் பொருட்படுத்தாமல் வேலையைத் தொடர்ந்து கொண்டிருந்தாள் முத்தம்மா.

அன்றிலிருந்து பார்வதி, முத்தம்மாவுக்குக் கொடுக்கும் சாப்பாட்டின் அளவை கூட்டியே கொடுக்க ஆரம்பித்தாள்.

மாதங்கள் இரண்டாகி விட்டன. இதோ இன்றோடு வேலை முடிந்து மறுநாள் குடும்பத்தோடு ஊருக்குக் கிளம்பப் போகிறார்கள்! இதை ஒரு வாரம் முன்பே பார்வதியிடம் கூறியிருந்தாள் முத்தம்மா. இருவருக்கும் இந்தப் பிரிவு எப்படியோ இருந்தது.

'எத்தினியோ சமயம் இந்த மாதிரி ஊரு

சி.வி. கிரிபிரசாத்

விட்டு ஊரு போயிருக்கோம். இந்த மாதிரி யாருகிட்டயும் பளகினதில்ல தாயி," உணர்வுகளின் நெருக்கம் முத்தம்மாவின் வார்த்தைகளில் வெளிப்பட்டது. சொல்லத் தெரியாத இதே மாதிரியான உணர்வுகள் பார்வதியின் மனதையும் ஆக்ரமித்துக் கொண்டிருந்தன. ஜாதி, இன, அந்தஸ்தைக் கடந்த ஒரு நட்பு அது!

ஆனால் அன்றைய இரவு, இந்த உணர்வுகளுக்கெல்லாம் உலைவைப்பது போல் வந்தது. வீட்டின் நடுக் கூடத்தில் முத்தம்மாவை விசாரணைக் கைதியாய் நிற்க வைத்து, பார்வதியின் கணவர் கேள்வி மேல் கேள்வியாகக் கேட்டுக் கொண்டிருந்தார். குரலில் கோபம் கொடி கட்டிப் பறந்தது.

"நீ எடுக்காம அந்தக் கடிகாரத்தை வேற யாரு எடுத்திருக்க முடியும்? நான் தண்ணித் தொட்டி மேல வாட்ச்சைக்கழட்டி வெச்சிட்டு மொகம் கழுவிட்டு மறந்து போயி, உள்ள போயிட்டேன். அதுக்கப்புறமா நீதானே வேலிப்பக்கமா வந்து என்னமோ கேட்டுட்டுப் போனே? கடிகாரம் என்ன ரெக்கை மொளச்சி பறந்தா போயிருக்கும்? நீ திரும்பத் திரும்ப, எடுக்கலைன்னே சொல்லிக்கிட்டு இருக்கே. மரியாதையா வாட்சை திரும்பக் கொடுக்கல, அப்புறமா போலீஸ் வந்து உங்களை விசாரிக்கறபடி விசாரிக்கும். ஆமாம்..."

பார்வதி தவியாய் தவித்தாள். அச்சமயம் அங்கு வந்த பார்வதியின் சின்ன மகன் சுரேஷ், இந்த விசாரணையை ஒரு நிமிடம் கவனித்தவன் அதற்குமேல் கேட்கப் பிடிக்காமல் வெளியேறி விட்டான். அவன் போவதையே பார்த்துக் கொண்டிருந்த முத்தம்மா மீண்டும் பார்வதியை ஏக்கமாய் பார்த்தாள்.

"ஏங்க, அவதான்..." பார்வதியின் வார்த்தைகளை முடிக்க விடாமல் சீறினார் அவள் கணவர். "அறிவு கெட்டவளே, உன்னாலதான் எல்லாம். முன்ன பின்ன தெரியாத ஜனங்களை சேத்துக்கிட்டு. இப்பப் பாத்தியா?" சட்டென்று நாற்காலியைத் தள்ளிவிட்டு எழுந்தார்.

"நான் திரும்பி வரதுக்குள்ள வாட்ச் திரும்பி வந்தாகணும். இல்ல, நடக்கற கதையே வேற ஆமாம்," உறுமி விட்டு வெளியேறினார் அவர்.

"தாயி."

முத்தம்மாதான் கூப்பிட்டாள். பெரிய தவறு செய்து விட்டதுபோல் உள்ளம் குறுகுறுக்கத் தலைநிமிர்ந்தாள் பார்வதி.

"இல்ல முத்தம்மா. நீ எடுத்திருக்க மாட்டேன்னு எனக்கு நல்லாவே தெரியும். அய்யா கொஞ்சம் கோபக்காரர். அந்த வாட்ச் கொஞ்சம் வெல ஒசந்த வாட்ச். அதான் அவருக்கு அவ்வளவு கோபம்," கணவனின் குற்றச்சாட்டிற்குச் சமாதானம் கூறினாள் பார்வதி.

முத்தம்மாள் சுற்றுமுற்றும் பார்த்தாள். வீட்டில் ஒருத்தருமில்லை. மிக அமைதியாக அவள் பார்வதியை அழைத்தாள். அவளுடைய அந்த அமைதி பார்வதிக்கே வியப்பாய் இருந்தது. கோபப்படாமல், வசைபாடாமல் எப்படி இப்படிப் பொறுமையாய்?

"தாயி அய்யாவோட வாட்ச் திருட்டுப் போகல." முத்தம்மா முடிக்கு முன்னரே பரபரத்தாள் பார்வதி "அது எங்க முத்தம்மா?"

"தாயி, உங்க சமயலறை ரூமுக்குள்ள, மேல சாமான் கவுத்து வச்சருக்கீங்கல்ல, பரணை, அங்கனதான் ஒரு டப்பாவுக்கு பின்னால இருக்குது தாயி, நகர்த்திட்டுப் பாருங்க."

பார்வதி அவசரமாய் சமயலறைக்கு ஓடி, மேலே அடுக்கி வைத்திருந்த டப்பாக்களை ஒவ்வொன்றாய் நகர்த்திவிட்டு, கையை விட்டுத் துழாவினாள். ஒரு பச்சை டப்பாவின் பின்னாலிருந்து அவள் கணவரின் கைக்கடிகாரம் பளபளத்தது. வாட்ச்சுடன் மீண்டும் ஹாலுக்கு ஓடி வந்தாள் பார்வதி.

"அப்பாடி, சாமி மதுரை வீரா, கெடியாரம் கெடச்சிருச்சு. என்னக் காப்பாத்தின சாமி," சட்டென்று பொங்கின கண்ணீரை முந்தானையால் துடைத்துக் கொண்டாள் முத்தம்மா.

"இது எப்படி முத்தம்மா அங்கே.. உனக்கெப்படித் தெரியும்?" முத்தம்மாவின் மீதிருந்த பழி நீங்கிய மகிழ்ச்சி ஒரு புறம், வாட்ச் அங்கிருப்பது எப்படி இவளுக்குத் தெரியும் என்ற திகைப்பு மறுபுறம். தடுமாறினாள் பார்வதி.

"தாயி, சாயந்திரமா, சோத்துக்கு ரெண்டு வெங்காயம் வாங்கிட்டுப் போவலாம்னு கொல்லப் பக்கம் வேலியாண்ட வந்து நின்னேன். அப்ப அய்யாவோட இந்த வாட்ச் தண்ணி தொட்டி மேல 'பளபள'ன்னு தெரிஞ்சிச்சு. உங்கள யாரையாச்சம் கூப்பிட நெனச்சப்ப சின்னத்தம்பி அங்க வந்திச்சு. கெடியா

வீட்டில் இருக்கும் காலிங் பெல்லை, இரவு நேரம் கழித்து வரும் நம் வீட்டு மனிதர்கள், ஓர் அடையாளம் உபயோகித்து அடித்தால், அடையாளம் தெரிந்து கொள்ள ஈஸியாக இருக்கும்.

- ஆர். பார்வதி



# நேர்மையான கட்டிட நிபுணர் தரமான பொருட்களால்தான் கட்டிடம் கட்டுவார்.




## நம்பகமான முதலீட்டுக்கு
# தண்டபாணி யையே அனைவரும் நாடுவது போல்.

நீங்கள் அரும்பாடுபட்டு சேமிக்கும் தொகையை முதலீடு செய்யும் இடம் நம்பகமானதாகவும், சேமிக்கும் தொகை வளர்ந்து பெருகக் கூடியதாகவும் இருக்க வேண்டும்.

உதாரணத்திற்கு, **தண்டபாணி பைனான்ஸ் அண்டு இன்வெஸ்ட்மெண்ட்ஸ் லிமிடெட்** போல. ரூ.90 கோடிக்கும் அதிகமான வரவு செலவுள்ள தண்டபாணி குருப்பைச் சேர்ந்த **தண்டபாணி பைனான்ஸ்**, திறமைவாய்ந்த நிதி நிபுணர்களின் நிர்வாகத்தில் ஏராளமான வாடிக்கையாளர்களின் நம்பிக்கையையும் நல்லெண்ணத்தையும் பெற்று அபாரமாக வளர்ந்து வருகிறது. பல்லாயிரக் கணக்கானவர்கள் தங்கள் சேமிப்புகளை அதன் டிபாசிட் திட்டங்களில் செலுத்திப் பயன் பெற்று வருகிறார்கள்.

நீங்களும் அவர்களைப் போல 'தண்டபாணி டெபாசிட்டர்' என்று கூறிக்கொள்ளலாம் அல்லவா?

- ஹையர் பர்சேஸ், லீசிங்
- மெர்ச்சண்ட் பேங்கிங்
- பில் டிஸ்கவுண்டிங்

*பிக்சட் மற்றும் குமுலேடிவ் டெபாசிட் செய்வதற்கான விண்ணப்பம் மற்றும் விவரங்களுக்கு எமது அலுவலகம் அல்லது பிரபல டெபாசிட் புரோக்கர்களை அணுகவும்.



**Dhandapani**

Finance and Investments Ltd.

**பதிவு அலுவலகம்** : 141 லிங்கி செட்டி தெரு, சென்னை - 600 001.

**நிர்வாக அலுவலகம்** : 645, மவுண்ட் ரோடு, சென்னை - 600 006.

ஃபோன் : 8268285, 8259264, 8241304.

**தண்டபாணி உங்கள் நல்வாழ்விற்கு உறுதுணை**

● சென்னை கிளைகள்: மவுண்ட் ரோடு: 645, அண்ணா சாலை, பின்-600 006. ஃபோன்: 8268285, 8259264, 8241304. ● மேற்கு மாம்பலம்: 22, ஆர்யகௌடர் ரோடு, முதல்மாடி, பின்-600033. ஃபோன்: 427795. ● தி.நகர்: 35, திருமலைப்பிள்ளை சாலை, முதல் தளம், பின்-600 017. ஃபோன்: 8263343, 8265335. ● தமிழ்நாடு: கோயம்புத்தூர்: 391, பாரதியார் தெரு, சித்தாபுதூர், பின்-641044 ஃபோன்: 435414, 435663. ● திருச்சி: பி-13, பேஸ்மெண்ட், சித்ரா காம்ப்ளெக்ஸ், சிந்தாமணி, பின்-620002. ஃபோன்: 469945 ● மதுரை: 7, மேற்கு மாடவீதி, இரண்டாவது மாடி, பின்: 625001. ஃபோன்: 37977 ● சேலம்: 108, லைட் ஹவுஸ் காம்ப்ளெக்ஸ், எல்.எம்.ஜி.எஸ். ஸ்கூல் எதிரில், ஃபோர் ரோடு, பின்-636009. ஃபோன்: P.P. 50164 ● ஆந்திரா: செகந்திராபாத்: 1-2-272 & 273, மினர்வா காம்ப்ளெக்ஸ் எதிரில், சரோஜினி தேவி சாலை, பின்-500003. ஃபோன்: 844134. ● கடப்பா: 7/153-3பி, என்.ஜி.ஓ. காலனி, பின்-516002. ஃபோன்: 44496 ● கர்னாடகா: பெங்களூர்: 36/6, என்.ஆர். ரோடு க்ராஸ், பின்-560 002. ஃபோன்: 2239677 ● கேரளா: கொச்சின்: 41/405, சித்தூர் ரோடு, எர்ணாகுளம், பின்-682035 ஃபோன்: 369437

★ In continuation of our statutory ad appeared in News Today and Dinamani on 6-7-95



அநேக வீடுகளில் தோசைக்கு அரிசி, பருப்பு ஊற வைத்தால் மூடி வைப்பதே கிடையாது. ஏன்? அது உணவுப் பொருள் இல்லையா? அதில் பல்லி, மற்ற எதுவும் விழாது என்பது என்ன நிச்சயம்? தயவு செய்து சகோதரிகளே, அதையும் மூடி வையுங்கள்.

- பி. ஜானகி

---

ரத்த எடுத்துக்கினு சமயலறைப் பக்கமா போச்சு. அப்பதான் எனக்கு வெங் காயம் கேக்கணும்ங்கறது ஞாபகம் வந்திச்சு. தம்பியக் கூப்பிடலாம்னு சன்னப் பக்கமா வேலி யாண்டை வந்து நின்னேன். அப்பதான் தம்பி கடியாரத்தை எடுத்து பரண்மேல வச்சி, டப்பாவை நகத்தி வச்சிது. தம்பி கடியாரத்த ஒளிச்சு வச்சு வேடிக்கை காட்டப் போவு துன்னு நெனச்சேன்....

"ஆனா தாயி....." முத்தம்மாவின் குரல் தழு தழுத்தது. "கடியாரத்தைக் காணமின்னு ஐயா எம்மேல பழி சொமத்தினப்பவும், பக்கத்தி லேயே நின்ன சின்னத் தம்பி வாயக் கூட தொறக்கல்ல. அப்பத்தான் தாயி தோணிச்சி. தம்பி வெளயாட்டுக்காக அப்படி கடியா ரத்தை ஒளிய வெக்கல, வேணுமின்னேதான் செய்திருக்கின்னு."

"ஏன் முத்தம்மா, இத அப்பவே ஐயாகிட்ட சொல்லியிருக்கலாமில்ல? உன்ன அவரு திருடின்னு சொன்னப்பவும் ஏன் வாயப் பொத்திக்கிட்டு இருந்தே?" ஆத்திரமாய்க் கேட் டாள் பார்வதி.

"சொல்லக் கூடாதுன்னுதான் தாயி நான் ஐயாகிட்ட சொல்லல. பாவம் தம்பி சின்னப் பையன். ஐயா கேட்டுக்கிட்டு இருந்தப்ப, தம்பி 'பட்'டுனு வெளிய போனப்பவே தெரிஞ்சி போச்சு தாயி, என்னவோ தப்புன்னு. தாயி, புள்ள ரெண்டுங் கெட்டான் வயசு. அதுக்கு என்ன தேவையோ, என்னவோ. அதுங்கிட்ட எதவாப் பேசி தெரிஞ்சிக்கிட்டு அதத் தீத்து வையி தாயி. மதில் மேல பூன நிக்கிற மாதிரி தாயி அதும் மனசும், வயசும். ஐயா கோவக் காரரு. புள்ளய திட்டி, அடிச்சிங்கன்னா அது பாதை வெலகிப் போயிரும் தாயி. இத அப்பவே ஐயா முன்னாடி நான் சொல்லி யிருந்தா, 'வேலக்காரி முன்னாடி கையுங் கள வுமா மாட்டிக்கிட்டோமே'ன்னு அவமானப் பட்டுப் போகும் தாயி. அந்த அவமானம் தாங் காம புள்ள ஏதுனாச்சும் செஞ்சிக்கிட்டா...?"

படித்தவர்கள் கூட அறிந்திராத மனோ தத்துவம் இந்தப் பட்டிக்காட்டுப் பெண்ணிற்கு எப்படித் தெரிந்தது? எவ்வளவு ஆழமாய் விவ ரங்களை அலசியிருக்கிறாள்?

"முத்தம்மா, முத்தம்மா," முத்தம்மாவின் கைகளைப் பிடித்துக் கொண்டு கண்ணீர் விட் டாள் பார்வதி. "உம்மேல பழியப் போட்டுக் கிட்டாவது எம் பிள்ள மேல பழி வராமக் காப்பாத்தணுமா, முத்தம்மா?" நெஞ்சம் உருகி பார்வதியிடமிருந்து வார்த்தைகளாய் வெளிப் பட்டது.

"தாயி, நீ என்னை வேலக்காரியா நெனக் கல, அது எனக்கு நல்லாத் தெரியும். அப்ப நா மட்டும் எப்படி தாயி, ஒம்புள்ளய வேத் தாளா நெனச்சி மாட்டி விடுவேன்?"

"இதக் கூட இப்ப ஏன் சொன்னேன்னா, புள்ளயோட நெலமை தெரிஞ்சி, நீ அத எதவாத் திருத்தி நல்லபடியாக் கொண்டாறனு மின்னுதான் தாயி."

பதில் சொல்லத் தெரியாமல் அவளையே பார்த்துக் கொண்டிருந்தாள் பார்வதி.

"தாயி நான் இதச் சொல்லாமப் போயி, கெடியாரமும் கெடைக்காமப் போயிருந்தா, நீ என்ன நெனப்பே தாயி! 'இனிமே யாருக்கும் இரக்கப்படக் கூடாது'ன்னு மனசு இறுகிப் போயிடாது? 'பாவி சனங்க'ன்னு திட்டத் தோணுமில்ல? பூமிக்கு வேணா எங்க மேல இரக்கமில்லாம, ஈரமில்லாமப் போவலாம். ஆனா ஒன்ன மாதிரி நல்ல மனசுல ஈரமில் லாமப் போயிடக்கூடாது தாயி. எங்கள மாதிரி சனங்களப் பாக்கறப்ப பாவம் இந்த சனங் க'ன்னு ஒனக்கு எங்க மேல இரக்கம் வரணும் தாயி. நாங்க மானம் பாத்த பூமியிலேருந்து தான் வாரோம். ஆனா மானம் போனவங்க இல்ல தாயி. திருடிப் பொளக்கணுமின்னா இவ்வளவுதூரம் வந்து கஷ்டப்பட்டு அதச் செய்யணுமா? சொல்லு, தாயி!"

கண்ணகி, பாண்டியனிடம் நீதி கேட்ட மாதிரி முத்தம்மா கேட்ட பொழுது கேவி விட்டாள் பார்வதி. ஆனால் முத்தம்மா 'சட்' டென்று சுதாரித்துக் கொண்டாள். "தாயி கெடி காரம் எங்கினயோ கெடந்திச்சின்னு சொல்லி ஐயாகிட்ட கொடுத்திடு. ஆனாக்க, புள்ள விச யத்தில சாக்கிரதயா இரு தாயி. முள்ளு மேல போட்ட சேல. மொள்ள மொள்ளத் தான் எடுக்கணும். அவசரப்பட்டா, ஆத்திரப்பட்டா சேதம் சேலக்கித்தான். சரி சரி, கண்ணத் தொடச்சிக்க. 'போயிட்டு வா'ன்னு சந்தோ சமா சொல்லு தாயி. நானக் காலயில கோழி கூவறப்ப வெள்ளனவே கௌம்பறோம். வரட்டா தாயி?"

புடைவையை உதறிச் செருகிக் கொண்டு படியிறங்கி நடந்தாள் முத்தம்மா.

ரெடிமேட் ஆடைகள் ப்ளாட்பாரம் முதல் பெரிய கடைகள் வரை விற்பனையாகிறது. ஆனால், சிறந்த... நல்ல... தரமான ரெடிமேட் ஆடைகளை வாங்கும் போது கவனிக்க வேண்டிய முக்கிய விஷயங்கள் பலருக்குத் தெரிவதில்லை... அதனைப் பற்றி அறிந்து கொள்ள, மதுரை அம்மன் சன்னதித் தெருவில்

*தரமான நல்ல ரெடிமேட் ஆடைகள் அதிகபட்சம் பம்பாயில்தான்*

*• கைலாஷ்*





# கட்டிங், ஃபிட்டிங்

இருக்கும் பிரபல 'ஸ்கைலார்க்' ரெடிமேட் ஆடையகம் அதிபரும், ஜவுளித் தொழிலில் பரம்பரையாக ஈடுபட்டு நல்ல அனுபவம் பெற்றவருமான திரு. கைலாஷ் அவர்களிடம் நம் சந்தேகங்களைக் கேட்டோம்....

***நல்ல ரெடிமேட் ஆடை எப்படி இருக்க வேண்டும்?***

‘‘ஷேப்... கட்டிங்... ஃபிட்டிங் இவை சரிவர இருக்க வேண்டும்.

தயாராகின்றன. அப்படி அங்கே தயாராகும் ஆடைகள் சிலர் தயாரிப்பது போல ஒரு தையல் மட்டும் போடப்படுவதில்லை. தையல் ஒன்று போடப்பட்டு அந்தத் தையல் பிரியாமல் இருப்பதற்கு ஓவர்லாக் ஸ்டிட்சிங் - மறுதையல் போடுகிறார்கள். அதனால் நாம் வாங்கி பல தடவை உபயோகித்தாலும் தையல் பிரியாமல் இருக்கிறது. ரெடி



# பார்க்க வேண்டும்!



• கச்சிதமான உடைகள்...

மேட் ஆடைகள் வாங்கும்போது முதலில் இதைக் கவனிக்க வேண்டும். இதை நாங்களும் கருத்தில் கொள்வதால்தான் நல்ல பெயர், புகழை துவங்கப்பட்ட இரண்டே வருடங்களில் பெற்று விட்டோம்.''

*ரெடிமேட் ஆடைகள் தோய்த்தால் சுருங்குகின்றனவே?*

''பொதுவாக மில் துணிகளை வாங்கினால் சுருங்காது. காரணம், அவர்கள் முறையான ப்ராசசிங் - செய்முறையைக் கையாளுகிறார்கள். ஆனால் பவர்லூமில் தயாரான துணிகள், டூப்ளிகேட் துணிகள், இவற்றைச் சிலர் தயாரிக்கிறார்கள். இதனை வாங்கி ரெடிமேட் ஆடைகளாகத் தைத்து விற்பனைக்கு வருபவை தான் சுருங்குகின்றன. சாயமும் போய்விடும். நாங்கள் இப்படிப் பட்ட மலிவான ஆடை தயாரிப்பாளரிடம் வாங்குவதே இல்லை. தரமான ஆடை தயாரிப்பாளரைத் தேடிச் சென்று வாங்குகிறோம். வாடிக்கையாளர் சிறு புகார், குறை கூறினாலும் அதனை எங்களுக்குத் தந்த ஆடை தயாரிப்பாளருடன் வர்த்தகத்தை நிறுத்தத் தயங்குவது கிடையாது.''

*ரெடிமேட் ஆடைகளில் பாசி மணிகள் எளிதில் உதிர்ந்து விடுகின்றனவே?*

''தரமான தையல் நூல்களைக் கொண்டு தைத்திருந்தால் பாசிமணிகள் உதிரவே உதிராது. சாதாரணமாக 'மதுரை கோட்ஸ்' தையல் நூல் ட்யூப் நான்கு ரூபாய்... மற்ற லோக்கல் கம்பெனி தையல் நூல் ட்யூப் ஒரு ரூபாய், இரண்டு ரூபாய்தான் இருக்கும். மதுரை



• ரெடிமேட் ஆடைகள் வாங்கும்போது கவனித்து வாங்க வேண்டும்...

கோட்ஸ் தையல் நூல் கொண்டு தைத்த பாசிமணிகள் உதிராது. இந்தத் தையல் நூல் விஷயத்திலும் கவனம் செலுத்தி ஆடைகளை வாங்குகிறோம். வாடிக்கையாளர்களும் இவற்றையெல்லாம் கவனித்து வாங்க வேண்டும்...''

''அதேபோல் ரெடிமேட் ஆடை ஃபினிஷிங்கையும் கவனிக்க வேண்டும். நூல் நூலாகப்பிரிந்து போகிறதா, தையல் பலவீனமாக இருக்கிறதா என்றெல்லாம் கவனிக்க வேண்டும். தரமான ரெடிமேட் தயாரிப்பாளர் தங்கள் தயாரிப்பை சிறுவர்... சிறுமிகள்... பெண்களுக்குப் போட்டுப் பார்த்துச் சரிசெய்து தயாரிக்கிறார்கள். அதனால் ஃபினிஷிங் நன்றாக இருக்கிறது.''

***நவீன ரெடிமேட் ஆடைகளை வீட்டில் தோய்க்க முடிவது இல்லையே?***

''விலை அதிகமான பட்டுப் புடைவைகளைப் போல் தான் இவற்றையும் 'ட்ரை கிளீனிங்' செய்யத்தான் வேண்டும். யானை வாங்கிவிட்டு அங்குசம் வாங்க யோசிக்கலாமா? விலை உயர்ந்த ரெடிமேட் ஆடைகளை வீட்டில் தோய்த்து உடுத்துவது சரியில்லை. ட்ரை கிளீனிங் செய்வதே பாதுகாப்பானது.''

***ரெடிமேட் ஆடைகள் வாங்கும்போது கவனிக்க வேண்டிய முக்கிய விஷயங்கள் பற்றி...?***

''உடல் பருமனான பெண்கள் நைட்டி வாங்கும்போது, ப்ரீசைஸ் நைட்டி வாங்காமல் 'எக்ஸ்ட்ரா ப்ரில்' வைத்த நைட்டி வாங்க வேண்டும். 'ப்ராக்' என்றாலே முழங்கால் வரைதான் இருக்கும். படித்த பெண்கள் கூட பாதம் வரை 'ப்ராக்' வேண்டும் என்று தவறாகக் கேட்பதைத் தவிர்க்க வேண்டும். ரெடிமேட் ஆடைகளில் தரமான தையல் நூல் இல்லை என்றால் பட்டன்... ஹூக்... ஜிப்புகள் சரிவர இருக்காது. அதனைச் சரிவர இழுத்துப் பார்த்துப் பரி




சோதித்து வாங்க வேண்டும். மிகவும் இறுக்கமாக ஆடைகளை வாங்காமல் கொஞ்சம் லூசாக வாங்குவது நல்லது. விலை மலிவு என்று கண்ட இடத்தில் வாங்காமல் தரமான ஆடையகத்தில் வாங்குவது சிறந்தது. எந்த ஆடை வாங்கினாலும் டிரெஸ்ஸிங் ரூமில் போட்டுப் பார்த்து வாங்க வேண்டும்.''

*சிறந்த ரெடிமேட் ஆடைகளை வாங்குவது பற்றி நல்ல விளக்கம் தந்த திரு. கைலாஷிடம் 'ஸ்கைலார்க்' என்று பெயர்*

வைத்ததற்கான காரணத்தைக் கேட்டபோது –

"ஆஸ்திரேலியா நாட்டில் காண்பதற்கு அரிதான பறவை பெயர் 'ஸ்கைலார்க்'. அந்தப் பெயரைச் சூட்டி மற்ற ஜவுளிக் கடைகளில் கிடைக்காத புதிய ஃபேஷன் ரெடிமேட் ஆடைகளை விற்பனை செய்யவேண்டும் என்ற காரணத்தினால்தான் அந்தப் பெயரை வைத்தோம்" என்கிறார்.

சென்னையைப் போல மதுரையும் நவநாகரீகப் பெண்களின் விருப்பம் போல மாறத் தொடங்கிவிட்டது என்பதற்கு உதாரணம் – இவர் கடையில் குவிந்து கிடக்கும் வண்ணமயமான மிடி, சுடிதார், நைட்டி, பிராக், பேண்ட்டீஸ், பிரா, பெட்டிகோட் இவைகள்.

அதேபோல ஊழியர்களுக்கு யூனிஃபார்ம், வெளிநாட்டுக் கடை போல தோற்றமளிக்கும் ஆரஞ்சு நிற கவுண்டர், கேன்கார்டு, சிட்டி கார்டு இவற்றை மாற்றும் வசதி – இதையெல்லாம் பார்க்கும்போது ஆச்சர்யமாகத்தான் இருக்கிறது. 'ஸ்கைலார்க்' மதுரையில் நவீனப் புரட்சியையே செய்து கொண்டு இருக்கிறதோ என்று எண்ணத் தோன்றுகிறது.

கைலாஷ் ஸ்கைலார்க்கில் நடந்த ஒரு சுவையான சம்பவத்தை விவரித்தார்.

"வசதி படைத்த ஒரு பெண்மணி காரில் வந்து இறங்கி எங்கள் கடையில் ஜவுளிகள் வாங்கிக் கொண்டு கிளம்பியபோது, நிறைய பணம் வைத்திருந்த ஹேண்ட்பேக்கைக் கடை கவுண்டர் அருகே மறதியாக வைத்துச் சென்றுவிட்டார். பையைப் பார்த்து முதலில் பயந்தாலும், பிறகு துணிந்து எடுத்து உள்ளே இருந்த விசிட்டிங் கார்டைப் பார்த்து அதனை அந்தப் பெண்மணியின் வீட்டிற்குக் கொடுத்தனுப்பி வைத்தோம். அந்த ஒரு மணி நேரம் டென்ஷனை மறக்கவே முடியாது அவரும் பேசாமல் வாங்கி வைத்துக் கொள்ளாமல் எங்கள் நேர்மைக்காகப் பாராட்டி எங்கள் ரெகுலர் வாடிக் கையாளராக ஆகிவிட்டதும் மறக்க முடியாததுதான்" என்று சிரிக்கிறார்.

பேட்டி, படங்கள் :

**விஜயா கண்ணன்**



இப்பொழுது அநேகமாக மொசைக் தரை தான்போடுகிறார்கள். இந்த மாதிரியான தரை உள்ள வீடுகளில் பொடிக் கோலம் போட்டால் எடுபடாது. முதலில் தரையை கோலம் போடத் தேவையான அளவுக்குச் செம்மண் அல்லது காவியைக் கொண்டு சதுரமாக, பரவலாக மெழுகிவிடுங்கள். அதன்மேல் ரங்கோலியைப்போடுங்கள். பளிச்சென்று இருக்கும்.

- கே. நீலா

# புதிய மாக்ஸிமம் டெய்லி ஃபேஸ் வாஷ்.

"ஏனெனில் என் சருமம் சோப்பினால் வறண்டு போவதை நான் அறிவேன். ஆனால் அது உண்மையில் சருமத்தை பாதிப்பதை நான் அறிந்திருக்கவில்லை."

**சோப்பு உங்கள் சருமத்தை எவ்வாறு பாதிக்கிறது ?**

ஒவ்வொருமுறையும் சோப்பினால் உங்கள் முகத்தை கழுவும் பொழுதும் அது சருமத்தை வறண்டு போகச் செய்வதோடு மட்டுமின்றி இறுக்கமான, இழுத்தாற்போன்ற உணர்வையும் தருகின்றது. சோப்பு உங்களது சருமத்தின் நுட்பமான PH பாலன்ஸை பாதிப்பதன் மூலம், உங்கள் முகத்தின் பாதுகாப்பு பரப்பிலுள்ள இயற்கை எண்ணெய் மற்றும் ஈரப்பதத்தை சேதப்படுத்துகிறது.

**PH பாலன்ஸ் என்பது என்ன ?**

PH பாலன்ஸ் என்பது உங்கள் சருமத்தின் ஈரப்பதம் - எண்ணெய் பாலன்ஸினால் உருவாக்கப்படும் அத்தியாவசிய ஸ்கின் கண்டிஷனாகும். உங்கள் சருமம் மிருதுவாகவும் மென்மையாகவும் இருப்பதற்கு உங்கள் சருமத்தின் PH பாலன்ஸை பராமரிக்க வேண்டியது இன்றியமையாததாகும்.

**புதிய மாக்ஸிமம் டெய்லி ஃபேஸ் வாஷ்.**

சோப்பைப் போல் அல்லாது, புதிய மாக்ஸிமம் டெய்லி ஃபேஸ் வாஷ் உங்கள் சருமத்தின் PH பாலன்ஸை பராமரிக்கிறது. ஆகவே இது உங்கள் முகத்தை தூய்மையாகவும் மென்மையாகவும் சுத்தம் செய்வதோடு, அதன் இயற்கை எண்ணெய் மற்றும் ஈரப்பதத்தையும் காக்கிறது. அதன் பயனாக உங்கள் சருமம் மிருதுவாகவும், சுத்தமாகவும் பொலிவுடனும் திகழ்கிறது.

புதிய மாக்ஸிமம் டெய்லி ஃபேஸ் வாஷ் உபயோகியுங்கள் – புத்துணர்ச்சி தரும் ஜெல் வடிவிலே. உண்மையிலேயே மாறுதலை உணர்வீர்கள்.

MAXIMUM
DAILY
FACE WASH
LAKME

புத்துணர்ச்சி தரும் ஜெல்

லக்மே

மென்மையாக சுத்தம்செய்கிறது பாதிக்காமல்.

குறுநாவல்

(சென்ற இதழ் தொடர்ச்சி...)

# இரவில் சூரியன்

என்ன ஆச்சு இவருக்கு. ஏன் என்னவோ போல இருக்கிறார். வழக்கமாய் இந்த அளவு முரண்டு பிடிக்க மாட்டாரே.

"ஆங். சொல்ல மறந்து போயிட்டேனே. ரெண்டு நாள் முன்னால நீங்க ஃபோன் பண்ணீங்களா... எங்க பிராஞ்சுக்கு."

நடிக்கிறான் என்பது போலப் பார்த்தான்.

"...நான் பர்மிஷன்ல போயிட்டேன். நினு வுக்கு அன்னிக்குத்தான் நல்ல ஃபீவர். அம்மா வும் ரொம்ப டென்ஷனாயிட்டாங்க. எனக்கோ லீவு பிரச்னை. நல்ல வேளையா நம்ம குருராஜ ஸார்தான் என்னோட வேலை யைச் செய்யறேன்னு ஒத்துகிட்டாரு."

"ஓஹோ..."

"அவர் கூட என்ன காரணம்னு தெரியலே. ரெண்டு நாளா ஆபீஸ் வரலே... மூர்த்தி கூட அவரைப் போய் பார்க்கணும்னு சொல்லி கிட்டு இருந்தாரு."

சங்கர் மௌனமாய் எதிர்ச்சுவரை வெறித்தபடி அமர்ந்திருந்தான். வேண்டுமென்றே என் சந்தேகம் தெரிந்து தானாகவே பேச்சை எடுத்துச் சமாளிக்கப் பார்க்கிறாள் என்று நினைத்தான்.

"சரி- அப்ப இன்னிக்கு பேச்சு இல்லே. தூக்கம்தானா..." என்றாள்.

படுத்துக் கொண்டான். வித்யா அவன் மேல் வைத்த கையை விலக்க முயற்சிக்கவில்லை. அதே நேரம் ரசிக்கவும் இல்லை.

பத்தாவது நிமிடம் வித்யா குழந்தை போலத் தூங்கிப் போக அவன் மட்டும் கொட்ட கொட்ட விழித்திருந்தான். அலுத்துப் போய் தூங்கிய போது மணி இரண்டு.

திங்கள் அன்று வித்யாவுக்கு இன்னொரு கடிதம் வந்தது, பத்திரிகையிலிருந்து.

"வாழ்த்துக்கள். நன்றாக இருக்கிறது. நேரில் வந்தால் எத்தனை இதழ்களில் முடிக்க வேண்டி இருக்கும் என்பது உள்பட சிற்சில மாற்றங்கள் குறித்தும் தெளிவாகப் பேசி விடலாம்" என்று எழுதியிருந்தது.

வித்யாவுக்குச் சங்கடமாக இருந்தது.

'ஏதோ எழுதினேன். பிரசுரமானது என்று இல்லாமல்... இது என்ன புது அவஸ்தை' என்று தோன்றியது.

நினைத்தால் கிளம்பிப் போகிற மாதிரியா என் நிலை இருக்கிறது.

யாரிடமாவது மனம் விட்டுப் பேசினால் தேவலை என்று தோன்றியது. ஆலோசனை கேட்க வேண்டும். என்ன செய்யலாம் என்று.

தேன்மொழி, பூரணி இருவருமே அந்த அளவு அனுபவ அறிவு இல்லாதவர்கள்.

'வரச் சொல்றாங்க' என்றால் 'போயிட்டு வாயேன்' என்பார்கள். 'எப்படிப் போக முடியும்' என்று கேட்டால் 'சரி- போகாதே' என்று சொல்லி விடுவார்கள்.

தீர்க்கமாய் அலசி 'இன்னது செய்' என்று சொல்கிற தெளிவு அவர்களிடம் இல்லை.

மூர்த்தி கொஞ்சம் வம்பு. நான் ஒன்று விசாரித்தால் அவன் வேறு மாதிரி பப்ளிசிடி கொடுத்து விட்டுப் போவான்.



எஞ்சியது குருராஜ் மட்டுமே. இருப்பதற்குள் தேவலை. தனது குடும்பச் சூழல் புரிந்தவன். ஒருவேளை நல்ல ஆலோசனை தரலாம். இரண்டு நாட்களாய் வராதவன் இன்று வந்து விட்டான். “என்ன லீவு” என்று விசாரித்த மாதிரியும் இருக்கும். கேட்க வேண்டியதையும் கேட்டு விடலாம். தானாகவே குழம்புவதைவிட பேசினால் எனக்கே கூட ஒரு ஐடியா வரலாம்.

போனான்.

“என்ன லீவு... ரெண்டு நாளா.”

“ஃபாதர்க்கு உடம்பு சரியில்லே.”

“ஓ... என்ன ஆச்சு- இப்ப தேவலையோ.”

“ம்.. லேசா பெயின்னு சொன்னார். ஐசில வச்சிருந்தாங்க.. இப்ப நார்மல். ரெண்டு, மூணு நாள்ல வீட்டுக்கு வந்துருவார்...”

இவனிடம் இப்போது தன் பிரச னையை பற்றி பேசுவது அத்தனை சரி யானது இல்லை என்று தோன்றி யது.

“என்ன விஷயம். ஏதோ கேட்கணும்னு வந்த மாதிரி தெரிஞ்சது” என்றான்.

“ஓ... ஒன்னு மில்லே. ஏன் லீவுன்னு ரான்” என்றான்.

“பார்த்திங்களா. நான் யாரு. மைண்ட் ரீடர்... என் ட்டேயே பிலா வுட்டா...” சொன்னான்.

“லோ. நீங்க மெட்ராஸ் போக ணும். என்ன செய்யிறதுன்னு புரி யலே. இல்லியா..”

“ஆமா...” என்றான் அழாத குறையாய். பகிர்ந்ததில் மனசு லேசான மாதிரி இருந்தது.

“இது ஒரு நல்ல சான்ஸ். அவங்க உங்களை நேரே வரச் சொல்றதுக்கு ஒரே காரணம். உங்களைப் பார்க்கணும்னு தோன்றியிருக்கலாம். உங்களுக்கும் ஒரு வாய்ப்பு. ஒரு பத்திரிகை ஆபீஸோட காண்டாக்ட்.. தொடர்பு.. அதுவே வேறசில நல்ல வாய்ப்புகளுக்கும் காரணமாக மாறலாம். லோ... நீங்க போகறது ரொம்ப நல்லது.”

“நான்... எப்படி?...”

“தினேஷ் பாட்டி கூட இருப்பான்தானே...”

“தெரியலே... இதுவரை தனியா விட்டுட்டுப் போன தில்லே...”

“அதர்வைஸ்... அவனையும் அழைச்சுகிட்டு போங்க. ஒரு சேஞ்சா இருக்கும். பட்... டோண்ட் மிஸ்... புரியுதா...”

“சரி..” என்றான் இன்னும் குழப்பமாகி. பேசினால் தெளியும் என்று நினைத்தது பொய்யாகிப் போனது. உள்ளூர அவன் போக வேண்டாம் என்று தடுப்பான் என நினைத் தான்.

அவனே போகலாம் என்று சொன்னதும் தடுமாற்றம் வந்தது.

**ரிஷபன்**

# பஜாஜ் அறிமுகம் செய்
# உற்சாக சவாரிக்கு இட்






இங்கும் அங்கும் அலைந்து திரிந்து களைத்து விட்டீர்களா? இதோ பஜாஜ் அளிக்கிறது ஓர் தீர்வு-புதிய ஸன்னி 'ஸிப்'. சிறந்த பிக்-அப் தர அதிக சக்தி வாய்ந்த 60 cc என்ஜினுடன் இது வருகிறது. அத்துடன், கவர்ச்சிகர பக்கவாட்டு இண்டிகேட்டர்களும் உண்டு. கியர்கள் இல்லை. 'கிக்' ஸ்டார்ட் வசதியும் உண்டு. எளிதான பயணம் மட்டுமே. ஆம். மேற்கண்ட அனைத்து வசதிகளும் ஓராண்டு கால இலவச மெயின்டனன்சுடன். எனவே, நீங்கள் சொகுசாக சீறி விரைய இது ஓர் அரிய வாய்ப்பன்றோ ! 'ஸிப்'பென விரையுங்கள். 'ஸிப்'பைக் கைப்பற்றுங்கள்.

bajaj auto ltd

Value for money, for years.

# கிறது ஸன்னி 'ஸிப்'
# போது அதிக சக்தி !



Sunny ZIP

ஒய்யார வாகனம் ஓட்டுவதும் சுலபம்

LINTAS Baj Sn 655 2431 Tm R



சூடான கேக்கை ஸ்லைஸ் செய்ய கத்திக்குப் பதிலாக ஒரு 'நைசா'ன நூலை உபயோகிக்கவும். பிசிறின்றி கேக்கை நறுக்க முடியும்.

— உஷா

---

"சங்கருக்கு ஃபோன் பண்ணி சொல்லிடுங்க..."

"அவரே இன்னிக்கு ஃபோன் பண்ணுவாரு. எப்பவும் இங்கே வந்திட்டுப் போனதும் உடனே ஃபோன் பண்ணுவாரு..."

"அப்புறம் என்ன.. சொல்லிருங்க. ஆல் த பெஸ்ட்" என்றான்.

அன்று மதியம் குருராஜ் கிளம்பிப் போய் விட்டான், அரை நாள் விடுப்பில்.

வித்யாவுக்கு ஃபோன் வந்தது, சங்கரிடமிருந்து.

"...நாதான்..." என்றான்.

"என்னங்க... மறுபடி ஒரு லெட்டர் வந்திருக்கு... என்னை நேர்ல வரச் சொல்லி..."

"ஓஹோ..."

"என்ன செய்யிறதுன்னே புரியலே..."

"ம்..."

"நீங்க என்ன சொல்றீங்க..."

"உன் இஷ்டம்..."

ஃபோனை வைத்து விட்டான். வித்யா ஒன்றும் புரியாமல் ரிசீவரை வெறித்தாள்.

"என்ன வித்யா... பேசாம நிக்கிறே..."

"லைன் கட்டாயிருச்சு..."

"வச்சிருங்க... மறுபடி பேசுவாரு..."

இல்லை.. பேசவில்லை. வித்யா ரொம்பவும் தடுமாறிப் போனாள். எதற்கும் இருக்கட்டும் என்று இரண்டு நாட்கள் லீவு சொன்னாள்.

"என்ன விசேஷம்..."

"மெட்ராஸ் போகணும்.. பர்சனலா ஒரு பிரச்னை..." என்றாள். லீவு கிடைத்து விட்டது

வித்யாவுக்கு நல்ல வரவேற்பு.

பத்திரிகை ஆசிரியரும் ஒரு பெண்மணிதான்.

"உங்க கதைகளுக்கு வந்த கடிதங்களைப் பார்க்கிறீங்களா..." என்றார்.

வித்யா ஆர்வமாய்த் தலையசைக்க ஒரு கட்டு கடிதங்கள் தரப்பட்டன.

"உங்களோட தொடர் வேணும்னு எங்க எடிட்டோரியல்ல எல்லாரோட விருப்பம். என்ன வேடிக்கை பாருங்க. இப்ப வருகிற தொடர் இன்னும் ரெண்டு மாசத்துல முடியப் போவுது. அடுத்தது யாரைக் கேட்கலாம்னு நாங்க பேசினப்போ... ஒவ்வொருத்தர் மனசுலயும் உங்க பெயர் இருந்தது தெரிய வந்தது..."

எதிரே அமர்ந்து புகழுரை கேட்க சங்கடப்பட்டாள் வித்யா.

"நான் எப்படி நன்றி சொல்றதுன்னே புரியலே" என்றாள் நிஜமான நெகிழ்வுடன்.

"நீங்க நல்லா எழுதறீங்க. போடறோம். அவ்வளவுதான். அப்ப... ஒண்ணு செய்யிங்க. நேர்லயே வந்தாச்சு... முதல் இரண்டு இஷ்யூக்கு எழுதிக் கொடுத்துட்டுப் போயிருங்க. மீதியை அப்புறம் எழுதி அனுப்பிருங்க. அடுத்த மாசமே அறிவிப்பு போட்டுடறோம். தலைப்பு இரவில் சூரியன் தானே..."

வித்யா மீண்டும் நன்றி சொல்லிவிட்டு வந்தாள். வெளியே வந்து பஸ்ஸுக்குக் காத்திருந்த போது பெருமிதம் கூடியிருந்தது.

நான் சாதாரண பெண் அல்ல. எழுத்தாளர். அதுவும் என்னையும் நேசிக்கிற வாசகர்களைக் கொண்டவள். என் எழுத்து மேன்மையானது. என்னால் பாதிக்கப்பட்டு வாழ்வில் நம்பிக்கை பெறும் ரசிகர்கள் இருக்கிறார்கள்.

கனகம் ஆச்சர்யப்பட்டாள்.

"என்னம்மா... ரெண்டு நாள்னு சொன்னே.. ஒரே நாள்ல திரும்பிட்டே..."

"ஆமாம்மா... போனதும் பார்த்தேன். வேலை முடிஞ்சுது. திரும்பியாச்சு..."

"எப்ப வருமாம்..."

"ரெண்டு மாசத்துல. அடுத்த மாதம் விளம்பரம் வரும்."

"எவ்வளவு தருவாங்களாம்."

"தெரியலேம்மா.. கேட்க முடியலே..."

"அதுல என்ன கூச்சம்... பட்டுனு கேட்க வேண்டியதுதானே..."

"நல்லா இருக்காது. கூப்பிட்டு சான்ஸ் தராங்க..."

"சும்மாவா... நீ நல்லா எழுதறே... அதனால கூப்பிட்டாங்க. இல்லேன்னா கூப்பிடுவாங்களா."

"தினேஷ் சமர்த்தா இருந்தானாம்மா."

"ம். முதல்லே கொஞ்சம் அழுதான். அப்புறம் சரியாயிட்டான். ஸ்கூல் போக வேணாம்னு சொன்னதும் படு குஷி."

"இன்னிக்கு ஆபீஸ் போகலே. ரொம்ப டயர்டா இருக்கு."

"ரெஸ்ட் எடுத்துக்கோ. என்னவோ போ. வயசானப்புறம்தான் எனக்கு வலி வருது. இப்ப சின்ன வயசுலேயே வலி சொல்றீங்க."

கனகத்திற்கு மறந்து போனதா அல்லது தெரியவில்லையா என்று புரியவில்லை. இன்னொரு வாரிசு தன் வயிற்றில் உருவாவது பற்றி வித்யா அவனிடம் பேசவில்லைதான். சங்கர் சொல்லியிருக்கக் கூடும் என்று நினைத்தாள்.

இருந்தாலும் இன்று தானும் சொல்லிவிட வேண்டும், பின்னால் வருத்தப்பட்டு ஏதாவது சொல்லுமுன்.

தினேஷ் தூங்கிக் கொண்டிருந்தான்.

பக்கத்தில் போய் படுத்துக் கொண்டாள். மணி ஐந்தரைதான். இன்றுதான் லீவு ஆயிற்றே. கொஞ்ச நேரம் தூங்கலாம்.

குருராஜின் அப்பா தவறிப் போயிருந்தார். நன்றாகத்தான் இருந்தாராம். மறுநாள் டிஸ்சார்ஜ் செய்து வீட்டுக்கு அழைத்துப் போகலாம் என்று நினைத்தபோது மீண்டும் நெஞ்சு வலி என்று சொல்ல, டாக்டர் வருமுன் உயிர் பிரிந்து விட்டது. நேற்றுதான் இறுதிச் சடங்குகள் நடந்தன.

வித்யாவுக்கு செய்தி அறிந்ததும் திடுக்கிட்டுப் போனாள். நேற்று உடல் அலுப்பு என்று வீட்டில் தான் இருந்தாள். இன்று பிராஞ்சுக்கு வந்ததும் குருராஜைத் தேடியதும் கிடைத்த தகவல்.

பத்திரிகை ஆபீஸ் போய் வந்த விவரம் சொன்னால் சந்தோஷப்படுவான் என்று பார்த்தால், இப்படி ஒரு வருத்தமான செய்தி.

'இனிமே வர பத்து, பனிரண்டு நாட்களாகும்.'

நேரில் போய் துக்கம் கேட்க வேண்டும் என்று தீர்மானித்தாள். இரண்டொரு நாளில் 'ஒன் அவர்' பர்மிஷன் கேட்டுப் போகலாம்.

சங்கர் அதிசயமாய் அந்த வாரம் வெள்ளிக் கிழமை அன்றே வந்து விட்டான்.

"என்னாங்க.."

"...ஆபீஸ் வேலை ஒன்னு இருந்தது. நல்லதாப் போச்சன்னு வந்தாச்சு" என்றான்.

"நம்ம குருராஜோட அப்பா தவறிட்டார்" என்றாள்.

"ஓ."

"வரீங்களா.. போயிட்டு வந்திரலாம். நேர்ல துக்கம் கேட்க வேணாம்?"

"நாளைக்கு என்னால முடியாது. ஸண்டே வேணா பார்க்கலாம்.

"நான் நாளைக்கு லீவு போடலே. அரை நாள்தானே. போயிட்டு வந்திடறேன்."

"ம்.."

"ஆங். அப்புறம் இன்னொரு விஷயம். நான் மெட்ராஸ் போயிட்டு வந்தேன்."

"ஓ."

"நல்ல வரவேற்புங்க. என்னோட கதை ரொம்பப் புடிச்சிருக்காம். தொடர் வரப் போவுதுங்க. இரவில் சூரியன் தலைப்பு நல்லா இருக்கா."

"அப்ப இருட்டுலயும் கண்ணு தெரியுமா..."

கூர்ந்து கவனித்தால் மட்டுமே புலப்படக் கூடிய மன முனகல்கள். ஒற்றை வார்த்தை பதில்கள். இயல்பற்ற சம்பாஷணைகள்.

வித்யாவுக்கோ இவை ஏதும் புலப்படாமல் கணவன் தன் பேச்சைக் கவனித்து ஏதோ பதில் சொல்கிறான் என்கிற அளவில் திருப்தியானாள்.

இந்த வாரம் சங்கர் ஃபோன் செய்தான். அதாவது வித்யா சென்னை சென்ற அன்று.

"இல்லீங்களே... லீவு.. ரெண்டு நாள் வர மாட்டாங்க.."

"குருராஜ் இருக்காரா..." என்றான் அவனையும் மீறி.

"அவரும் லீவு..."

ஏன் லீவு என்று இவனும் கேட்கவில்லை. அவனும் சொல்லவில்லை. ஃபோனை வைத்து விட்டான்.

ஏற்கெனவே நோவு கண்ட மனம். மீண்டும் புண்ணானது.

வித்யாவுக்கு உள்ளூர படபடப்பு. இந்த வாரத்திற்குள் முழுக் கதையையும் எழுதி அனுப்பி விட வேண்டும் என்று நினைத்திருந்தாள்.

இந்த வாய்ப்பு அவளுக்குள் புது உற்சாகங்களைத் தூண்டிக் கொண்டிருந்தது.

இன்னொரு வாய்ப்பு இதைப் போலத் தேடி வருமானால் அந்த நேரம் எந்த விதத் தயக்கமும் இன்றி இன்னொரு கதையுடன் காத்திருக்க வேண்டும் என்று தீர்மானித்தாள்.

அதற்காகவே 'இரவில் சூரியனை' எழுதி அனுப்பிவிட்டு அடுத்த படைப்பை உருவாக்க முயற்சிக்க வேண்டும்.

தினு வயிற்றில் இருந்த போது இந்த அளவு சிரமப்படுத்தவில்லை. மசக்கை போன்ற உபாதைகளும் அதிகம் இல்லை. ஓரிரு முறை சங்கடப்படுத்தியதோடு சரி. நார்மல் டெலிவரிதான்.

---

தர்மோக் கோலில் ஏதாவது டிசைன் வரைந்து அதை வெட்டுவது மிகவும் கஷ்டமாக இருக்கும். ஆதலால் கத்தியை விளக்கில் காட்டி சூடானதும் எந்த இடத்தில் வெட்டவேண்டுமோ அந்த இடத்தில் வைத்தால் பிசிறாக இல்லாமல் அழகாக, எளிமையாக வெட்ட வரும். சூடு ஆறியதும் திரும்பக் காட்டி வெட்டலாம்.

-காயத்ரி





குழந்தைகளுக்கு டிபன் பாக்ஸில் இட்லி கொடுத்து விடும்போது முதலில் இட்லியின் இருபுறமும் எண்ணெய் தடவிவிட்டு, ஒரு கிண்ணத்தில் புளிக்காத தயிரும், மிளகாய்ப் பொடியையும் கலந்து வைத்துக் கொண்டு, அதில் இட்லியை இருபுறமும் தோய்த்து வைத்தால், மதியம் இட்லியைச் சாப்பிட, சமமான காரத்துடன், மிருதுவாக தொண்டைக்குள் இறங்கும்.

— உமா

---

இரண்டாவது முறை தாயானபோது ஆரம்பம் முதலே நிறைய தடவை வாந்தி வந்தது. தூக்கம் வராமல் தொல்லைப்படுத்தியது. சாப்பாடு பிடிக்கவில்லை. அக்கடாவென்று படுத்துக் கிடந்தால் போதும் என்று தோன்றியது. வேலைக்குப் போவதே பெரும் பாரமாய்த் தோன்றியது.

கனகம் உடல் அளவில் பெரும் பாதிப்பு இல்லையென்றாலும், மனதளவில் கற்பித்துக் கொண்ட வியாதிகளாலும், வயதானதின் அலுப்பாலும் ஒத்துழைக்க மறுத்தாள். சின்னச் சின்ன உதவிகள் செய்வதிலேயே பெரிதாய் சந்தோஷப்பட்டுக் கொண்டாள்.

வித்யாவுக்கு என்ன செய்வதென்று புரியவில்லை.

அம்மாவால் வர முடியாது. அது மட்டுமின்றி இரண்டாவது பிரசவம் இங்குதான், அம்மாவைச் சிரமப்படுத்தக் கூடாது என்ற தீர்மானம் வேறு. இப்போதோ அம்மாவாவது வந்தால் தேவலை என்று ஏக்கம் வரும் அளவு அலுப்புகள்.

கடிதம் போட்டிருந்தாள். தொடர் எழுதப் போவது.. இரண்டாவது உருவாவது.. எல்லாம் குறிப்பிட்டு.

பதிலில் 'கேட்க சந்தோஷமாக இருக்கிறது. இரண்டுமே உன்னுடைய 'மாஸ்டர் பீஸ்'களாக அமைய வாழ்த்துக்கள்' என்று அப்பாவும், 'உடம்பைப் பார்த்துக்கோ. வேளா வேளைக்குச் சரியாக சாப்பிடு. இரவில் கண் விழிக்காதே. கதையை விட குழந்தை முக்கியம். என்னால இப்ப வர முடியாது. டெலிவரி நேரத்தில் வருகிறேன்' என்று அம்மாவும் எழுதி இருந்தார்கள்.

கூடவே கொசுறு தகவலும். நேரில் வந்து பார்த்து விட்டுப் போவதாக. எப்போது வருவார்கள் என்று எழுதவில்லை.

இந்த நேரத்தில்தான் வித்யாவின் பெயருக்கு அந்தக் கடிதம் வந்தது. ஒரு தபால் கார்டு. வேண்டுமென்றே கார்டில் எழுதியிருக்க வேண்டும் அதை எழுதிய அந்த நபர்.

'உன் வாழ்க்கைச் சம்பவங்களை நீயே கதை எழுதலாம். கணவன் வெளியூரில் நீயும் வேறு பக்கம் போகிறாய். உன்னைப் போல் ஒரு எழுத்தாளர் இருந்தால் நாடு உருப்படும். மற்றவர்களுக்குப் புத்தி சொல்லாதே நீயும் இருந்து. ஊர் சுற்றாதே... உன் நலம் நாடும் நண்பன்.'

நிறைய பிழைகள் மலிந்த கிறுக்கலான கையெழுத்தில் ஒரு கடிதம். இதே ஊரில் போஸ்ட் செய்யப்பட்டிருக்க வேண்டும். அஞ்சலக முத்திரையில் தெரிந்தது.

கொண்டு வந்து கொடுத்த தேன்மொழி விசாரித்தாள்.

"என்ன இது. மொட்டைக் கடுதாசி மாதிரி." படித்திருக்க வேண்டும். பூரணிக்குத் தகவல் போய் அவளும் வந்து விட்டாள். பின்னாலேயே மூர்த்தி.

இன்னொருவர் அந்தரங்கம் என்பது எத்தனை சுவாரசியமான விஷயம் என்று அப்போதுதான் வித்யாவுக்குப் புரிந்தது. தனக்கு வந்த கடிதத்தைப் படிக்க இப்படி ஒரு போட்டியா...

"இதைச் சும்மா விடாதீங்க. நேரே மேனேஜர்கிட்டே போய் ரிப்போர்ட் பண்ணுங்க."

"இதைப் போய் எப்படி ரிப்போர்ட் செய்யறது."

"யாரோ உங்களைப் பத்தி தெரிஞ்சவங்கதான் எழுதியிருக்கணும்."

"அப்ப நம்ம ஆபீஸ்ல எல்லாரோட கையெழுத்தையும் சோதிக்கணும்."

"அதெல்லாம் எதுக்கு வீணா. ஆப்டர் ஆல் இது ஒரு மொட்டைக் கடுதாசி. அலட்சியப் படுத்திரலாம். கிழிச்சுப் போட்டுடறேன்."

"ச்ச... என்னங்க இது. கிழிச்சுட்டீங்க. அப்படியே வச்சிருந்து ஏதாச்சும் நடவடிக்கை எடுக்கலாம்."

"எப்படியெல்லாம் லெட்டர் வருது."

"பாவம்... ஒருத்தர் நல்லா இருந்தா பொறுக்காதே."

விமர்சனக் குரல்களிலிருந்து வித்யாவால் தப்பிக்க முடியவில்லை. சுற்றி நின்று பேசி விட்டுப் போனார்கள்.

அன்றிரவு அதே போல இன்னொரு மொட்டைக் கடிதம் சங்கரின் பையில் இருந்ததை வித்யா தற்செயலாகப் பார்த்தாள்.

## 5

**வி**த்யா மதியம் வீட்டுக்கு வந்தபோது சங்கர் வரவில்லை.

காலையில் வெளியில் போனானாம். கனகம்தான் சொன்னாள். தினேஷ் மட்டும்

உ

JAI BADRI VISHAL

# சாளகிராம் – முக்திநாத் – பத்ரி – கேதார்நாத் யாத்திரைகள்

# BADRI TOURIST - Smt. KALARAJAN

249-D Pocket -C, Mayur Vihar Phase II, New Delhi - 110 091
Phone: 2471779, 2476567

1. **சாளகிராம் – 15 வது தடவை: 11–12 நாட்கள்**
Fare Rs 4200/-+ Flight Charges Extra (2x2 Pushback seat)
நியுடெல்லி – நைமிய சாரண்யம் – அயோத்தியா – கோரக்பூர் – போக்ரா – கண்டகிநதி – முக்திநாத் – காட்மாண்டு – பசுபதிநாத் – நியுடெல்லி புறப்படும் தினம்: 14–4–96.

2. **காசியாத்திரை – 14 நாட்கள்**
நியுடெல்லி – நைமிய சாரண்யம் – அயோத்தியா – காசி – கயா – அலகாபாத் – ஆக்ரா – மதுரா – பிருந்தாவனம் – ஜெய்பூர் – புஷ்கர் – குருக்ஷேத்ரா – நியுடெல்லி புறப்படும் தினம்: 29–4–96. Fare Rs.3500/- (2 x 2 Pushback Seat)

3. **சிம்லாயாத்திரை –7 நாட்கள்**
நியுடெல்லி – சிம்லா –குப்ரி– குல்லு – மானாலி – ரோத்தாங்பாஸ் – சண்டிகர் – குருக்ஷேத்ரா – நியுடெல்லி புறப்படும் தினம்: 26-4-96 & May, June.
Fare Rs. 2500/- (2 x 2 Pushback Seat)

4. **பத்ரிநாத் மட்டும் – 7 நாட்கள்**
ஹரித்வார் – ரிஷிகேஷ் – ஜோஷிமட் பத்ரிநாத் புறப்படும் தினங்கள்:
1. 7–5–96 2. 15–5–96 3. 20–5–96 4. 3–6–96
Fare Rs. 1450/- (2 x 2 Pushback Seat)

5. **பத்ரி – கேதார்நாத் – 10 நாட்கள்**
ஹரித்வார் – ரிஷிகேஷ் – கேதார்நாத் – ஜோஷிமட் – பத்ரிநாத் – புறப்படும் தினங்கள்:
1. 15–5–96 2. 20–5–96 3. 3–6–96.
Fare Rs. 2000/- (2 x 2 Pushback Seat)

ஷயாத்திரைகள் டெல்லியிலிருந்து வசதியான பஸ். தென்னிந்திய பிராமணர்களால் தயாரிக்கப்படும் உணவு. தங்கும் வசதி (Dormitory) உட்பட ஷயாத்திரைகள் டெல்லியிலிருந்து கலாராஜன் நடத்துகிறார்கள்.

யாத்திரை பற்றி கீழ்கண்ட முகவரியிலும் தொடர்பு கொள்ளலாம்.

1. Sh. R. SRINIVASAN, No 5, Ist Floor, K.V. Colony, 2nd Street, West Mambalam, Madras -33 Phone : 4824442
2. Sh.N.D. NARSIMHAN, 15, Suburbina, 34/35 Shree Nagar, M.G. Road, Goresaon (W) Bombay - 62 Phone 8750901
3. Sh. R. Devanathan, No. 5, 12th Street Extension, Nangallur, Madras - 61. Phone : 2341751.

விளையாடிக் கொண்டிருந்தான்.

சங்கர் வரும்போது ஐந்து மணி ஆகிவிட்டது.

"என்னங்க... சக்சஸா..."

"ம்..."

"சூடா காபி, டிபன் ரெடி" என்றாள் சிரிப்புடன்.

சங்கர் பேசாமல் வாங்கிக் கொண்டான்.

மொட்டைக் கடிதம் பற்றி இந்த நிமிஷம் சொல்லலாமா, வேண்டாமா என்று யோசித்தான். பிறகு அப்புறம் சொல்லலாம் என்று விட்டு விட்டான். அற்ப விஷயத்திற்கு நானே ஏன் முக்கியத்துவம் தர வேண்டும்.

வித்யா சென்னை சென்று வந்ததைப் பற்றி சங்கரிடம் இன்னும் முழுமையாகப் பேச வில்லை என்ற குறை மனதில் இருந்தது.

"பிரமிச்சுப் போயிட்டேன். நிறைய லெட்டர்ஸ் வந்ததுன்னு காண்பிச்சாங்க..."

"ஓஹோ..."

"நிறைய பேர் நல்லாவே விமர்சிச்சு எழுதறாங்க. எவ்வளவு ரசனையா படிக்கிறாங்க. அதுலயும் நான் ரசிச்சு எழுதின வரிகளைக் குறிப்பிட்டு எழுதியிருக்காங்க சில பேரு. ஆச்சர்யமா இருக்கு. எப்படி அதே வரிகள் அவங்களையும் பாதிக்கதுன்னு..."

"எழுதினா பாதிக்கத்தானே செய்யும்-" என்றான்.

தினேஷ் ஓடி வந்து அப்பாவைக் கட்டிக் கொண்டான்.

"என்னது. கால்ல இவ்வளவு மண்ணு.."

"தெருவுல இத்தனை நேரம் ரகளை..."

"அப்புறம் ஏன் உடம்புக்கு வராது."

"அதுக்காக வீட்டுலயே அடைஞ்சு கிடக்க முடியுமா... பாவம். நீங்க வேற வாரம் ஒரு தடவைதான் வரீங்க. அதுலயே அவன் ஏங்கிப் போயிடறான்."

"ஏன்... வேற அப்பா கிடைக்கலியா... நான் பூரா இருக்கிற மாதிரி."

"என்ன உளர்றீங்க..."

சங்கர் மௌனமாய் தினேஷின் பிடிக்குள் சுழன்று கொண்டிருந்தான்.

வித்யா எழுந்து உள்ளே போனாள். திடீரென பேச்சு அலுத்தது. இடைவெளிகளில் சந்தித்துக் கொள்ளும்போது, எப்போது வருவார் என்று ஏங்கியது மட்டுமே தன் நினைவில் இருக்கிறது.

சங்கருக்கோ இந்தப் பிரிவு... தவிர்க்க முடியாத சூழ்நிலை என்பதை விட... கட்டாயமான விஷயம் என்பதில் சலபமாய் எரிச்சல்பட்டு பொருமி விடுகிறான்.

ஆரம்பத்தில் பதவி உயர்வு தந்த சந்தோஷம் மறைந்து போய் இப்போது மாற்றலால் வந்த அசௌகர்யங்களும் தொல்லைகளும் மட்டுமே விசுவரூபம் எடுத்து நின்றன.

இரவு படுக்கப் போனபோது வித்யாவின் பார்வையில் சங்கரின் ஷர்ட் தென்பட்டது.

"தோய்க்க வேண்டியதுதானே..."

ஹேங்கரில் இருந்து உருவி பாக்கெட்டில் துழாவி இரண்டாய் மடித்த அந்தக் கார்டை வெளியே எடுத்தாள்.

"இ...இது எப்படி உங்களுக்கு..."

சங்கரின் வெளியூர் விலாசத்திற்கு அதே நபரால் எழுதப்பட்டிருந்தது. ஏறக்குறைய அதே வரிகள். தொனி மட்டும் வித்தியாசமாய்... 'உன்னுடைய மனைவியை...'

பதற்றத்துடன் அவனிடம் வந்தாள்.

"ஏன் இதைப்பத்தி சொல்லலே..."

"எதுக்கு."

"எனக்குக் கூட இன்னிக்கு ஒண்ணு வந்தது. ஆபீஸ்ல பெரிய கலாட்டா. உடனே ரிப்போர்ட் பண்ணுங்க. ஆ...ஊன்னு. நாதான் மொட்டைக் கடுதாசியை வச்சு என்ன நடவடிக்கை யார் மேல எடுக்க முடியும். யாரோ வேண்டாதவங்க செஞ்ச வேலைன்னு கிழிச்சுப் போட்டேன்."

"இதையும் கிழிச்சுரு."

"பாருங்களேன். எப்படி விகல்பமா புத்தி போவுது. ஏங்க... அடுத்தவங்க நல்லா இருந்தா பொறுக்காதா... நம்ம கஷ்டம் நமக்குத் தெரியும். இப்படி வாரம் ஒரு தடவைதான் பார்த்துக்க வேண்டியிருக்கு. தினு அப்பா ஏம்மா நம்மகூட இல்லேன்னு தெனம் கேட்கறான். அம்மாவைத் தனியா விட்டுட்டு ஆபீஸ் போயிட்டு வர வரைக்கும் எப்படி டென்ஷன் ஆவுது. இதுல வயித்துல வேற. ஒவ்வொரு சமயம் என்னால

---



முதல் நாள் இட்லியை மறுநாள் உதிர்த்து உப்புமா செய்வதில் பல முறைகளைப் பார்த்து சலித்து விட்டோம். இதோ ஒரு புது வழி!

இட்லிகளை உதிர்த்து, மிக்ஸியில் நீர்விட்டு நைஸாக அரைக்கவும். இத்துடன் 1 ஸ்பூன் மைதா, நறுக்கிய ப.மிளகாய், கொஞ்சம் உப்பு சேர்த்து கரைத்து மெல்லிய தோசையாக வார்த்துப் பாருங்கள்! அப்போது அரைத்துச் செய்த புத்தம்புது 'பேப்பர் ரோஸ்ட்' போல் சுவையாக இருக்கும்.

– உமா



புதிதாக ஏதாவது ஒரு ஊறுகாய் செய்தால், பழைய எலுமிச்சை, கடாரங்காய் ஊறுகாய்களை யாருமே சீண்டு வதில்லை. எனவே, சட்னி, துவையல், கூட்டு வகைகள் செய்யும் போது, தேங்காய் மற்ற சாமான்களுடன் இந்த ஊறுகாய் துண்டுகளையும் சேர்த்து அரைத்து செய்தால் வாசனை தூக்கலாக இருப்பதுடன் மணமாக வும் இருக்கும். ஊறுகாயின் கரண்டு மட்டும் மீந்திருந்தால், அதில் ஒரு ஸ்பூன் எடுத்து, கூட்டு, கறிகளிலும் விட்டுக் கிளறலாம்.

— உமா

தாங்க முடியலீங்க. எல்லாத்தையும் விட்டுர லாம். உங்ககிட்டே ஓடி வந்துரணும்னு வெறி வரும்."

அழுதாள். மறியம் குமுறிய மனது இப் போது சுவாதீனமாய் வெளிப்பட்டு எந்த ஒளிவு மறைவும் இன்றி வெடித்தது.

சங்கர் நிதானமாய் எழுந்து விளக்கை அணைத்தான். விடிவிளக்கை ஒளிர விட்டான்.

வித்யா அவன் தன்னை அணைத்து ஆறு தல் படுத்துவான் என்ற உணர்வில் அழுது... சட்டென்று நிமிர்ந்து பார்த்தாள்.

படுத்து விட்டான். விழித்திருந்தாள். அரு கில் நகர்ந்து பக்கத்தில் படுத்துக் கொண்டாள்.

"எ...ன்னங்க. இந்த பிரமோஷன் வேணாம்னு மறுபடி இங்கேயே வர முடி யாதா."

"ஊஹூம்."

"என்னால தாங்க முடியலீங்க."

"அதுக்கு நான் என்ன பண்ணணும்.'

"வேற வழியே இல்லியா."

"உனக்குத் தெரியாதா..."

"என் வேலையை விடணும். கடனை வாங்கி வீட்டைக் கட்டிட்டு. இப்ப எப்படி வேலையை விட முடியும்."

"அப்ப பேசாம இரு."

"என்னங்க இது. விட்டேத்தியா பதில் பேசிகிட்டு. ஆறுதலா ஏதாச்சும் சொல்லு வீங்கன்னு பார்த்தா..."

"இது என்ன நீ எழுதற கதை மாதிரியா. கண்ணம்மான்னு ஹீரோ சொன்ன உடனே... அவ எல்லாக் கஷ்டமும் மறந்து புதுத் தெம் போட போனான்னு கதையிலதான் எழுத லாம்."

வித்யா சிரித்தாள். ரசனையாய்.

"பின்னே... இருக்காதா. நெஜம்மாவே கணவர் அன்போட ஒரு வார்த்தை சொன்னா லும் எங்களுக்கு ஆயிரம் யானை பலம் வந் திருமே."

"இந்த டயலாக்தானே வேணாம். யார் அவன்...?"

வித்யா கணவனின் வார்த்தை காதில் விழாமல்... அல்லது... சரிவரப் புரியாமல் அவன் சற்று முன்பு சொன்ன வரிகளின் குதூகலத்தில் இருந்தாள்.

"எ...என்ன."

"யார் அவன்... இந்த லெட்டரை எழுதி னது."

"தெரியலே... அது... தெரிஞ்சா சும்மா விடு வோமா- இன்னிக்கு... ஆபீஸ்ல."

"உங்க ஆபீஸ்ல ஒருத்தன்தானே எழுதி யிருக்க முடியும்."

"ம்... இருக்கலாம்..."

"அப்ப... அது யாரா இருக்கும்னு துளி சந் தேகம் கூட இல்லியா..."

"தெரியலியே... யார் மேல வீணா சந்தேகப் பட முடியும். தெளிவா... நிச்சயமாத் தெரியாமே கையெழுத்து புரிஞ்சுரக் கூடாதுன்னு வேணு மின்னே... கிறுக்கலா எழுதியிருக்கு..."

"குருராஜ் வேலைக்கு வரலீல்ல இன்னும்.."

"இல்லே.. அடுத்த வாரம்தான் வருவார்."

"நாளைக்குப் போகலாமா... அவன் வீட் டுக்கு."

"போகணும். நீங்க வரதே ஒரு நாள். அது லயும் இந்த மாதிரி வெளியே போயிட்டு வந்தா... வேற வழியும் இல்லே. தூக்கம் கெட்டே ஆகணும்."

வித்யாவுக்கு மறுபடியும் அலுப்புத் தட்டி யது.

"சரி. படு. நேரமாச்சு..." என்றான்.

வித்யா சிறிது நேரம் விழித்திருந்தாள். மொட்டைக் கடிதம். யாராக இருக்கும். சரி.. வீண் வேலை... பாவம் குருராஜ். கதை எப்படி வரவேற்பு இருக்கும்.... இந்தத் தொடருக்கு வருகிற லெட்டர்ஸ் எனக்குக் காட்டுவாங் களா...

திடுக்கென்று விழிப்பு வந்தது.

எதிரே சங்கர் இவள் தூங்குகிறாள் என்ற நினைப்பில் அவளின் கைப்பையைத் துழாவு வது புரிந்தது. என்ன தேடுகிறார். வித்யாவுக்குத் தூக்கம் கழன்றியது.

**கா**லையில் தினேஷை சமாதானப் படுத்தி... வரும்போது அவனுக்கு ஏதாவது வாங்கி வருவதாக உறுதியளித்து... வீட்டிலேயே விட்டு விட்டு கிளம்பிப் போனார்கள்.

குருராஜ் வீட்டில் இருந்தான்.

"நான் வரணும்னு சொல்லிகிட்டு இருந்

# மாறிவரும் காலத்திற்கேற்ப மாறுகின்றன 'காஸ்கட்'களும் ...

... கறுப்பிலிருந்து வண்ணத்திற்கு!

**கா**ஸ்கட் உலகில் **மயூர்** ஓர் புதிய பாரம்பரியத்தை அறிமுகப்படுத்தியுள்ளது.

வழக்கமாக உள்ள கறுப்பு நிற காஸ்கட்களிலிருந்து உங்களுக்கு விடுதலையளிக்க வந்து விட்டது...

**மயூர்**

பல வண்ண

பிரஷர் குக்கர்

காஸ்கட்கள்



- இறக்குமதி செய்யப்பட்ட உயர் ரக, உயர் தர ஸிலிகான் ரப்பரால் தயாரானது.
- பிரெஸ்டீஜ், பட்டர்ஃபிளை, ப்ரீமியர் போன்ற அனைத்து குக்கர்களுக்கும் பொருந்தும்.
- உங்கள் எண்ணத்தைக் கவரும் வண்ணங்களில் கிடைக்கிறது.
- இந்தியாவிலேயே முதலாவதும், சிறந்ததுமான 'மயூர்' பல வண்ண ப்ரஷர் குக்கர் காஸ்கட்'டிற்கு **ஆறு மாதங்கள் உத்திரவாதம்** அளிக்கப்படுகிறது.
- சரியான நேரத்தில் அதிகமாக உள்ள நீராவியை உங்கள் குக்கரிலிருந்து வெளியேற்றுவதால் பாதுகாப்புக்குக் குறைவேதுமில்லை.
- உணவின் தரம், மணம், குணம் ஆகியவற்றை எந்த வகையிலும் பாதிக்காது.

மேலும் விபரங்களுக்கு அணுகவும்:

**முருகன் எண்டர்பிரைஸஸ்**

15, முதல் குறுக்குத் தெரு, கஸ்டம்ஸ் காலனி,
பெஸன்ட் நகர், சென்னை - 600 090.

ADPRINT/ME/101/95

தேன். நீங்க வர மாதிரி ஆயிருக்க..." என்றான்.

"என்ன திடீர்னு.."

"ஹார்ட் அட்டாக்... வயசாச்சு... நல்ல வேளை.. படுக்காமே கொள்ளாமே போயிட்டாரு. வேற எதுவும் சீரியசா ஆகி- அவரையும் கஷ்டப்படுத்திக்காமே..."

"...என்ன இருந்தாலும் அப்பாவை இழக்கிறது..."

"ப்ச்.. அதைவிட இப்ப வருத்தம்... இந்தச் செலவை யார் ஏத்துக்கிறதுன்னு வர சண்டை" விரக்தியாய் சிரித்தான்.

"நீங்க மூணு பேர் அண்ணன், தம்பி இல்லே."

"ஆமா, ஆனா அவங்க ரெண்டு பேரும் வாயே திறக்கலே. நாதான் எதுக்கும் இருக்கட்டும்னு மூர்த்திகிட்டே பணம் வாங்கி வச்சிருந்தேன். ஹாஸ்பிடல் பில் கட்டி... காட்டுக்குக் கொண்டுபோறவரை தாக்குப் பிடிச்சுட்டேன். இப்ப... டென்த் டேக்குப் பணம் வேணும். வித்யா.. மூர்த்தியை என்னை வந்து பார்க்கச் சொல்ல முடியுமா."

"அவங்க ஷேர் பண்ணிக்க மாட்டாங்களா."

சிரித்தான் சோகமாக.

"என்ன சிரிக்கிறீங்க."

"இல்லானை இல்லாளும் வேண்டாள்... தெரியாதா. அப்பா ஒரு தப்பு பண்ணிட்டாரு. கையில கொஞ்சம் கேஷ் வச்சிருந்தாரு. அதை அவசரக் குடுக்கையா எங்க எல்லாருக்கும் பிரிச்சுக் கொடுத்துட்டாரு. இப்ப அவரோட காரியங்களுக்கே அல்லாட வேண்டியிருக்கு..."

"எப்படிங்க அந்த மாதிரி விட்டேத்தியா இருப்பாங்க."

"அவரு என் கூடவே இருந்ததாலே.. ஏதோ பிரிச்சுக் கொடுக்காம ரகசியமா வச்சிருந்ததை என் கையில கொடுத்துட்டுப் போயிட்டதா நினைச்சுகிட்டு இருக்காங்க. சீரியஸ்னு உடனே தகவல் கொடுத்துட்டேன். ஆனா அவங்க வரும் போது இவர் காலம் ஆயிருச்சு. அவங்களுக்கு அவ நம்பிக்கைதான். சாகும் போது எதையோ பெரிசா தூக்கிக் கொடுத்துட்டதா... நானே செலவு செய்யட்டும்னு பார்த்துகிட்டு இருக்காங்க."

"அப்புறம் நீங்க பேசாம இருந்தா எப்படி? கேட்டுர வேண்டியதுதானே..."

குருராஜ் சங்கரைப் பார்த்துச் சிரித்தான்.

"எங்க கஷ்டம் உங்களுக்குப் புரியாதுங்க. லேடீஸ்னா.. பட்டுனு கணக்கு வழக்கு பேசிருவீங்க. சொந்த அக்கா தங்கச்சியா இருந்தாலும். நீ இவ்வளவு தரணும், நான் இவ்வளவு தரணும்னு. எங்களால அது முடியாது. வெளியே போய் புலம்புவோம். நேர்ல பார்த்தா பேசாம நிப்போம். கேட்க மனசு வராது. உங்களுக்கு எங்களைப் பார்த்தா ஏமாளியாத் தெரியும். எங்க சிரமம் எங்களுக்குத் தான் புரியும்."

**வி**த்யா பஸ் ஸ்டாப் வருவதற்குள் புலம்பித் தீர்த்து விட்டாள்.

"என்னங்க... அவர் எல்லாருக்கும்தானே அப்பா. இப்படியா மனுஷங்க இருப்பாங்க..."

"மனுஷங்க இப்பல்லாம் எப்படி வேணா இருக்காங்க..."

"ச்சே... என்னால சகிச்சுக்கவே முடியலே. பிள்ளையைப் பெத்தா கண்ணீருன்னு சொன்னது சரிதான்."

"பணம்தான் இப்ப வாழ்க்கையில ரொம்ப முக்கியம். நீதி, நேர்மை, ஒழுக்கம் பத்தி யார் கவலைப் படறாங்க."

"இப்பவும் நேர்மையா, ஒழுக்கமா இருக்கிறாங்க. விதிவிலக்குகளும் இருக்கு."

"யாரை மாதிரி..." என்று பார்வையால் அவளை ஊடுருவினான். வித்யாவுக்கு ஏனோ சிலிர்த்தது.

## 6

**மு**தல் மாதமே களைகட்டி விட்டது. இவளுக்கு எடிட்டரிடம் இருந்து கடிதம் வந்தது.

'நல்ல ரெஸ்பான்ஸ். வாழ்த்துக்கள்.'

இவள் பிராஞ்சில் பரபரப்புடன் பேசப்பட்டாள்.

"சொல்லவே இல்லே... பார்த்தியா.."

"முழுக் கதையும் எழுதிட்டீங்களா"

"நாங்க பார்க்கலாமா.."

"எப்ப டிரீட்.."

"ரொம்ப புகழ் வர ஆரம்பிச்சுருச்சு.

---

பாத்ரூமுக்கு ஒட்டிய 'டைல்'ஸ் ஒன்றிரண்டு மீந்து விட்டனவா? அவற்றில் அழகான சம்கீகள், ஜரிகை லேஸ் போன்றவைகளை ஒட்டி ஒரு அழகான சித்திரத்தை உருவாக்கி 'ஷோகேஸி'ல் அலங்காரமாக வைத்து விடுங்கள்.

பார்ப்பவர்கள் 'ஹௌ நைஸ் எங்கே வாங்கியது?' என்று மண்டையைப் பிய்த்துக் கொள்வார்கள்.

—உஷா





'என் பையன் எதைப்பத்தியும் வாயே திறக்க மாட்டான்'என்று அங்கலாய்க்கும் தாய்மார்களே! அவனுடைய நண்பர்கள் சுமாரானவர்களாயிருந்தாலும் அவர்களையும் மதித்து, வாரம் ஒரு விடுமுறை நாளில் டீ-பார்ட்டி வைத்து; நீங்களும் கலந்து கொள்ளுங்கள். அந்த அரட்டை மறைவில்தான் அவர்களின் குணாதிசயம் வெளிப்படும். மகனைப் பற்றியும் உங்களால் முழுமையாகப் புரிந்துகொள்ள முடியும்.

– கி. மஞ்சுளா

இனிமே எங்க கூட பேசுவீங்களா..."

"ஆட்டோகிராப் வாங்கி வச்சுக்கணும். இவங்க எங்க கூடத்தான் வேலை பார்த்தாங்கன்னு சொல்லலாம்..."

"பணம் கொட்டப் போவுது தொடர்னா சும்மாவா."

"என்ன ஒரு பத்தாயிரம் கிடைக்குமா...'

கேலியும் ரசனையும் பொறாமையும் குசும்பும் கலந்த விமர்சனங்கள்.

வித்யாவுக்குத் தன்னை தனியே விட்டால் போதும் என்றாகி விட்டது.

குருராஜ் வந்து பாராட்டினான்.

"விட்டுராதீங்க, எழுதறதை மட்டும். நிறைய பேருக்கு லெட்டர் எழுதவே தடுமாறும். உங்களுக்கு இது சரஸ்வதி கடாட்சம்தான். எப்பவும் விட்டுராதீங்க."

அப்பாவைப் போலவே இன்னொரு மனிதன். தன் எழுத்துக்களின் மதிப்பு புரிந்து தட்டிக் கொடுப்பவன். எதிரே அப்பாவே நிற்கிற மாதிரி ஒரு பிரமை தட்டியது. கண்களில் ஈரம் எட்டிப் பார்த்தது.

'சி.எம்.' என்று புகழப்படும் மேனேஜரே அறையை விட்டு வெளியே வந்து நடு ஹாலில் அவளைப் பாராட்டினார்.

"என்னோட வொய்ப் அவசியம் உங்களைப் பார்க்கணும்னு சொல்றா. நீங்க நம்ம ஆபீஸ்னு தெரிஞ்சதும் திரில்லாயிட்டா..."

"தேங்க்ஸ் ஸார்.."

"நோ... நோ... நீங்க என்ன பண்றீங்க... இந்த ஸண்டே உங்க வீட்டுக்காரரோட எங்க வீட்டுக்கு வாங்க."

"வந்து..."

"வந்து... போயி... எல்லாம் கிடையாது. யூ ஆர் கமிங்..."

மேனேஜர் அந்தப் பக்கம் போனதும் சகாக்களின் கேலி.

"சி.எம்.மையே அசத்திட்டே..."

"இனிமே பர்மிஷனுக்கெல்லாம் கவலை இல்லே..."

"ச்சீ... அப்படம் சொல்லாம லீவே போடலாம்.."

பொறாமையும் வியப்புமாய் பார்வைகள் பதிய வித்யாவுக்குள் மளுக்கென்று கண்ணீர் எட்டிப் பார்த்தது.

என்ன சொல்லிவிட்டான்... இத்தனை பேரையும் விட... உற்சாகமாய் துள்ள வேண்டியவன் என்ன பேசிவிட்டான்...

வித்யா மெல்ல அவனைப் பார்த்தாள்.

"என்ன சொல்றீங்க..."

"விதிவிலக்குகள்னு சொன்னியே... அதுல யார் யார் இருக்காங்க."

"புரியலீங்க..."

"புரியலையா... நடிக்கிறாயா..."

"எ...ன்னங்க..."

அக்கம் பக்கம் யாரும் தங்கள் பேச்சைக் கவனிக்கிறார்களா என்று பார்த்தாள்.

"...எனக்கு எதுவுமே பிடிக்கலே. குருராஜ் சொன்ன மாதிரி... நம்மைச் சுத்தியே... என்னைச் சுத்தியே போலி மனிதர்கள். இதுல அவனைப் பார்த்து நான் எப்படி பரிதாபப்படறது."

"என்ன பேசறீங்க... எது பிடிக்கலே..."

"நீ கதை எழுதறது... உன்னை அவனவன் வீட்டுக்கு வான்னு கூப்பிடறது... நீ உன் இஷ்டத்துக்கு மெட்ராஸ் போகறது... எல்லாம்தான்."

வித்யா திடுக்கிட்டாள்.

"என்னங்க திடீர்னு என்னவோ போலப் பேசறீங்க. உங்களுக்கு நான் எழுதறதுல இஷ்டம் இல்லையா."

"இப்ப இல்லே...புரியுதா..."

ஒரு பஸ் வர, நின்றவர்கள் அதில் ஏறிக் கொண்டார்கள்...

வித்யாவுக்குப் பார்வை இருண்டது. என்ன பேசுகிறான்...

"அப்படீன்னா..."

"எழுதாதே. நிறுத்திரு. போதும். நீ எனக்கு மட்டும் பொண்டாட்டியா இரு. மத்தவங்களுக்கு உன் கதை மூலம் எந்தப் புத்தியும் சொல்ல வேணாம். பொம்பளை கதை எழுதினா போதுமே... வந்திருவானுங்க. வீட்டுக்கு வா.. என்ன பேச்சு..."

"அவரு ஒரு மரியாதைக்கு... அதுவும் உங்களையும் அழைச்சுகிட்டுத்தானே..."

"ஏமாத்தல், உன்னைத் தனியா வான்னு அத்தனை பேர் முன்னால சொல்லுவானா..."

"அவர் எங்க அப்பா மாதிரி."

"அவர் அப்பா... குருராஜ் சித்தப்பா- அப்

புறம் அவன் யாரு. மூர்த்தி பெரியப்பா.. அத்தை...சித்தி.. உனக்கு ஆபீசே குடும்பம். இங்கே குடும்பம்னா அலட்சியம் அம்மாவுக்கு உடம்பு முடியலேன்னாக்கூட தனியா அவதிப் படணும்..."

முகம் சிவந்து பேசிக் கொண்டே போன வனைத் திகைப்புடன் பார்த்தாள்.

என்ன பேசுகிறான். புரிந்துதான் பேசு கிறானா?

"வேணாங்க. ப்ளீஸ்... என்னால தாங்க முடியலிங்க."

வித்யாவுக்குள் அழுகை பீறிட்டது.

"...நானும் அதையேதான் சொல்றேன். எழுதறதை நிறுத்து. ச்சே. எங்க ஃபேமிலில யாருக்கும் மொட்டைக் கடுதாசியே வந்த தில்லே. உன்னால அந்தப் பெருமையும் கிடைச் சாச்சு..."

"அது எவனோ பொறாமையில..."

"இருக்கலாம். ஒரு நிமிஷம் என் நிலைமைல உன்னை வச்சுப் பாரு. உங்க ஆபீசுக்கு ஃபோன் பண்ணா... என்னென்னமோ மாதிரி பேசறா னுங்க. திடீர்னு மொட்டைக் கடுதாசி. நீயானா நினைச்சா மெட்ராஸ் போகணும். கதை எழு தணும்னு சொல்றே. நாம குடும்பம் நடத்த றோமா.. இல்லே வேற ஏதாவதா... நமக்கு வேணாம் இதெல்லாம்... ஏதோ இங்கோர்ந்து எழுதி போட்டே பிரசுரமாச்சு... சரி. இப்ப... அங்கே... வா... இங்கே போன்னா... ச்சே என்ன லைஃப் இது."

நிதானமாகத்தான் பேசினான்.

"நீ ஒரு எழுத்தாளர்னு பெருமையா பேசறே. ஒரு எழுத்தாளன் அடுத்தவனோட மன உணர்ச்சிகள் புரிஞ்சவனா இருப்பான். என் னோட ஃபீலிங்க்ஸ் உனக்குப் புரியணும். இல்லே புரியாத மாதிரி நீ நடிக்கணும். எது வேணும்னு நீயே தீர்மானி."

பஸ் வந்து நிற்க எதுவும் பேசாமல் ஏறி னான். வித்யாவும் ஏறிக் கொண்டாள்.

மனசுக்குள் அலைபாயத் தொடங்கியது.

ஆறேழு மாதங்களில் தொடர் இன்னும் பிரபலமாகி நிறைய வாசகர்கள் பத்திரிகைக்குக் கடிதம் எழுதி.. இவளுக்கு ரீ. டைரக்ட் செய்யப் பட்டது.

"இதை டிவி தொடராகச் செய்ய விருப்பம். உங்கள் அனுமதி தேவை" என்று ஒரு கடிதம் வந்தது.

'எங்களுக்கு எழுத இயலுமா' என்று வேறு பத்திரிக்கைகள் விசாரித்தன.

வித்யாவுக்குச் சுலபமாய் ஒரு காரணம் கிடைத்தது. எந்த நிமிடமும் டெலிவரி ஆகு வாம்.

மென்மையாய் மறுத்து கடிதம் எழுதினாள்.

'எனது இரண்டாவது குழந்தையை எதிர் பார்த்துக் காத்திருக்கிறேன். இந்த நிலையில் எனது எழுத்துப் பணியைத் தொடர்வது சிரமம். தங்களின் அன்பிற்கு நன்றி.

குருராஜ் கூட வருத்தப்பட்டான்.

"ஏன் இந்த மாதிரி பதில் எழுதறே. குழந்தை பிறந்த பிறகு வீட்டுலதானே இருக்கப்போறே. முடிஞ்சப்ப எழுதி அனுப்பலாமே. சிரமம்தான். ஆனால் உன்னால முடியும் வித்யா.

அப்பாவைப் போல அதே தைரியப்படுத் தும் வார்த்தைகள். சூழ்நிலை மீறி ஜொலிப் பாய்...

குருராஜுக்கு சங்கரின் பேச்சு தெரியாது.

தன்னோடு போகட்டும். சங்கரைப் பற்றி எவரும் தப்பாகப் பேசக் கூடாது. தன்மீது எந்த அளவு நேசம் வைத்திருந்தால் இப்படிப் பேசு வான். எழுத வேண்டாம் என்று முன்பு தடுக்க வில்லையே. எழுத்து அவளைத் தன்னிடம் இருந்து பறித்து விடக் கூடும் என்பதால்தானே இந்தத் தடுப்பு...

"இல்லே குருராஜ்... கைக் குழந்தையோட நிச்சயமா எழுத முடியாது..."

"அப்புறம் உன் இஷ்டம்.. அதுவும் ஒரு விதத்துல நல்லது. நிறைய யோசி. அப்புறம் எழுத உதவும்."

குருராஜ் மெல்ல அசைந்து போக வித்யா லெட்ஜரில் ஆழ்ந்து போனாள்.

இரவில் சூரியன்... இவளுடைய எழுத்தும் இரவில் சூரியன் போல மறைந்து போகிறது. பின்னொரு நாளில் அதற்கான வானம் திறக் கும். புது விடியல் தோன்றும். இருளைக் கிழித்து கிரணங்கள் தலை நீட்டும்.

முற்றும்

நான் ஒருமுறை வாங்கி வந்த ஆப்பிள் மிகவும் புளித்தது. அந்த ஆப்பிளை தோல் சீவி நறுக்கி மிக்ஸியில் விழுதாக அரைத்துக் கொண்டேன். ஒரு கப் விழுதுடன் 1கப் கோதுமைமாவு, 1கப் மைதா மாவு, 1கப் வெல்லம் போட்டு கெட்டியாக பிசைந்து அப்பம் சுட்டேன் நல்ல சுவை!

— கே. ஜானகி



# அலர்ஜி, ஆஸ்துமாவை குணமாக்கும் கிராமத்து வைத்தியம்

பனிக்காலம், குளிர்காலம், மழைகாலம் - இது சைனஸ், ஆஸ்துமா நோய் கொண்டவர்களுக்குத் துன்பத்தை விளைவிக்கும் மாதங்களாக அமைந்துவிடுகின்றன. மாசு, தூசு படிந்த காற்றைச் சுவாசிக்கும் நகர மக்களுக்குக் காலம் நேரம் என்று பார்க்காமல் தும்மல், சளி, இளைப்பு, இருமல், மூக்கிலிருந்தும் கண்ணிலிருந்தும் நீர் கொட்டும். டாக்டர்களிடம் ஆலோசனை பெற்றால் உங்களுக்கு அலர்ஜி என்னும் 'ஒவ்வாமை நோய்' இருக்கின்றது; தூசு, புகை, ரசாயனப் பொருட்கள், உணவு வகைகளில் சில பொருட்கள் ஒத்துக்கொள்ளாது. ஆகவே, நீங்கள் இருக்கும் இடத்தை மாற்றுங்கள் அல்லது உணவை மாற்றிக் கொள்ளுங்கள் என்று ஆலோசனை கூறுவார்கள்.

ஆங்கில மருந்துகளில் இன்ஹேலர்ஸ், மூக்குப் பொடிகள், சொட்டு மருந்துகள் கிடைக்கின்றன. அவைகளை மூக்கினுள் விட்டு தடைப்பட்ட சுவாசக் குழாயை அவ்வப்போது சுத்தம் செய்து கொள்வார்கள்.

டில்லியிலுள்ள மத்திய அரசின் சென்ட்ரல் கவுன்சில் ஃபார் ரிசர்ச்சின் யுனானி மெடிசின் ஆய்வு மையம் சைனஸ் நோய்க்கு யுனானி மருந்துகள் நிரந்தரமாக அறுவை சிகிச்சை இன்றி குணம் தருகின்றன என ஆய்வு அறிக்கையில் தெரிவித்துள்ளது.

நாட்டு மருந்துக் கடைகளில் 'உஸ்துகுத்தூஸ்' யு.கே. 500, என்னும் மூலிகை கிடைக்கின்றது. இது ஈரான் நாட்டில் பரவலாக விளைகிறது. அந் நாட்டிலிருந்து இறக்குமதி செய்யப் பட்டு நம் நாட்டில் விற்கப்படுகிறது. சில ஆண்டுகளுக்கு முன்பு சென்னை அரசு மருத்துவமனையிலுள்ள காது, மூக்கு சிகிச்சை பிரிவு துறை இயக்குனர் டாக்டர் சாமிநாதன், யுனானி மருத்துவத் தந்தை டாக்டர் கலிபத்துல்லாஹ் ஆகியோர் தலைமையில்



சென்னை அரசு பொது மருத்துவமனையில் ஆய்வு செய்யப்பட்டது. ஆராய்ச்சிக்காக 100 நோயாளிகள் தேர்வு செய்யப்பட்டனர். சிகிச்சைக்கு முன் எக்ஸ்-ரே ஸ்கேனிங், இரத்தப் பரிசோதனை, நீர் பரிசோதனை என அனைத்து விதமான பரிசோதனை முறைகளும் பதிவு செய்யப்பட்டு சைனஸ் நோயின் தன்மை நிர்ணயிக்கப்பட்டது. அதேபோல் யு.கே. 500 மூலிகை கொடுத்தபின் மீண்டும் எக்ஸ்-ரே மற்றும் இதர பரிசோதனைகளைச் செய்து பார்த்தபோது சைனஸ் நோய் முழுமையாக குணம் பெற்றுள்ளதாக ஆய்வு அறிக்கை தெரிவித்தது. 'பஞ்சர்' அறுவை சிகிச்சையின்றி யு.கே. 500 மூலிகை குணம் தருவதை அன்றைய சுகாதார அமைச்சர் டாக்டர் ஹண்டே மற்றும் பலர் பாராட்டிப் பேசினார்கள். உஸ்துகுத்தூஸ் பூக்கள் 3 கிராம், மிளகு 5 எண்ணிக்கை, தனியா 3 கிராம் மூன்றையும் பவுடராக்கி தினசரி ஒரு வேளை காலையில் சாப்பிட்டால் நாள்பட்ட தலைவலி, தொண்டைப்புண் குணம்பெறும். இதையே பிரபல யுனானி மருந்துக் கம்பெனிகள் இத்ரபில் உஸ்துகுத்தூஸ், இத்ரபில் ஜமானி, இத்ரபில் கிஷ்னிஸி என்ற பெயரில் லேகியமாகத் தயாரித்து விற்கின்றனர்.

வடாற்காடு அம்பேத்கர் மாவட்டம் வாணியம்பாடி, நியூ டவுன், மசூதி வீதியில் உள்ள எங்களுடைய அல்கவுஸர் யுனானி கிட்னி சென்டரிலும் மூக்கடைப்பு, அலர்ஜி, ஆஸ்துமா, மூட்டுவலிகள், கிட்னி ஃபெயிலியர் நோய்களுக்கு யுனானி சிகிச்சை தரப்படுகின்றது.

**புங்கம் விதை :**

கிராமங்களில் குழந்தைகளைப் பார்க்கும்போது கழுத்தில் கறுப்பு நூல் கட்டி அதில் புங்கங்காயைத் தொங்க வைத்திருப்பார்கள். எதற்கு என்று கேட்டால், கக்குவான் இருமல், இளைப்பு, ஆஸ்துமா ஆகியவைகளைக் கட்டுப்படுத்தவும், சளியைச் சேராதபடி பார்த்துக் கொள்ளவும் என்று வயதானவர்கள் கூறுவார்கள். அதைக் கழுத்தில் ஏன் கட்ட வேண்டும் என்று திருப்பிக் கேட்டால் அவர்களுக்குத் தெரியாது.

ஆனால் புங்க விதைகள் ஆஸ்துமா,

டாக்டர் ஹகீம் எஸ். அக்பர் கவுஸர்

> பொன், வெள்ளி, நவரத்தின ஆபரணங்களின் மீது தீராத மோகம் கொண்டு அவற்றைச் சேகரித்த ஆண்களில் ஷாஜஹான் அரசர்தான் முதன்மையானவராக இருப்பார். அவரிடம் 32 கிலோ வைரங்களும், 40 கிலோ மாணிக்கக் கற்களும், 2,40,000 கிலோ முத்துகளும் இருந்தன. 32,000 கிராம் பொன்னையும், 46,000 கிராம் மிக விலையுயர்ந்த கற்களையும் கொண்டு தயாரிக்கப்பட்ட மயிலாசனம், விருந்தினர் அமர 5 தங்க, 103 வெள்ளி ஆசனங்கள் தவிர, விதவிதமான சிம்மாசனங்களும் இருந்தன. சொக்கத்தங்கத்தால் செய்யப்பட்டிருந்த 7'X5' குளியல் தொட்டி கண்ணில் படாத அளவுக்கு வைர, வைடூரியங்களால் இழைக்கப்பட்டிருந்தது.
>
> - அ. ஷண்முகசுந்தரம்

ஈஸினோபீலியா, இளைப்பு நோய்கள், இருமல், கக்குவான் இருமல் நோய்களை நிரந்தரமாகக் குணமாக்கும் சிறந்த மருந்தாகும்.

இயற்கையான சூழ்நிலை மாறி வருகின்ற இந்த 20 ஆம் நூற்றாண்டில் விஞ்ஞான உலகம் கண்ட இரசாயனப் பொருட்களின் விஷம் நிறைந்த புகை, மூக்கு மற்றும் வாயின் வழியாக உடலுக்குள்ளே சென்று நுரையீரல் மற்றும் மூளையைக் கடுமையாகப் பாதித்து அதன் வலிமையைக் குறைத்து உடலில் ஒவ்வாமையை (அலர்ஜி) ஏற்படுத்துகின்றன. புகை வெளியேற்றும் தொழிற்சாலைகள், தூசு, ஒட்டடை நிரம்பிய இடங்களில் பணிபுரிபவர்களுக்கும், ஸ்கூட்டர், மோட்டார், கார், லாரி மெக்கானிக், வர்ண வேலை செய்பவர்கள், தூசு நிறைந்த இடங்களில் பணிபுரிபவர்களுக்கும் ஆஸ்துமா நோய் அதிகமாகக் காணப்படுகிறது. இதேபோல் பீடி, சிகரெட் தொழிற்சாலைகளில் பணிபுரியும் தொழிலாளர்களுக்கும் ஆஸ்துமா அதிக அளவில் காணப்படுகின்றது.

தூசு, புகை, சமையல் நெடி, பனிக்காற்று, மழைகாலம், உணவில் சில பண்டங்கள் ஒத்துக்கொள்ளாமை, சிலருக்கு முருங்கைக் காய், கத்தரிக்காய், மாட்டுக்கறி, பன்றிக்கறி, மீன் வகைகள், கடல் உணவு போன்றவைகள் ஒத்துக்கொள்ளாது. இவர்களுக்குத் திடீர் என்று மூக்கிலிருந்து சலசலவென்று நீர்கொட்டும். உடலில் அரிப்பு ஏற்படும் சிறிது நேரத்தில் மூச்சுத் திணறல் ஏற்பட்டுச் சுவாசிக்கக் கஷ்டப்படுவார்கள்.

நுரையீரலிலிருந்து புல்லாங்குழல் ஊதுவது போல் சத்தம் கேட்கும். 'கர்புர்' என்று சத்தம் ஏற்படும். நுரையீரல் முழுவதும் சளி சூழ்ந்து கொண்டு நுரையீரலின் விரிவுத் தன்மையைக் கட்டுப்படுத்தி, சரியாக இயங்காமல் தடுக்கும். சளி சுவாசக்குழாய் முழுவதும் அடைத்துக் கொண்டு மூச்சுவிட சிரமப்படுத்தும். ஆஸ்துமா ஒரு நரம்பு சம்பந்தமான வியாதி ஆகும். இவ்வியாதியில் நுரையீரலின் மெல்லிய குழாய்களிலும் டயாபரம் தசைகளிலும் இழுப்பு ஏற்பட்டு சுவாசக்குழாய் சுருங்குவதுடன் மூச்சுத் திணறலும் ஏற்படும். சளி வெளியேறினால்தான் மூச்சுத்திணறல் குறையும்.

### ஆஸ்துமா ஏற்படக் காரணங்கள் :

ஜீரணக் கோளாறுகள் பருவ காலத்தின் திடீர் மாற்றம், மூக்கு மற்றும் நுரையீரலை நமைக்கும் விஷப்பொருட்கள் மூக்கு அல்லது வாயின் வழியாக சென்று அடையும். கந்தக குளோரின், சுண்ணாம்பு மற்றும் சில இரசாயனப் பொருட்கள் உடலுக்கு ஒத்துக்கொள்ளாது. இதனால் அலர்ஜி ஏற்படும். வெட்டை நோயில் பாதிக்கப்பட்டவர்கள், அம்மை நோயால் பாதிக்கப்பட்டவர்கள், கருப்பைக் கோளாறுகள் கொண்ட பெண்கள், சங்கா தோஷம் என்னும் ஹிஸ்டீரியா (மனநோய்), கர்ப்பகாலம், டி.பி., மூளைக் கோளாறுகள், அதிக துயரம், கவலை, கோபம், பயம், மன நோய் அதிர்ச்சி, மூக்கு வியாதிகளான சைனோஸைடிஸ், தொண்டை வியாதியான டான்சில் ஆகியவை ஆஸ்துமா ஏற்பட முக்கிய காரணங்களாக இருக்கும்.

ஆஸ்துமா என்னும் கொடிய நோயை குணமாக்க யுனானி மருத்துவத்தில் பல மூலிகைகள் கூறப்பட்டுள்ளன. அவைகளில் புங்க மரம் மிகவும் பயனுள்ள மருந்து என்று ஆணித்தரமாகக் கூறப்பட்டுள்ளது.

### புங்க மரம் :

புங்க மரம் தமிழகம் முழுவதும் சாலை ஓரங்களிலும், தோட்டங்களிலும் வளர்க்கப்படுகிறது. இதில் காய்களும், நீல நிறப் பூக்

இல்லதரசிகளுக்கு புதிய துணை
சமையல் கலையில் திருப்புமுனை
மில்க் பாய்லர், இட்லி குக்கர்,
வாட்டர் ஃபில்டர், குழிகரண்டி
எல்லாம் தந்திடும்

# Murugan

முருகன் மெட்டல் என்றாலே
முகம் மலரும் தன்னாலே





















## முருகன் மெட்டல் இண்டஸ்ட்ரீஸ்

21, பொன்னப்ப செட்டி தெரு, சென்னை-3.
போன்: 582182

களும் கொத்துக் கொத்தாக இருக்கும். இவை களில் வாசனை இருக்கும். இதன் மெல்லிய இளைகளை உடைத்து கிராமங்களில் பற்களைத் துலக்க டூத் பிரஷ்ஷாகப் பயன்படுத்து வார்கள். இதன் விதைகளில் 25 சதவீதம் மஞ்சள் நிறத்தில் எண்ணெய் இருக்கும்.

நாள்பட்ட அழுகிப் போன இரணங்கள், புண், சொறி, சிரங்குகள் மீது பூசினால் அது குணமாகும். இதன் மலராத பூக்களை இரத்தம் கொட்டும் மூலத்தின் மீது கட்டினால் குணம் பெறும். மலர்ந்த பூக்களைச் சாப்பிட்டால் சர்க்கரை வியாதி குறையும். இவைகளைத் தண்ணீரில் கொதிக்க வைத்து மூட்டுவாதம், வீக்கம், வலியுள்ள இடங்களில் பூசி மசாஜ் செய்ய வேண்டும்.

ஆஸ்துமா, இளைப்பு, இருமல், சளி, கக்குவான் இருமல் போன்ற நுரையீரல் சம்பந்தமான வியாதிகளுக்கு யுனானி மருத்துவர்கள் பல ஆண்டுகளாக மருந்தாகப் பயன்படுத்தி வருகின்றனர். குழந்தைகளுக்கு இருமல், கக்குவான் இருமல், வறண்ட இருமல், விக்கல், இளைப்பு ஏற்படும்போது கிராமங்களில் புங்கங்காயில் ஓட்டைப் போட்டு நூல் கட்டி தாயத்தாகக் குழந்தையின் கழுத்தில் போடுவார்கள். இதனால் இருமல் குறையும். இதன் அடிப்படையில் இதன் விதைகள், காய்கள், மற்றும் எண்ணெயை மருந்தாகப் பயன்படுத்தினர்.

## சில எளிய வீட்டு வைத்தியங்கள் :

### தலைவலிக்குத் தைலம் :

நாட்டு மருந்துக்கடைகளில் புதினா உப்பு (மென்தால்) ஓமம் உப்பு (தைமால்), கற்பூரம் (காம்ஃபர்) என்று தனித்தனியாக மூன்று விதமான உப்புக்கள் விற்கப்படுகின்றன. ஒவ்வொன்றிலும் 50 கிராம் அளவில் வாங்கி ஒன்றாகச் சேர்த்தால் திராவகமாக மாறிவிடும். இதை வலியுள்ள இடத்தில் பூசினால் நோவால்ஜின், அனாசின் மாத்திரைக்குச் சமமாக வேலை செய்யும்.

### மூக்கடைப்புக்கு இன்ஹேலர் :

டீ.வி விளம்பரங்களில் மூக்கடைப்பு, தும்மல், ஜலதோஷத்திற்கு முகரும் இன்ஹேலரை நீங்கள் பார்த்திருப்பீர்கள். கற்பூரம் 1 கிராம், நவச்சாரம் 4 கிராம் இரண்டையும் பவுடராக்கிச் சுத்தமான கண்ணாடி பாட்டிலில் வைத்துக் கொள்ளுங்கள். தேவைப்படும் போது முகர்ந்தால் போதும், மூக்கடைப்பு நீங்கும். மண்டைச்சளி வெளியேறும்.

### ஒற்றைத் தலைவலி :

பொன்னாங்கொட்டை என்னும் சோப்னட் ஒன்றை எடுத்து 60 மில்லி தண்ணீரில் தேய்த்தால் நுரை நுரையாக வரும். இரண்டு சொட்டு அந்நீரை மூக்கிலிட்டால் ஒற்றைத் தலைவலி நீங்கும். இதேபோல் ஒரு கிராம் கடுகை 25 மில்லி தண்ணீரில் அரைத்து வடிகட்டி இரண்டு சொட்டுக்கள் மூக்கிலிட்டால் நாள்பட்ட ஒற்றைத் தலைவலி நீங்கும்.

### காதிலிருந்து சீழ் வடிதல் :

மாசிக்காய் ஒன்றைப் பவுடராக்கி 25 மில்லி பிராந்தியில் கலந்து வைத்துக் கொள்ளுங்கள். இதை இரண்டு சொட்டுக்கள் தினசரி காதிலிட்டு வந்தால் காதுவலி, சீழ்வடிதல், ஆறாதபுண் குணம் பெறும்.

### மூக்கிலிருந்து இரத்தம் கொட்டுதல் :

சைனஸ் நோய் உள்ளவர்களுக்கும், மண்டை நோய்க் கொண்டவர்களுக்கும் மூக்கிலிருந்து இரத்தம் கொட்டும். காவிக்கல் 2 கிராம் மன்மதக்கல் (பல்பம் மாவுகல்) 2 கிராம், இரண்டையும் பவுடராக்கிக் காலை மாலை

டீ.வியை வாக்குவம் கிளீனரால் சுத்தப் படுத்தலாம். ஆனால் sucker உபயோகிக் கக் கூடாது. blowerதான் உப யோகிக்க வேண்டும் என்று எங்கள் வீட்டிற்கு வந்த மெக்கானிக் கூறினார்.

- ஆர். பார்வதி

# இம்மாத இல்லத்தரசி

## சமையல் கூப்பன்

பொருள் : கிழங்கு

கடைசி தேதி : 15.1.1996

என்ற தலைப்பில் சமையல் குறிப்பை இதனுடன் அனுப்பியுள்ளேன். இச் சமையல் குறிப்பு இதுவரை எந்தப் பத்திரிகையிலும் வெளியானதல்ல என்று உறுதி கூறுகிறேன்.

கையொப்பம்

# நம்முடைய ‘ரோல்’ என்ன?

புதிதாக கல்யாணமான தம்பதியர். மனைவி கலா எம்.ஏ. படித்தவர். புதிய சிந்தனைகள் உள்ளவர். திறமைகள் படைத்தவர்.

கணவன் வளர்ந்த சூழ்நிலை வேறு. அவர் தாய், தமக்கையர் அவரை வளர்த்தவிதம் வேறு. பெண்களைப் பற்றி அவர் கொண்டிருந்த எதிர்பார்ப்புகள் கலாவின் சிந்தனைக்கு மாறுபட்டவை.

“மனைவியின் முதல் கடமை குடும்பம். கணவன், குழந்தைகளின் தேவைகளைப் பூரணமாக தீர்த்து வைத்தல் அவசியம். தியாகங்கள் செய்து அன்பை பொழிய வேண்டும்.. இப்படி இன்னும் பல! நமது நாட்டில்

அவருடைய கடமை அல்லது பாத்திரம் (Role) என்ன என்பதை அவர் எப்படிப் புரிந்து கொண்டிருக்கிறார் என்பதைத் தானே?

கணவனின் பார்வையில் மனைவியின் கடமைகள் (Role) வேறுபடுகிறது. இந்தப் பார்வை வித்தியாசம்தான் Role Conflict என்ற பாத்திர நெருடல் அல்லது தகராறு.

“வேலைக்காரி என்றால் காலையிலே ‘டாண்’ணு அஞ்சு மணிக்கு வர வேண்டாமோ! எட்டு மணிக்கு வர்றது... எத்தனைவாட்டி சொன்னாலும்... உள்ள வந்ததும் காலை அலம்பறது இல்ல... டீவி. பார்க்குறது... சொல்லாம



சொல்கிறான் தெரியுமா?

"காலங்காத்தால ஏழு மணிக்கு ஊட்டுக்கு வந்தா ஒரு வாய் காப்பித் தண்ணி தருதா? வேலைக்காரின்னா மனுஷி இல்லியா? அம்மாம் பலகாரம் பண்ணுறியே... கெட்டு நாறிப் போன பின்னாடிதான தர்ற... அத்தை முன்னாலியே குட்த்தா என்னாவாம்..."



எதிர்பார்ப்புகள் வித்தியாசப் படுகின்றன. ஒருவர் (Role) ரோலை மற்றவர்கள் சரியாக புரிந்து கொள்ளவில்லை. இல்லையா?

மகன் எப்படி இருக்க வேண்டும்? தாய் தந்தையருடைய எதிர்பார்ப்புகள் என்ன? மகனுடைய ரோல் குடும்பத் தில் என்ன? அதே போல்... 'தந்தை மகற்காற்றும் உதவி...' அவையத்து முந்தியிருப்பச் செய்வதோடு சரியா? குழந்தைகளின் எண்ணங்கள் பெற்றோர்களின் ரோல் பற்றி வேறாக இருக்கலாம்.

வீட்டில் மட்டும்தானா இந்த 'ரோல்' பிரச்சனைகள். அல்ல.. எங்கெங்கு மனிதர்கள் சேர்ந்து புழங்குகிறார்களோ அங்கெல்லாம் இருக்கும்.

விற்பனை அதிகாரியாக பணியாற்ற, பலரிடமும் தைரியமாக, கலகலப்பாக பழகும் மனப்பக்குவம் தேவை. ஆனால் அத்தகைய ஒருவரை நாள் முழுவதும் ரூமிற்குள் அமர்ந்து கம்ப்யூட்டர் திரையையே பார்த்துக் கொண்டிருக்கும் புரோகிராமர் வேலை யில் அமர்த்தினால்... அங்கு திருப்தி இருக்குமா?

'ரோல்' பொருத்தம் இருக்காது.

அரசியல் கட்சிகளில் தலைவர்கள் எப்படி இருக்க வேண்டும் என்று ஒரு எதிர்பார்ப்பு இருக் கிறது. ஆசிரியர்களின், போலீஸ்காரர்களின், பத்திரிகைகளின், மதகுருக்களின், சினிமா எடுப்பவர்களின், தொழி லாளர்களின், முதலாளி களின் ரோல்கள் பற்றிய எதிர்பார்ப்பு இருக் கிறது.

அந்த 'ரோல்'படி நடக்காத பொழுது, அல்லது அதற்கு ஒத்து வராதவர்கள் அந்த பாத்திரம் ஏற்கும்பொழுது சிக்கல் ஏற்படுகிறது.

ஆக... இந்த ரோல் பற்றி புரிந்து கொள்ளுதல் வளர்ச்சிக்கும் நிம்மதிக் கும் வழிவகுக்கும்.

1. நாம் யார்? நமக்கு எத்தனை விதமான ரோல்கள் எந்த இடங்களில் இருக்கின்றன?

2. நமது குணாதிசயங்களுக்கு அவை ஏற்றவையா?

3. அவற்றை நிறைவாக செய்ய என்ன செய்யலாம்?

4. இல்லையேல் நமக்குத் தகுந்த ரோல்களை தேர்வு செய்து, பெறுவது எப்படி?

5. நம் ரோலை மற்றவர்கள் சரியாக புரிந்து கொள்ளாவிட்டால், ஆனால் அது நம் ரோலாக இருந்தால், நிலைமையைச் சரிசெய்வது எப்படி?

என்ற ரீதியில் சிந்தித்தால்... நிச்சயம் பலன் உண்டு.

முயற்சிப்போம்! வெற்றி நிச்சயம்!

**- சோம. வள்ளியப்பன்**

# நீங்கள் 30 வயதைத் தாண்டி விட்டீர்களா,

## உங்களுக்குத் தேவை 30+வழங்கும் சக்தி!

உடலுரத்தை மீண்டும் மீட்டுத்தரும், புது வலுவூட்டும் காப்ஸ்யூல் தேர்ட்டி ப்ளஸை உபயோகித்து உங்கள் சக்தியை கண்டறிய முயற்சியுங்கள். உடல் சோர்வையும், மனத் தளர்ச்சியையும் போக்குகிறது. உங்களுடைய நரம்புகளுக்கு ஒரு டானிக் போல் இது செயல்படுகிறது.

உங்கள் வயது உங்களை வயோதிகமாக்க அனுமதிக்காதீர்கள். உங்களுடைய உடலுக்கு மீண்டும் சக்தியூட்டி, என்றும் திடகாத்திரமாக வைத்துக்கொள்கிற தேர்ட்டி ப்ளஸின் சக்தியைப் பெறுங்கள்.

ஒரு பாக்கெட்டை வாங்கிடுங்கள் இன்றே!

தேர்ட்டி ப்ளஸ் பற்றிய மேலும் விவரங்களைப் பெற, ஒரு இலவச சிறு புத்தகத்திற்கு எழுதுங்கள்.

**Thirty Plus©**

ENERGY RE-CHARGERS

வலுவிற்கும் சக்திக்கும்.

ap / ajanta pharma limited

தேர்ட்டி ப்ளஸில் ஜின்ஸெங் மற்றும் அஸ்வகந்தா அடங்கியுள்ளன.

21, சுரபம், 318, லிங்கிங் ரோடு, கார் (மே.), பம்பாய் 400 052.

# ஜனவரி '96

# இந்த மாதம் எப்படி?



## மேஷ ராசி :

*அசுவினி, பரணி, கிருத்திகை 1-ம் பாதம்*

ராகுவால் தனலாபம், ஆபரணங்களை வாங்கும் வாய்ப்பு ஆகியவை உண்டு. அதே சமயம் கேதுவால் வீண்செலவும், கண் பாதிப்பும் ஏற்படும். எனினும் குருவின் பார்வையால் பாதிப்பு ஏதும் ஏற்படா வண்ணம் தடுக்கப்படும். பணியில் உள்ளவர் களுக்கு அவர்கள் எந்தத் துறையிலிருந்தாலும் பதவி உயர்வு உண்டு. வீட்டில் மகிழ்ச்சியான சூழ்நிலை இருக்கும். உச்ச செவ்வாய் பார்வை ராசிக்கு இருப்பதால் இரத்தக் கொதிப்பால் பாதிக்கப்பட்டு மருந்தால் சரியாகலாம். மாத ஆரம்பத்தில் ஒரு பெண்ணால் வீட்டின் அமைதி குலையலாம். அங்காரகன் மாதக் கடைசியில் மனை ஒன்று வாங்கும் யோகத்தைத் தரலாம். இரும்பு, எரிபொருள் துறையினர், வங்கி ஊழியர்கள் ஆகியவர்கள் பதவி உயர்வும், ஊதிய உயர்வும் பெறலாம். விநாயகரையும், ஸ்ரீசுப்ரமணியனையும் பூமாலையால் அலங்கரித்துப் பாமாலையால் பாடுங்கள். எதிர்பார்க்கும் சுபநிகழ்ச்சி நடந்துவிடும்.



## ரிஷப ராசி :

*கிருத்திகை 2, 3, 4-ம் பாதங்கள், ரோகிணி, மிருகசீரிஷம் 1, 2-ம் பாதங்கள்*

சென்ற ஆண்டைப் போலவே இந்த ஆண்டும் சில எதிர்பாராத நன்மைகளும் நடக்கும். அதே சமயம் சில பிரச்னைகளும் தோன்றி மன அமைதியைக் கெடுக்கலாம். எனினும் கேது நன்மையைச் செய்யும் நிலையில் இருப்பதால் தனலாபம் உண்டு. கோர்ட் விவகாரங்கள், பாகப் பிரிவினைகள், மற்றும் கூட்டு வியாபாரம் ஆகியவைகளில் நல்லதொரு வெற்றியைத் தேடித்தர இருக்கிறார். எனவே, நிலுவையில் உள்ள வழக்குகள் சம்பந்தமாக உங்கள் வழக்கறிஞர்களை இந்தச் சமயத்தில் சந்தித்துக் காரியங்களைச் சாதித்துக் கொள்ளலாமே! யோககாரகனாகிய சனீஸ்வரன் 10ல் ஆட்சி பெற்றதால் பிரச்னைகள் குறையும். 8ல் உள்ள குரு சிரமங்களை சிலவற்றைத் தரலாம். மிருத்யுஞ்சயஜபத்தால் உடலுக்கு வரும் நோயை, அல்லது பிரயாண பயத்தைத் தடுக்கலாம். செவ்வாய் உச்சமாக இருப்பதால் காவல்துறையினர் சற்று சிரமத்துடன் பணியாற்றி சில முக்கியமான சமூக விரோதிகளை அடக்க வேண்டிவரும். 10ல் உள்ள சுக்கிரன் வீட்டின் அமைதியைக் கெடுக்கும் சூழ்நிலையை உருவாக்கலாம். லக்ஷ்மி ஸ்தோத்திரம் படியுங்கள்.



## மிதுன ராசி :

*மிருகசீரிஷம் 3, 4-ம் பாதங்கள். திருவாதிரை, புனர்பூசம் 1, 2, 3-ம் பாதங்கள்.*

இராசிநாதன் மாதம் பூராவும் உங்கள் செயலில் வெற்றியை ஏற்படுத்தித் தருவார். விளையாட்டுத்துறையினர், காவல்துறையினர் ஆகியவர்களுக்கு நிச்சயம் வெற்றி உண்டு. அதனால் பாராட்டும் உண்டு. அரசுத் துறையில் உள்ளவர்களுக்குச் சற்றுக் கடினமான மாதம். அலைச்சலும், மன உளைச்சலும் உண்டு. காதல் புரிபவர்களுக்குச் சுக்கிரன் ஆசி கிடைக்க உள்ளது. அருள் பொழிய குருவும், ஆசி கூற சுற்றத்தவரும் பெற்றோரும் கூடத் தயாராக இருப்பர். இதனால் சுப நிகழ்ச்சி தங்குதடையின்றி நடக்கும். கவலை வேண்டாம். மரகதப் பச்சைக்கல் மோதிரம் ஒன்றை புதன்திசை நடப்பவர்கள் அணிவது நல்லது. 4,10ல் உள்ள பாம்புக்கிரகங்களுக்கு துர்க்கையைப் பற்றிய நாமாக்களையும், விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தையும் பக்தி சிரத்தையுடன் படியுங்கள். உணவு விஷயத்தில் கட்டுப்பாடு அவசியம். இல்லை



சிக்கலான குடும்பப் பிரச்னைகளில் ஆணின் தர்க்க ரீதியான முடிவை விட பெண்ணின் உள்ளுணர்வே பெரும் பாலும் சரியாக இருக்கும். — ருட்யார்ட் கிப்ளிங்

இதுபோன்ற விஷயங்களில் இளங் கணவர்கள் காதல் வயப்பட்டும், நடுத்தர வயதினர் ஈகோ காரணமாக சற்று தயக்கத்திற்குப் பிறகும் முதியோர் நீண்ட அனுபவத்தின் அடிப்படையில் உடனடியாகவும் மனைவியின் விருப்பப் படியே முடிவெடுக்கிறார்கள் என்பதே உண்மை.

— அ. ஷண்முக சுந்தரம்

யேல் யாத்திரை சென்ற இடத்தில் மாத்திரை முழுங்க வேண்டிவரும்.



## கடக ராசி :

*புனர்பூசம் 4-ம் பாதம், பூசம், ஆயில்யம்.*

இராகுவால் தனலாபம். எதிலும் வெற்றி என நன்மைகள் நடக்கும். அதே சமயம் அஷ்டமத்துச் சனி ஆட்சியில் இருப்பினும் குருவால் சில ஏற்றத் தாழ்வுகள் ஏற்படும். புதனின் சஞ்சாரம் மன சஞ்சலத்தைத் தரும். மாதம் பிற்பகுதியில் சுக்கிர னால் சுகமுண்டு. எடுக்கும் முயற்சி அனைத்தை யும் தடுக்கவோ, கெடுக்கவோ, 9ஆமிடத்து கேது தயாராக இருக்கிறார். ஆயினும் 12ம் இடத்தையும், 2ம் இடத்தையும் மற்றும் 10ம் இடத்தையும் குரு பார்ப்பதால் அன்றாடப் பணிகளில் ஏற்படும் சிக்கல்கள் எளிதில் சரியாகிவிடும். மனைவியுடன் மோத வேண்டி வரலாம். எனவே வாழ்க்கைத்துணை நலத்தி டம் சற்று சாந்தமாகப் பழகுவது நல்லது. தம்பதிகளின் அன்யோன்யத்தைக் கெடுக்கும் வகையில் சில கிரகங்கள் சஞ்சரிக்கின்றன. நவக்கிரக தோத்திரம், சிவமானஸ பூஜை தோத் திரம் இவைகளைப் படியுங்களேன்.



## சிம்ம ராசி :

*மகம், பூரம், உத்தரம் 1-ம் பாதம்.*

பாம்புக்கிரகங்கள் பலவிதத்தி லும் தொல்லை தரலாம். உஷ் ணக்கட்டிகள் தோன்றி உடலைப் பாதிக்கலாம். ஆஸ்துமா உள்ளவர்களுக்குச் சற்றுக் கூடுத லான சிரமத்தைத் தரும். ஆயினும் குருவின் 9ம் பார்வை ராசிக்கு உள்ளதால் வீண்கவலை ஏதும் தேவையில்லை. மாதம் பூராவும் புதன் சாதகமாக இருக்கிறார். அதனால் உங்கள் தொழில்நிலை, மற்றவர்களுடன் கொண்டுள்ள உறவுநிலை ஆகியவை சீராகவே இருக்கும். குடும்பத்தில் மட்டும் சிறுசிறு பூசல்கள் தோன்றுவதற்கு சுக்கிரன் காரணமாகலாம். எதிர்பார்த்த இனங்கள் முடிவதில் சிறு தடங் கல் உண்டாகும். அது பதவி உயர்வுக்கும், கோர்ட் தீர்ப்புக்கும் கூட பொருந்தும். குருவின் பார்வையைப் பெறும் உங்கள் ராசிக்கு எந்தவித இன்னல்கள் ஏற்பட்டாலும் தடுத்து நிறுத்தும் ஆற்றல் உண்டு. குறிப்பாக குரு, ஜெனன ஜாதகத்தில் ஆட்சியோ, உச்சமோ பெற்றிருந்தால் உங்களை யாரும் ஒன்றும் செய்துவிட முடியாது. உங்கள் பணியில் நீங்கள் மேலும் துணிவுடன் இறங்கி வெற்றிக்கொடி நாட்டுவீர்கள். சனியினால் சில சமயங்களில் உடல்நலக்குறைவும், சிறு சிறு காயங்களும் உண் டாகலாம். எனவே, பிரயாணத்தின்போது எச்சரிக்கை அவசியம். அரசியலில் இருப்பவர் கள் பாதுகாப்பு வளையத்தை விட்டு வெளி வராமல் இருப்பது நல்லது. காயத்ரீ மகா மந்தி ரத்தை மனதுக்குள் ஜபிப்பது மூலம் எதிலும் ஜெயம் பெறுவீர்கள்.



## கன்னி ராசி :

*உத்திரம் 2, 3, 4-ம் பாதங்கள், ஹஸ்தம், சித்திரை 1, 2ம் பாதங் கள்.*

சனீஸ்வரனைத் தவிர மற்ற எந்தக் கிரகமும் எதிர்ப்பிலே தான் சஞ்சரிக்கின்றன. தசா புத்தி கள் நன்கு நடப்பவர்களுக்குக் கவலை தேவை யில்லை. மற்றவர்களுக்கு அவர்கள் எந்தத் துறையில் பணிபுரிபவராக இருப்பினும் சற்று டென்ஷன் அடையக்கூடிய நிலை. உடல்நிலை, கண் மற்றும் வயிறு பாதிக்கப்படலாம். உங் களைவிட பலமடங்கு தாழ்ந்த நிலையில் உள்ள வர்களே கூட உங்களைப் பற்றிப் புறம் பேசு வார்கள். எனவே, தெய்வசிந்தனையுடன் இருங் கள். வேதவித்தகர்கள், வயதானவர்கள், ஆன் மீகவாதிகள் ஆகியவர்களின் ஆசிகளைப் பெறுங்கள். அரசுப்பணி, அரசியல், படத்துறை யில் உள்ளவர்களுக்குச் சற்று சவாலாக இருக் கும் காலகட்டம். எச்சரிக்கையுடன் நடந்தால் எதையும் துச்சமாகத் தூக்கி எறியும் ஆற்றல் வரும். கவலை வேண்டாம். முடியுமானால் ஏதேனும் ஒரு வைணவத் தலத்திற்குச் சென்று வரலாம்.

என் மாமியார் கூட எங்களுடன் சந்தர்ப்பவாதக் கூட்டணி அமைத்துக் கொண்டார்.

ஆபீசிலிருந்து வந்த என் வீட்டுக்காரர், தான் 'கார்னர்' செய்யப்பட்டு விட்டோம் என்பதை ஓரளவு ஊகித்துக் கொண்டார்.

அப்போதுதான் நான்கு கிலோ மீட்டர் தூரத்திலிருக்கும் ஆபீசிலிருந்து 'லொங்கு, லொங்கு' என்று நடந்து வந்தவருக்கு (வாக்கிங் - பெட்ரோலை மிச்சப்படுத்தும் எக்சர்சைஸ்!) எங்களை எதிர்த்து வாதாடி ஜெயிக்க திராணியில்லை. அதனால் தான் படிந்து எங்கள் வழிக்கு வந்து விட்டார் என்று நான் கூட முதலில் ஏமாந்துதான் போனேன்.

பிறகல்லவா தெரிந்தது. ஆபீஸில் மூன்று வருடங்களுக்கு ஒரு முறை

# ருக்குத்தான் போவோமே..!



தரும் "லீவ் ட்ராவல்" அலவன்சை அந்த மாதத்திற்குள் வாங்காவிட்டால் காலாவதி ஆகிவிடும் என்ற செய்தி...

எதிர் வீட்டில் குடியிருக்கும் ஸ்டெனோ பரமேஸ்வரி சொல்லித் தானே எனக்கு அது தெரிந்தது!

"ரைட்... ரைட்... சும்மா புலம்பாதீங்க... யாருக்கு எந்த ஊருக்குப் போகணும் சொல்லுங்க. ஏம்மா... குருவாயூர்தானே...? விக்கி, வந்தனா உங்களுக்கு எங்கே போகணும்?" இவர் கேட்க....

"பங்களூர், மைசூர், பந்திப்பூர்...." லிஸ்ட் நீண்டது.

"உனக்கு ஊட்டிக்குப் போகணும், எத்தனையோ வருஷத்து ஆசை... ரைட். கிளம்புங்க. இந்த வாரக் கடைசில கிளம்புறோம்."

"அப்பா... ஆர் யூ ஆல்ரைட்?"

"நிஜம்மாவேவா?"

"எப்படிப் போறோம்? டிக்கெட் வாங்கிட்டேளா? ஹோட்டல ரூம் புக் செஞ்சாச்சா?" நான் சந்தேகமாய்

கேட்டேன்.

"விவரம் புரியாதவனா இருக்கியே... ஹோட்டல் ரூம், சாப்பாடுன்னு செலவு செஞ்சா நான் போண்டியாயிடுவேன். போற ஊர்லேயெல்லாம் சொந்தக்காரங்க, ப்ரெண்ட்ஸ் வீட்டுல தங்கிக்கப் போறோம். நம்ம செலவு பஸ், ட்ரெய்ன் டிக்கெட் மட்டும்தான்."

"அதானே பார்த்தேன். அப்பா வாவது, மாறுவதாவது!"

"ரொம்பத் தப்பு. மஹா தப்பு. விலைவாசி இருக்குற இருப்பில் ஒரு வீட்டில் அஞ்சு பேர் போய் டெண்ட் அடிக்கிறது கிட்டத்தட்ட கிரிமினல் குத்தம். வேண்டாம். சொல்றதைக் கேளுங்க. ஒழுங்கா ஹோட்டல் ரூம் புக் பண்ணுங்க. போய் ஃப்ரீயாத் தங்குவோம். அதிசயமா கிளம்புறோம். செலவுன்னு பார்க்காதீங்க. ப்ளீஸ் கேளுங்க."

'சடக்'கென்று என் மாமியார் அந்தர் பல்டி அடித்துக் கட்சி மாறினார்.

"கஷ்டப்பட்டு சம்பாதிக்கிறவனுக்குத் தானே காசோட அருமை தெரியும். நமக்கு எத்தனை மனுஷா இருக்கா... வா... வான்னு அருமையாக் கூப்பிட்டிண்டு இருக்கா... வெறுங்கையோடயா போய் தங்கிட்டு வரப் போறோம்? டேய் வெங்கிட்டு, நான் ஒரு பெரிய தூக்குப் பாத்திரம் நிறைய கோதுமை அல்வா பண்ணி எடுத்துண்டு வரேன். அவங்களுக்கெல்லாம் கொடுத்தால் ஆசையா சாப்பிடுவா. அதை விட்டுட்டு கண்ட கண்ட ஹோட்டல்லயா தங்குவா?"

"பாட்டீ... ப்ளீஸ், உங்க ஸ்பெஷல் ஃபெவிகால் அல்வாவைக் கொடுத்து அவங்களை யெல்லாம் கொடுமைப்படுத்தாதீங்களேன்,

தார்.

நீலகிரி எக்ஸ்ப்ரெஸ் அதிகாலையில் திருப்பூரில் நின்ற போதே நாங்கள் அனைவரும் விழித்துக் கொண்டு விட்டோம்.

வடகோயம்புத்தூர் ஸ்டேஷனிலேயே இறங்கி சாய்பாபா காலனியின் ஓரத்தில் இருக்கும் என் நாத்தனாரின் வீட்டிற்கு ஆட்டோவில் (மீட்டர் என்ற சொல்லையே கேள்விப்பட்டதில்லை அந்த ஆட்டோ டிரைவர்!) போய் இறங்க,

"அடேடே... சர்ப்ரைஸ்... வாங்க வாங்க. வா மன்னி, வா அண்ணா, என்னம்மா இளைச்சுப் போயிட்டே... டேய் ரோஹித்... மாமா, மாமி பாரு. போய் அப்பாவையும் பாட்டியையும் கூப்பிடு. வாடா விக்கி, ஹை வந்துனா!"

வாய் நிறைய வரவேற்றாள் சந்தியா!

அவளோ, அவள் வீட்டிலேரோ எங்களை எதிர் பார்த்ததாகவே தெரியவில்லை. காரணம், தபால் கார்டு நாங்கள் 'வந்து சேர்ந்த மறுநாள் மாலை சாவதானமாக வந்தது!

மருதமலை முருகனுக்கும், பேரூர் பட்டீஸ்வரருக்கும் ஒரு 'ஹலோ!' சொல்லிவிட்டு வரும் போதுதான் சந்தியா சொன்னாள்,

"கரெக்ட் டைம்ல வந்திருக்கே அண்ணா... நாளைக்கு நிவேதாவுக்கு நாலாவது பர்த்டே...!"

"நிவேதா குட்டீ உனக்கு சாக்லெட் வேணுமா, பொம்மை வேணுமா பர்த்டேக்கு?" என்று என் கணவர் கேட்டதை லட்சியம் செய்யாமல் சந்தியா என்னைப் பார்த்து,

"மன்னி நீங்க பாட்டுக்கு ஃப்ராக், பொம்

# அம்மாவைப் பொறுத்தவரை சிறு முயற்சி அர்ஜுனைப் பொறுத்தவரை பெரும் பாய்ச்சல்.

ஓடி, உதைபட்டு, அனைவரோடும் உற்சாகமாகப் பழகும் காலம். தோளிலும், முட்டிகளிலும் கீறலும் காயமும் படும் வயது. ஆம் வளரும் வயது.

தீவிரமான பாடங்கள், ஓயாத விளையாட்டுகளுக்குப் பிறகும் உங்கள் குழந்தைகள் சக்தியுடன் இருப்பதை எவ்வாறு உறுதி செய்வீர்கள்? அர்ஜுனின் தாயிடமிருந்து குறிப்பறியுங்கள். சின்னஞ்சிறு முயற்சியால் குழந்தைகளின் சக்தியை மீட்டுத் தரும் வழியை அறிந்து கொள்ளுங்கள்.

அவர்களுக்கு முட்டை கொடுக்கத் துவங்குங்கள். முட்டையில் உன்னத தரமுள்ள புரதம் செறிந்துள்ளதால், குழந்தைகளுக்கு சக்தியளிக்கிறது. வருங்காலத்திலும் நோய் எதிர்ப்புச்சக்தி பெற உதவி செய்கிறது.



முட்டையில் உள்ள வைட்டமின் A கண்களுக்கும், சருமத்திற்கும் நல்லது. உணவு நன்கு செரிப்பதற்கும், நரம்புகள் வலுப்பெறுவதற்கும் தேவையான வைட்டமின் B க்ரூப் அனைத்தும் உள்ளது. நல்ல திடமான, உறுதியான எலும்புகளுக்கு வைட்டமின் D உள்ளது.

முட்டையில் அத்தியாவசிய 11 கனிமப் பொருட்களும் உள்ளது – ஆரோக்கியமான இரத்தத்திற்கு இரும்புச் சத்தும், நல்ல நினைவாற்றலுக்கு பாஸ்பரஸ் என.

இன்றே உங்கள் குழந்தைக்கு முட்டை அளிப்பீர். சுவையான சரிவிகித உணவை உட்கொள்வதால் எப்போதும் உற்சாகத்தில் துள்ளிக் குதிப்பான்.

**எந்த நாளும் சிறந்தது.**
**முட்டை உண்ண உகந்தது.**




நேஷனல் எக் கோ-ஆர்டினேஷன் கமிட்டி

Enterprise/NECC/24/Tm

பருப்பு ரசம் நுரையுடன் பொங்கி வரும்போது கொத்து மல்லித் தழையை உடனே போடாமல் அடுப்பிலிருந்து கீழே இறக்கி, ஐந்து நிமிடம் தாமதித்து ரசத்தில் கிள்ளிப் போட்டால் மல்லி அதன் பசுமை மாறாமல், ரசம் கமகம வென்று வாசனையுடன் இருக்கும்.

- சுந்தரி



பட்டுப் பாவாடை வாங்கிய கையோடு கோயம்புத்தூர் காட்டன் புடைவை ஷாப்பிங், என் மாமியார் தலைமையில்! ஒரே விலையில் நான்கு புடைவைகள் எடுத்தார். ஒன்று எனக்கு (ஹை! ஜாலிதான்!), மற்றது சந்தியாவுக்கு, ஒன்று என் மாமியாருக்கு, மற்றது சந்தியாவின் மாமியாருக்கு!

"சம்பந்தி வீட்டுக்கு வந்திருக்கோம். இது கூட வாங்கித் தரலைன்னா உனக்குத்தாண்டா கேவலம்."

இவர் முகத்தில் ஈ, கொசு, ஈசல் எதுவுமே ஆடவில்லை!

குருவாயூரப்பன் தரிசனத்திற்கு எங்கள் கூட வந்தவர்கள் சந்தியாவின் மாமியார், அவர் தங்கை, அவர் தோழி, அவர் சித்தி!

"உனக்கொண்ணும் புரியாது. கூட வரச் சொல்லி அழைக்காட்டி தப்பாய்ப் போயிடும். நாளைக்கு என் பெண்தான் கஷ்டப் பட வேண்டும்! சம்பந்திகளை வசதியாக் கூட்டிண்டு போகணும் டாக்சி ஏற்பாடு பண்ணு!"

என் கணவர் இரண்டு லிட்டர் குளுகுளு சிறுவாணித் தண்ணீரைக் குடித்துச் சூட்டைத் தணித்துக் கொண்டார்!

அடுத்த ஹால்ட் ஊட்டியில் என் கணவரின் பால்ய சினேகிதர் சபாபதி வீட்டில்.

"அவன் கட்டை பிரம்மாச்சாரி, இந்த மாதிரி நச்சுப் பிச்சுப் பிடுங்கல் எதுவுமிருக்காது பார்" என்றபடி தன்னையே தைரியப்படுத்திக் கொண்டார்.

ஆஃப் சீசனில் வந்து இறங்கிய எங்களை உண்மையான மகிழ்ச்சியுடன் வரவேற்றார் சபாபதி. அவரை விடவே அதிகம் ஆனந்தப் பட்டவர் அவருடைய தாயார் தெய்வநாயகியம்மாள்.

"இந்த மாதிரி நாலு பேர் வந்து போக இருந்தாத்தான் இந்த மலங்காட்டில எனக்கும் போது போகுது. எத்தினி நேரம் தான் மலையையும், மிஸ்ட்டையும், மழையையும், மரத்தையும் பார்த்துக்கிட்டேயிருக்க முடியும் சொல்லுங்க?" என்றபடி எங்களுக்குச் சூடாய் ஏலக்காய் டீயும், ஊட்டி பிஸ்கட்டும் கொடுத்து உபசரித்தார்.

"குளுருதா?" என்றபடி ரூம் ஹீட்டரைப் போட்டார்.

"என்ன அண்ணி. ரெண்டு நாள் 'ஸ்டே' தானா? அதிசயமா வந்திருக்கீங்க ஒரு வாரம் இருக்கக் கூடாது?" என்ற சபாபதி -

"டெபுடி டைரெக்டர் வந்து தொலைச்சுட்டார். என்ன செய்ய... நீங்க கார்டன், லேக், தொட்டபெட்டான்னு ஒரு சின்ன ரவுண்டு அடிச்சிட்டு வீட்டுக்கு வாங்க... நான் சினிமா டிக்கெட் வாங்கிட்டு வந்துடறேன். ஈவினிங் ஷோவுக்கு...." என்றபடி ஜீப்பில் பறந்தார்.

சபாபதி கிளம்பிய பத்தாவது நிமிடம் தெய்வநாயகியம்மாளுக்கு லேசாக மூச்சு வாங்க ஆரம்பித்தது. பதினைந்தே நிமிடங்களில் கைகால்கள் விறைக்க, நானும் வந்தனாவும் ஒரு பாட்டில் நீலகிரித் தைலத்தை அவருக்கு சூடு பறக்கத் தேய்ந்து விட, என் மாமியார் வெந்நீர் வைக்க ஓட, தெய்வநாயகியம்மாள்,

"ஐயோ நெஞ்சை அடைக்குதே... பட படன்னு வருதே... இடது கை குடையுதே...." என்று அரற்றியபடியே கண்கள் சொருகி சரிய நான்கு மேடு பள்ளங்களை ஓட்டமாய் ஓடிக் கடந்து ஒரு டாக்சி பிடித்து வந்தார் என் கணவர்.

ஹாஸ்பிடலில் ப்ளட், யூரின், எக்ஸ்ரே, ஈசிஜி என்று சகலவிதமான டெஸ்ட்களையும் பண்ணி முடித்துவிட்டு டாக்டர் ஒன்றும் புரியாமல் விழிக்க... தெய்வநாயகியம்மாள் நார்மலுக்கு வந்தாள்.

"ஐயோ பயந்துட்டீங்களா... எனக் கொண்ணுமில்லே. நேத்து உருளைக்கிழங்கு, பட்டாணியெல்லாம் போட்ட குருமா சாப்பிட்டேனே... அதான் வாயுப் பிடிப்பு. உங்க கூட பேசிக்கிட்டிருந்த சுவாரஸ்யத்துல பெருங்காய மாத்திரை சாப்பிட மறந்துட்டேன் போல இருக்கு. அதில் ஒண்ணு சாப் பிட்டாப் போதும் எந்த விருந்தும் ஜீரணமாயி டும். தம்பிக்குத் தான் அனாவசிய செலவு, பாவம்" என்றபடி ஜிகுஜிகுவென்று நடந்து மேடேற ஆரம்பித்தார். எங்களுக்குத்தான் மூச்சு வாங்கியது. லேக்கிற்குப் போய் சேரவும் மழை பிடித்துக் கொள்ளவும் சரியாக இருந்தது. மழை நீர்க் குட்டையில் காகித போட் செய்து விட ஆரம்பித்தான் விக்கி.

"பேசாம ஹோட்டல்ல தங்கியிருந்தா பிடுங்கலில்லாம மழைக்கு முன்னாடி 'போட்டிங்' போயிருக்கலாம் என்ற வந்தனாவைப் பார்க்காமல் எங்கோ நகர்ந்த மேகத்தைப் பார்ப்பது போல நடித்தார் என் கணவர்.

"வெங்கிட்டு, என் பிள்ளையை விட அக்கறையாக என்னை கவனிச்சுக்கிட்டான். மருமக மாதிரி ஒரு பொண்ணு கிடைக்கணுமே. குழந்தைங்க என்னமா ஒட்டிக்குதுங்க. நீங்க எனக்கு அக்கா மாதிரி" என்று எங்கள் அனைவரையும் புகழ்ந்து தீர்த்து ஐஸ் வைத்தார் தெய்வநாயகியம்மாள்.

"ஊட்டில உருப்படியா ஆஸ்பத்திரி பார்த்தோம். வெளியில் சொன்னால் வெட்கக் கேடு" என்ற விக்கியின் வாயை என் கர்ச்சிஃபால் பொத்தினேன்.

"முதுமலைல தங்கறது வேஸ்ட். அதிருஷ்டமிருந்தாத்தான் யானை பார்க்க முடியுமாம். அதை அழகா நம்ம டிவியிலேயே பார்த்துக்கலாம்" என்று எங்களை அடக்கிவிட்டு நேராக மைசூர் அழைத்து வந்தார் என் கணவர். நேராய் ஒரு டூரிஸ்ட் பஸ்ஸில் ஏறி பேலஸ், ஜூ, பிருந்தாவன், சாமுண்டி ஹில்ஸ் என்று பார்த்துவிட்டு இறங்கிய போது ஒவ்வொருவருக்கும் உடம்பு அடித்துப் போட்டாற் போல இருந்தது.

"பேசாம ஒரு ரூம் போட்டுத் தங்கி ரெஸ்ட் எடுப்போம், சொல்வதைக் கேளு, வெங்கிட்டு," என்று என் மாமியார் கெஞ்சக் கெஞ்ச....

"நோ, ரெண்டரை மணி நேரத்தில் பெங்களூர் கிளம்புங்க!" கேப்டன் உத்தரவு போட நாங்கள் கே.எஸ்.ஆர்.டி.சி பஸ்ஸில் அடைக்கப்பட்டோம். இருந்தும் நான் கொஞ்சம் அதிகப்படி குஷியாகவே இருந்தேன். காரணம், அடுத்த டேரா, பெங்களூரில் உள்ள என் அண்ணா வீட்டில் அல்லவா!

மெஜஸ்ட்டிக்கில் இறங்கி தூங்கிக் கொண்டிருந்த ஆட்டோ டிரைவரை டபிள் ரேட் ஆசை காட்டி எழுப்பி பனிமூட்டம் நிறைந்த பெங்களூர் தெருக்கள் வழியாக பனஷங்கரியில் இருக்கும் அண்ணா வீட்டிற்குப் போய்ச் சேர்ந்த போது மணி ஒன்று அடித்தது.

பதினைந்து முறை காலிங் பெல்லை அழுத்தி ஓய்ந்த பின் நிதானமாக தூக்கக் கலக்கக் கண்களுடன் அண்ணா கதவைத் திறந்தான்.

"ஐயோ நீங்களா, சாரி! இந்த ஏரியால ரொம்ப கொள்ளைக்காரங்க பயம், அதான் தயங்கித் தயங்கி இவ்வளவு 'லேட்'டாகக் கதவைத் திறந்தேன். வாங்க..."

இவர் முகம் போன போக்கைத்தான் பார்க்க வேண்டுமே!

மறுநாள் காலையில் அண்ணா, மன்னியுடன் ஊர்க் கதைகளைப் பேசி முடித்த பின் அன்றைய ப்ரோக்ராமை திட்டமிட ஆரம்பித்தோம்.

"மாப்ளே.... யூர் ஆர் லக்கி. ஜாலியா ஆபீசுக்கு லீவ் போட்டுட்டு ஃபேமிலியோட ஊர் கிளம்பிட்டீங்க. என்னைப் பாருங்க, பிசினஸ், இருபத்திநாலு மணி நேர அலைச்சல். இன்னிக்குக் கூட ஒரு முக்கியமான க்ளையண்ட் வர்றான், ஓடிண்டே இருக்கேன். ஒண்ணு பண்ணலாமா... நான் ஆபீசில் இறங்கிக்கறேன், நீங்க காரை எடுத்துண்டு ஊர் சுத்திப் பார்த்துட்டு நேரே யூட்டிலிட்டி பில்டிங்குக்கு ஒரு மணிக்கு வந்துடுங்க. அங்கே நல்ல ரெஸ்ட்டாரண்ட் இருக்கு. நானும் லஞ்சுக்கு வந்துடறேன். ஆமாம், ட்ரைவிங் தெரியுமோ?"

"தெரியும், ஆனால் வழிதான் தெரியாது" என்று சொல்லிக் கொள்ள ஏனோ என் கணவருக்கு அவமானம் போலும்!

அண்ணாவின் அம்பாசிடரில் அனைவரும் புளிமூட்டையாய், அடைந்தபடி கிளம்பினோம். இவரும் ஒவ்வொரு 'சார்க்கிளி'லும் நிற்கும் ட்ராபிக் கான்ஸ்டபிளிடம் வழி கேட்டுக் கொண்டு அனாவசியத்திற்கு ஊரைச் சுற்றி கப்பன் பார்க், விதான் சவுதா என்று ஓரிரு இடங்களைப் பார்த்துவிட்டு, ஷாப்பிங் சென்ட்டர்களை அறவே தவிர்த்துவிட்டு திசை மாறி, ஒன்வேயில் தவறாக நுழைந்து



நாம் செய்யும் வற்றல் குழம்பு, புளிக்குழம்பு இவற்றில் புளி கூடிவிட்டதா? கவலையை விடுங்கள். சிறிது 'கார்ன்ப்ளாரை' நீரில் கரைத்துக் குழம்பில் விட்டு ஒரு கொதி வந்ததும் இறக்கிவிடவும். குழம்பு சுவை கூடுதலாக இருக்கும்!

– சி. காயத்ரி

எதிரே வந்த சைக்கிள்காரனை பானெட்டால் முத்தமிட்டு (நல்லவேளை சைக்கிளுக்குத்தான் காயம்) அவனுடன் இவருக்குத் தெரிந்த 'சொல்ப, சொல்ப' கன்னடத்தில் 'மாத்தாடி' கூட்டம் வேடிக்கை பார்க்க ஒரு காம்ப்ரமைசுக்கு வந்து சைக்கிள் ரிப்பேருக்காக ஒரு புது சைக்கிளின் விலையை தண்டமாக அழுது விட்டு மூன்று மணிக்கு யூட்டிலிட்டி பில்டிங்கிற்குள் நுழைந்தோம்!

இரண்டு மணி நேரமாகக் காத்துக் கொண்டிருக்கும் அண்ணாவிடம் "ரொம்ப ஜாலியா 'சைட் சீயிங்' போனதில் டைம் ஆயிடுத்து" என்று மழுப்பினோம்.

மெட்ராஸ் நல்ல மெட்ராஸ்.....

நேற்று திரும்பி வந்தாயிற்று...

என் கணவர் ஒரு நாற்பது பக்க நோட் முழுவதும் டூர் கணக்கு எழுதி கூட்டிக் கழித்துப் பார்த்து மூன்று கப்பல் கவிழ்ந்தாற் போல் கன்னத்தில் கை வைத்துக் கொண்டு உட்கார்ந்தார்.

"செலவு ஜாஸ்தியாயிடுத்தா? ஹோட்டல்லயோ, ஹாலிடே ரிசார்ட்லயோ தங்கினாக் கூட இவ்வளவு ஆகியிருக்காதோ" என்ற என்னை பார்வையால் பொசுக்கினார்.

"இன்னும் பத்து வருஷத்திற்கு டூர்ங்கற பேச்சே எடுக்கக் கூடாது" என்று கர்ஜித்தார்.

தபால்காரர் என்னவோ வீசிவிட்டுப் போனார்.

மூன்று தபால்கார்டுகள்.

முதல் கடிதம் சந்தியாவிடமிருந்து.

"... நிவேதாவும், ரோஹித்தும் மாமா, மாமி நினைவாகவே இருக்கிறார்கள். பொங்கல் லீவுக்கு சென்னை வருகிறோம். பத்து நாட்கள் இருப்போம். கிஷ்கிந்தா, டிஸ்னி ஓர்ல்டு, பாம்புப் பண்ணை, மஹாபலிபுரம், காஞ்சிபுரம் எல்லாம் சுற்றிப் பார்க்க ஏற்பாடு செய். நிற்க, பொங்கலுக்காக எனக்குப் புடைவை வாங்கிடாதே. நிவேதாவுக்கு மெலிசாய் ஒரு செயின் வாங்கிவிடு, தங்கத்தில்... மற்றவை நேரில்..."

அடுத்த கார்டு சபாபதியிடமிருந்து...

"இங்கு குளிர் ஜாஸ்தியாகி விட்டது. அம்மாவுக்கு ஆஸ்த்துமா அதிகமாகி விட்டது. "மெட்ராஸ் போறேன், அக்காவும், மருமகனும் வரச் சொல்லியிருக்காங்க. வெங்கிட்டு உன்னை விட அருமையா என்னை கவனிச்சுக்குவான் என்கிறாள். நாளை நீலகிரியில் ஏற்றி விடுகிறேன். ஸ்டேஷனுக்கு வந்து அழைத்துப் போ..."

கடைசி கார்டு என் அண்ணாவிடமிருந்து.

"என் மச்சினனுக்கு உங்கள் கம்பெனியிலிருந்து இன்டர்வியூ கார்டு வந்திருக்கிறது. எப்படியாவது அவனுக்கே இந்த வேலையை வாங்கிக் கொடுத்திடுங்க. முடியாவிட்டால் வேறு நல்ல கம்பெனியில் நுழைத்து விடவும். அதுவரை அவன் நம் வீட்டிலேயே தங்கியிருக்கட்டும். நிற்க, அவனிடம் ஒரு கூடை குலு ஆப்பிள் கொடுத்தனுப்புகிறேன். க்ளயண்ட் அனுப்பியது."

வீடெங்கும் உற்சாக அலைகள் பொங்கியது.

"ஹை... நிவேதா, ரோஹித் வர்றாங்களா ஜாலிதான்."

"டெய்லி ஆப்பிள் ஜூஸ் பண்ணப் போறேன்."

"தெய்வநாயகிக்கு உடம்பு முடியலையா... பாவம். இங்கே வந்தா நாலே நாளில் சரியாயிடும் பாரு. அப்புறமா நாங்க கோவில், குளம், கச்சேரின்னு நாலு இடம் போயிட்டு வரலாம். அந்த மலைல அவளுக்கும் எப்படிப் போது போகும், பாவம்."

"கிஷ்கிந்தா... ஒன்ஸ்மோர் போலாமா டேடி!"

என் கணவர் கேல்குலேட்டரை அவசர அவசரமாக எடுத்து ஆத்திரமாக எண்களை அழுத்த ஆரம்பித்தார்.

---

குழம்பிற்குத் தேங்காய் அரைத்து விடும்போது சிறிது 'கார்ன்ப்ளார்' (கடையில் 'ப்ளெமின் கார்ன் ப்ளார்' கிடைக்கும்) சேர்த்தால் குழம்பு சுவை கூடும். நிறைய தேங்காய் சேர்த்தோமே, கொலஸ்ட்ரால் வந்து விடுமோ என்ற பயமும் இல்லை.

- சி. காயத்ரி



# அலுமினியம் தகட்டில் வண்ண ஓவியங்கள்

அலுமினியத் தகட்டில் இரண்டு விதமாக வண்ண ஓவியங்கள் செய்யலாம். ஒன்று என்க்ரேவிங் என்ற செதுக்கும் முறை. மற்றொன்று எம்பாசிங் என்று சொல்லக் கூடிய புடைக்கும் முறை. சென்னையில் கந்தகோட்டத்திற்கு எதிரில் அலுமினியத் தகடுகள் மொத்த வியாபாரிகளை அணுகி நமக்குத் தேவையான வேலைக்கு அதாவது நம்பர் ஒன்று அல்லது





இரண்டாவது வகை என்று சொன்னோமானால் அதற்குத் தகுந்த கன அளவு அலுமினியத் தகடுகள் வெட்டித் தருவார்கள்.

**தேவையான பொருட்கள் :**

(1) அலுமினியத் தகடு, (2) ஹார்ட்போர்டு, (3) என்கிரேவிங் செய்ய கூரிய உளி (Fancy Store அல்லது பூக்கடை அருகே உள்ள கடைகளில் கிடைக்கும்), (4) கறுப்பு பெயிண்ட், (5) ஓவியத்திற்கு ஏற்ற வண்ணங்களில் எனாமல் பெயிண்ட் (சாம்பிள் டப்பாக்கள்), (6) கார்பன், டிரேஸ் பேப்பர்.

**செய்முறை :**

1 : முதலில் தேவையான உருவங்களை காலண்டரிலிருந்தோ, அல்லது டிராயிங் டிசைன் புக்கிலிருந்தோ தேர்ந்தெடுத்துக் கொள்ளவும்.

2 : டிரேஸ் எடுத்த உருவத்தின் நீள அகலத்தை அளந்து கொள்ள வேண்டும்.

3 : நான்கு புறத்து அளவுடன் சுமார் 6'' - அதாவது (நீளம் + 12'') + (அகலம் + 12'') என்று கணக்கிட்டுக் கொள்ள வேண்டும்.

4 : இந்த அளவிற்கு ஏற்றாற் போல்தான் அலுமினியத் தகடு வாங்க வேண்டும்.

பிறகு டிசைன் (நீளம் + 2'') + (அகலம் + 2'') உள்ள ஹார்ட் போர்டு வாங்க வேண்டும்.




5 : அலுமினியத் தகட்டை ஹார்ட்போர்டில் இணைக்கும் முறை :

(A) ABCD என்ற ஹார்ட்போர்டில் அலுமினியத் தகட்டை வைத்து EF, GH, IJ, KL என்ற முறையில் பென்சிலால் வரைந்து கொண்டு, EF, FG, GH, HI, IJ, JK, KL என்ற வரிசையில் கூரிய கத்திரியால் வெட்டிக் கொள்ளவும்.

(B) ABCD என்ற ஹார்ட்போர்டில் பின்புறத்தில் EF, GH, IJ, KL என்று மடக்கிவிட வேண்டும்.

6 : இவ்வாறு மடித்த பிறகு டிசைனின் 4 புறமும் இரண்டு அங்குல பார்டர் கொண்ட அலுமினியம் போர்ட் தயாராக இருக்கும். (ஹார்ட்போர்டு பக்கத்தைத் திருப்ப வேண்டும்.)

7 : சரியாக அளவு பார்த்து டிரேஸ் மூலம் கார்பன் பேப்பரால் டிசைனை அலுமினியத் தகட்டில் வரைய வேண்டும்.

8 : பிறகு டிசைனின் அவுட் லைனில் பிரத்தியேக உளி கொண்டு கட்டைவிரல், ஆள் காட்டி விரல் நடுவிரல் மூன்றினாலும் அழுத்தம் கொடுத்து ஏர் உழுவது போல் செதுக்கிக் கொண்டே போகவும். (உளி வாங்கும் கடையிலேயே எப்படிச் செய்வது என்று விளக்கம் சொல்வார்கள்.)

9 : உருவத்தின் முகம், கை, கால்கள் தவிர மீதியுள்ள உடைகள், நகைகளுக்கு மட்டும் விருப்பமான வண்ணங்களைத் தீட்ட வேண்டும்.

10 : மேலே உள்ள பெயிண்ட் நன்றாக உலர்ந்தவுடன், டிசைன் அவுட்லைனைச் சுற்றி கறுப்பு நிற பெயிண்ட் செய்ய வேண்டும். பிறகு நன்றாக உலர விட வேண்டும்.

11 : Glass paper என்று சொல்லும் கண்ணாடி பேப்பரை மேலாக கவர் செய்து பின்புறம் ஒட்டிவிட வேண்டும். தேவையானால் ஆணியில் மாட்ட துளையிடலாம்.

இப்போது அலுமினியத் தகட்டில் வண்ண ஓவியம் தயார்!

— **பத்மா மணி**




போயே ! போச்சே !!
கோடு போட்டவுடன்
ஒழிந்தது ...

- கரப்பான் பூச்சிகள்
- எறும்புகள்
- பல்லிகள் மற்றும்
- மூட்டைப் பூச்சிகள்

# ஸ்டாப்

இன்றியமையாத இல்லற பாதுகாப்பு



Mfd. by:
GRAVITY LABORATORIES P. LTD., Bombay.
Marketed by:
V.C. RAMALINGAM & SONS
248, Mint Street, Park Town, Madras-3
Ph : 582828 • 583434 • 582728

WANTED AREA-WISE DISTRIBUTORS

இந்தியாவின்
# No.1
இங்கிலீஷ் இன்ஸ்டிட்யூட்



# விவேகானந்தா
## கல்வி நிலையம்
உங்களுக்காகவே வழங்குகிறது

## " ஹைபவர் இங்கிலீஷ் கோர்ஸ் "

அடிப்படை - இலக்கணம்
- ஸ்போக்கன் இங்கிலீஷ்

என மூன்று நிலைகளாகப் பிரிக்கப்பட்டுள்ள ஒப்பற்ற பயிற்சிமுறை.

உங்களுக்குத் தேவையான பிரிவைத் தேர்ந்தெடுத்து வீட்டிலிருந்தபடியே ஓய்வு நேரத்தில் சுலபமாக இங்கிலீஷ் கற்றுக் கொள்ளுங்கள். சரளமாகப் பேசத் தொடங்குங்கள்.

விவரம் ▸ ▸ ▸ ▸ ▸

# அமுதசுரபி - ஸ்ரீராம் டிரஸ்ட்




## ஸ்ரீநிதி திட்டம் 4 அன்பளிப்புகளுடன்





ஸ்ரீராம் டிரஸ்ட்

1946 முதல்
கலை, இலக்கியப்
பணிபுரியும்
அமுதசுரபி
(மாத இதழ்)

1996

பொன்விழா
ஆண்டை
நோக்கி

அமுதசுரபி சந்தா முன் பண டெபாசிட் திட்டத்தில் உடனே சேருங்கள். ரூ. 5000 டெபாசிட் செய்தால் 5 ஆண்டுகளில் ரூ. 10,000 ஆகத் திரும்பப் பெறலாம். உங்கள் முதலீடு இரண்டு மடங்காகிறது. தவிர, 5 ஆண்டுகளுக்கு 'அமுதசுரபி' மாத இதழ்களும் 5 ஆண்டுகளுக்கு 'அமுதசுரபி' தீபாவளி மலர்களும் (வருங் காலத்தில் விலை ஏற்றம் இருந்தாலும்) உங்களை வந்தடையும்.

உங்களுக்கு ஸ்ரீராம் டிரஸ்ட் வெளியிடும் 1996 ஆம் ஆண்டின் அழகிய வண்ணக் காலண்டர் புத்தாண்டுப் பரிசாக அளிக்கிறோம். மேலும், பூஜையில் வைத்துப் பாதுகாப்பதற்கேற்ற ஸ்ரீசக்கரம் - அஷ்டலட்சுமி திருஉருவங்கள் பதித்த ஐம்பொன்னாலான பதக்கம் இலவசம்.

டெபாசிட் அனுப்ப வேண்டிய முகவரி :

**ஸ்ரீராம் டிரஸ்ட்**
தபால் பை எண்: 5043,
145, லிங்கிச் செட்டி தெரு,
சென்னை - 600 001
போன் / 510535

**காலண்டர் விற்பனைக்கு அல்ல**

✂

---

இத்துடன், ரூ. 5000/- டிராப்ட்/ காசோலை வங்கி பெயர்: ________________ அனுப்பியுள்ளேன். கீழ்க் காணும் எங்கள் முகவரிக்கு டெபாசிட் ரசீது, அன்பளிப்பு -அமுதசுரபி இதழ்களை அனுப்பி வைக்கவும். இந்தத் தொகையை 5 ஆண்டுகளுக்குத் தங்களிடம் சந்தா முதலீடாக அளிக்க விரும்புகிறேன். 5 ஆண்டுகளுக்குப் பிறகு ரூ. 10,000/- ஆகத் திரும்பப் பெற்றுக் கொள்ளச் சம்மதிக்கிறேன்.

பெயர் : ------------------------------

முகவரி : ------------------------------

------------------------------

வாரிசுதாரர் பெயர்: ------------------------------ ஒப்பம்

• வேங்கடநாராயண செட்டியார்



• ராஜேந்திரன்

• ஆதிகேசவன்

ரதராஜன்

இன்றைய தொழிலதிபர்கள் தங்கள் தயாரிப்புகளை மக்களிடம் விற்பனை செய்வதில் காட்டும் மும்முரமும் துரிதமும் சர்வீஸில் காட்டுகிறார்களா? என்றால் சந்தேகம்தான். அந்தளவு சர்வீஸ் என்றாலே காததூரம் ஓடுகிறார்கள். அப்படிப்பட்ட யுகத்தில் "உங்க கிரைண்டர் சர்வீஸ் பண்ணி நாளாச்சே"என விசாரித்து தொலைபேசியில் தமது கஸ்டமருக்கு அக்கறையோடு சர்வீஸ் வசதிகளை அறிவித்தவர் வேறு யாருமல்ல. பிரபல சௌபாக்யா வெட்கிரைண்டர் நிறுவனத்தின் உரிமை யாளர்களில் ஒருவரான வரதராஜன்தான்.

அவர் சொல்கிறார்...

"35 வருட காலத்தில் நாங்கள் பெறுகிற வெற்றி எதன் அடிப்படை யில் என்று தானே யோசிக்கிறீர்கள். நிறைய வியாபாரிகள் அசட்டை செய்யும் சர்வீஸை நாங்கள் முக்கியமான விஷயமாக எடுத்துக் கொண் டோம். உத்திரவாதக் காலத்தில் வெட்கிரைண்டரின் உதிரிபாகங்கள் எதுவும் பழுதடைந்தால் கட்டணமின்றி இலவசமாக பொருத்தித் தரு கிறோம். உத்திரவாதத்திற்குப் பிறகு பழுதேற்பட்டால் உதிரிபாகங் களுக்குரிய தொகையை மட்டும் பெற்று... சர்வீஸை இலவசப்படுத்தி யிருக்கிறோம். ஒரு ஃபோன் செய்தால் போதும் அனுபவமிக்க ஊழியர்கள் சம்பந்தப்பட்ட இடத்திற்கே சென்று பழுதுகளை நீக்குவார்கள்."

**ஆனால் சர்வீஸ் ஒன்றே போதும் என்றாகிவிடாதே? இவர் கள் கிரைண்டரில் பொருத்தப்படும் கல், பாடி, தரம், உழைப்பு. மோட்டார், பேரிங் போன்றவைகள் எப்படிபட்டது.... அதிலே தனி அக்கறை எடுத்துக் கொள்கிறார்களா?**

ஈரோடு பெருந்துறை ரோடிலுள்ள 'சௌபாக்யா' தொழிற்

# 'கோயில், குளம்'னு போவேன்!

சாலைக்கு நாம் காலடி வைத்தபோது... கொங்கு தமிழில் எதார்த்தமான அன்போடு பெரியவர் கே.பி.வேங்கட நாராயணனும் அவரது புதல்வர்கள் ராஜேந்திரன், ஆதிகேசவன், வரதராஜன் ஆகியோரும் வரவேற்றார்கள்.

தொழிற்சாலையில் விறுவிறுப்பான பணி நடந்து கொண்டிருக்கிறது. மலைபோல் குவிக்கப்பட்ட பாறைக்கற்கள், ஒருபுறம் கிரைண்டரின் மைக்காபாடி, ஸ்டீல்பாடி தயாரிக்கப்பட்டு அவை ஒருபுறமும் நிறைந்து கிடக்கின்றன. ஒரு இடத்தில் உடைக்கப்பட்ட பாறைக் கற்களிலிருந்து டில்டிங்-சாதாரண வெட்கிரைண்டர் டேபிள் டாப் கிரைண்டர்களுக்கு ஏற்ப பொருத்தப்படும் கல்லை, கடைசல் மெஷினில் கடைந்து கொண்டிருந்தார்கள்.

**நமக்குக் கல்லைப் பார்த்ததும் பழைய மொழி ஞாபகத்துக்கு வர... 'எறும்பு ஊற கல்லும்தேயும்'என்பார்கள். நீங்கள் கிரைண்டருக்குள் கல்லைத் தானே பொருத்துகிறீர்கள். நாளடைவில் கல் தேய்ந்து விடும் அல்லவா? எப்படிப்பட்ட கல்லை கிரைண்டரில் பொருத்துகிறீர்கள் எவ்வளவு காலம் தேயாமல் இருக்கும்? என்று மூத்தவர் ராஜேந்திரனிடம் கேட்கிறோம்.**

"சௌபாக்யா கிரைண்டரில் பொருத்தப்படும் கற்கள், முற்றிலும் ஒரே கற்பாறையிலிருந்து அகற்றி எடுத்துத் தயாரிக்கப்படுகிறது. இவை கடினமானவை. ஊத்துக்குளியிலிருந்து எடுக்கப்படும் பாறைக் கற்களை முற்றியதுதானா என்று நன்கு சோதித்த பின்னரே கிரைண்டரில் பதிக்கிறோம். இதனால் அரைபடும் போது தூள் ஆகாது. அறுமட்டுமின்றி கல்தேயாதபடி... கிரைண்டரின் வடிவம் அமைக்கப்பட்டுள்ளது."

**கிரைண்டரின் உள் பொருத்தப்படும் மோட்டார் எப்படிப்பட்டது?**

"மோட்டார் நாங்களே சொந்தமாக தயாரிக்கிறோம். எங்கள் தயாரிப்புகளையே பொருத்துவதால் பிரச்சினைகள் ஏற்படுவதில்லை.'' மோட்டார் தயாரிக்கும் பகுதிக்கு அழைத்துப் போகிறார் இளையவர் ஆதிகேசவன்.

"சௌபாக்யா வெட்கிரைண்டர் இந்திய தரமுத்திரைச் சான்றுக்கு இணையான தமிழக அரசின் தரக்கட்டுப்பாடு சான்றிதழைப் பெற்றிருக்கிறோம் என்பதில் பெருமகிழ்ச்சி அடைகிறோம்."

**"இந்தச் சான்றிதழை நீங்கள் பெறுவதற்கு முன் என்ன மாதிரியான சோதனைகளை நடத்தினார்கள்?"**

"தொடர்ந்து 24மணி நேரம் வெட்கிரைண்டர் இயங்குகிறதா? ஈரப்பதம் காரணமாக மின் கசிவு எதுவும் ஏற்படுகிறதா? 10 டிகிரி கோணத்தில் கிரைண்டரை சாய்த்து இயக்கும் போது மாவு வெளியே சிதறுகிறதா? அதிக இரைச்சல் ஏற்படுகிறதா? என்றெல்லாம் சோதித்தார்கள். ஒரு மூட்டை அரிசியை ஊறவைத்து அரைத்துப் பார்க்கும் பரிசோதனையும் உண்டு. மிக முக்கியமாக கிரைண்டரில் மாவு அரைக்கப்படும் போது கல்லின் உட்பகுதி உடைந்தோ அல்லது தூள்தூளாகி பொடியாக மாவில் கலந்து விடுகிறதா என்பதை பல மணிநேரங்கள் சோதனை செய்து ஆராய்கிறார்கள். ஏனெனில் இது மனித உடல் ஆரோக்கியம் சம்பந்தப்பட்ட விஷயம் அல்லவா? இத்தனை கடுமையான சோதனையிலும் தேர்ச்சி பெற்ற பிறகே சான்றிதழ் தருகிறார்கள். அப்படித்தான் நாங்கள் பெற்றோம்..."

**இன்று உங்கள் பிள்ளைகள் பொறுப்பெடுத்த பிறகு வியாபாரத்துக்கும்- உங்கள் காலத்தில் நடந்த வியாபாரத்துக்கும் என்ன வித்தியாசம்? பெரியவர் கே.பி. வேங்கட நாராயணசெட்டியார் சுவாரஸ்யமான பதில்களைத் தருகிறார்.**

"வித்தியாசம்னு பார்த்திங்கன்னா அந்தக் காலத்துல கிரைண்டர் ஆடம்பரப் பொருள். வசதிபடைத்தவர்கள் மட்டுமே வெட்கிரைண்டர் வாங்கும் நிலையில் இருந்தார்கள்.



• கல் கடைசல் செய்யப்படுகிறது.

## கிரைண்டரைப் பற்றிச் சில சந்தேகங்கள்...

கிரைண்டரின் அடிப்பகுதியை மாதம் ஒரிருமுறை சுத்தம் செய்யலாம். அரைத்த பின் சுத்தமாகக் கழுவி ஆற விட வேண்டும். கிரைண்டரின் அடிப்பகுதியில் பாச்சை உருண்டைகள் மற்றும் 'பிலிட்' திரவியங்களும் தெளித்தால் பூச்சி-எலிகள் நெருங்காமல் சுத்தமாக இருக்கும்.

**கிரைண்டர் உபயோகப்படுத்தும்போது செருப்பு அணிந்து கொள்வது அவசியமா- பாதுகாப்பா?**

தரமான கிரைண்டர் உபயோகப்படுத்தும்போது செருப்பு அணிந்து கொள்ள வேண்டுமென்பதில்லை. வெட்கிரைண்டருக்கு மின் இணைப்பு மூன்று -பின்கள் பொருத்திய பிளக்மூலம் ஷாக்கைத் தவிர்க்க நல்லபடி எர்த் செய்து கொடுக்க வேண்டும். மேலும் ஒவ்வொரு பின்னிலும் மின் இணைப்பு மாற்றிக் கொடுக்காமல் சரியானபடி தொடர்பு கொடுத்து இருக்கிறதா? என சரிபார்த்துக் கொள்ளுங்கள். மெஷின் ஓடும்போது கால்களை மெஷினுக்குக் கீழே சுழலும் புள்ளிகளுக்கருகில் கொண்டு செல்லக் கூடாது.

**மெஷின் ஓடும் முன்பும்- ஓட ஆரம்பித்த பிறகும்- கவனமாக இருக்க வேண்டிய விஷயங்கள் என்ன?**

முன்னதாக மெஷினில் உள்ள ஸ்குரு, போல்டுகள் முதலியவற்றையும் வி-பெல்ட் புல்லி முதலியவற்றையும் சரிபார்த்து டைட் செய்ய வேண்டும். ஆட்டுக்கல்லை வைத்துள்ள இடம் சமதளமாக இருக்க வேண்டும். மெஷின் மீதும் மோட்டார் மீதும் தண்ணீர் படாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். குழவிக்கல் செயினில் சரியாகப் பொருத்தப்பட்டுள்ளனவா? கிராஸ் ஆர்ம் தள்ளுபலகை, கைப்பிடிகள் எல்லாம் சரியாக உள்ளதா என்றும் கவனித்துக் கொள்ள வேண்டும்.

**வெகு நேரம் கிரைண்டர் ஓடியும் சீக்கிரத்தில் மாவாக மசியாமல் இருப்பதற்கு காரணம் என்ன?**

பெல்ட் லூசாக இருந்தாலோ, கீழ்க்கல்லும் குழவியும் சரியாக செட் ஆக இல்லா விட்டாலோ கைப்பலகை முறையாக வைக்காமல் இருந்தாலோ சரியான அளவு தண்ணீர் ஊற்றப்படாமல் இருந்தாலோ, அரிசி, பருப்பை போதிய நேரம் ஊற வைக்காமல் ஆட்டினாலோ- மாவு சீக்கிரத்தில் அரைபடாது. இவற்றில் மாற்றம் செய்தால் விரைவில் மாவாக மசிந்து விடும்.

**கிரைண்டர் பயன் படுத்தும்போது மின்சார செலவு அதிகரிக்குமா?**

நல்ல தரம் வாய்ந்த கிரைண்டர்களில் பொருத்தப்படும் மோட்டாரில் நல்ல இன்ஸுலேஷன் உபயோகப்படுத்துவதால் மின்சார செலவு அதிகரிக்க வாய்பே இல்லை.

**கிரைண்டரில் பொருத்தப்பட்டுள்ள கல்லை தேயாமல் பாதுகாப்பது எப்படி? எத்தனை ஆண்டுகளுக்கு ஒருமுறை மாற்றலாம்?**

தானிய வகைகளை நிரப்பி ஆட்டும் போது கல் எளிதில் தேய்வதில்லை. சிலர் கிரைண்டரைக் கழுவும் போது கல்லை வெளியில் எடுக்காமல் தண்ணியை ஊற்றி- மெஷினை ஆன்பண்ணி கழுவுவார்கள். இதனால் வெகு சீக்கிரத்தில் மெஷினிலுள்ள கல் தேய்ந்து விடும் இப்படிச் செய்வதை நிச்சயம் தவிர்க்க வேண்டும். கிரைண்டரில் நல்ல கல் பதிக்கப்பட்டு, நாமும் முறையாக பயன்படுத்தினால்... இருபது ஆண்டுகள் வரை கல் தேயாமல் இருக்கும்.

**கிரைண்டரைத் தொடர்ந்து எத்தனை மணி நேரங்கள் ஓட்டலாம்?**

குறைந்த நேரமாக தொடர்ந்து ஒரு மணி நேரமும், அதிகட்சமாக 5 மணிநேரமும் தொடர்ந்து பயன்படுத்தலாம். இது வீட்டு உபயோகத்துக்குள்ள கிரைண்டர்களுக்கு மட்டும்தான்.

**கிரைண்டரை எத்தனை வருடத்துக்கு ஒருமுறை சர்வீஸ் செய்து கொள்ளலாம்?**

ஆறு மாதத்திற்கோ ஒரு வருடத்திற்கோ ஒருமுறை சர்வீஸ் செய்து கொண்டால்- கிரைண்டர் பல ஆண்டு காலத்துக்கு நீடித்து உழைக்கும்.

ஆடம்பரம் என்று கருதப்பட்டதை நீக்கி அத்தியாவசியம் என்ற நிலையை உருவாக்க நாங்கள்பட்ட கஷ்டம் கொஞ்சம் நஞ்சமில்லை. இப்போது போல் டி.வி. சாடிலைட் சானல்ஸ், பேனர் ஹோர்டிங், மூலமாக விளம்பரப் படுத்த முடியலை. எல்லாம் வாய் வழி விளம்பரம் தான். எப்பவும் மனசுக்குள்ளே ஒரு சவால் இருந்துகிட்டே இருக்கும். தமிழ் நாட்டிலுள்ள குற்றாலம் திருப்பதி, பழனி, மருதமலை, திருச்செந்தூர் என ஒவ்வொரு கோயில் குளமாக ஏறி இறங்குவேன். கிரைண்டருக்கும் கோயில் குளத்துக்கும் என்ன சம்மந்தம்னு யோசிக்கிறீங்களா? அங்கேதானே ஒட்டு மொத்தமா பெண்களைப் பார்க்க முடியும். நம்முடைய தயாரிப்பையும் சொல்லமுடியும். அந்தப் பெண்கள் வேண்டுதலை முடிக்கும் வரை காத்திருப்பேன். பிறகு காரிலுள்ள கிரைண்டரை வெளியில் எடுத்துக்காட்டி பொருளைப்பற்றிக் கூறி அதன் பயன்களை வசதிகளை அவர்கள் விளங்கிக் கொள்ளத் தக்கவாறு சொல்லி வியாபாரம்

செய்த நேரம் அது."

ஒரு இடத்தில் தன் கிரைண்டர் ஒன்றை விற்பனை செய்வாரென்றால் அதே பகுதியில் 100 பொருட்களை விற்க முடியுமாம். காரில் போய்க் கொண்டிருப்பாராம். முந்திப்போகும் காரை முந்திக் கொண்டு நிறுத்தி வழிமறித்தற்காக மன்னிப்புக் கேட்டு தன் கிரைண்டரைப் பற்றி விளக்கம் சொல்வாராம். கிரைண்டரை வாங்குவதற்கான சம்மதத்தோடு தனது விலாசத்தையும் கொடுத்துவிட்டு நகர்வாராம் அந்த நபர்.

"இப்படி மனிதர்களை குறி வைத்து விற்ற நேரங்களை இப்போது யோசித்துப் பார்க்க மிகவும் வியப்பாக இருக்கிறது. "அப்படி வாங்கியவர்கள் அதன் தரமறிந்து பின் மற்றவருக்குச் சொல்ல... விற்பனை பெருகியது. அப்படியெல்லாம் முன்னேற்றம் கிடைத்தது கடவுளின் சித்தத்தால். என்னுடைய முயற்சி 5 சதவிகிதம் தான். மற்ற 95 சதவிகிதமும் ஆண்டவருடைய அருளே.."

**இப்போது நீங்கள் பாடுபட்டு வளர்த்த வியாபாரத்தில் சௌபாக்யா வளர்ச்சியில் கவனம் செலுத்துகிறீர்களா?**

"பாடுபட்டு உழைத்தகாலங்கள் முடிந்தது. பிள்ளைகள் வளரும் வரை காத்திருந்தேன். தோளை மிஞ்சி தோழர்கள் ஆனார்கள். எனது 59வது வயதில் ஒரு ஆயுத பூஜையன்று மூவரிடமும் பொறுப்பை ஒப்படைத்தேன். இன்று வரை எதையும் நான் கண்டு கொள்வதில்லை. அவர்களும் நாளுக்கு நாள் கிரைண்டரின் வளர்ச்சியிலும் உற்பத்தியிலும் அக்கறையோடு செயல்படுகிறார்கள்."

**"உங்கள் 'சௌபாக்யா' மட்டுமன்றி வேறு கம்பெனிகள் தயாரித்த கிரைண்டர்களையும் சர்வீஸ் செய்து தருவீர்களா?"**

உங்கள் மங்கையர் மலர் வாசகிகளுக்காக அப்படி ஒரு சர்வீஸ் செய்து தருகிறோம். எந்தக் கம்பெனி கிரைண்டர் ஆனாலும் பரவாயில்லை. இலவசமாக சர்வீஸ் செய்யலாம். உதிரிபாகங்களுக்கு மட்டும் பணம் கொடுத்தால் போதும். மேலும் எங்கள் சொந்த அலுவலகம் சென்னை, ஈரோடு, பெங்களூரில் மட்டும் இருப்பதால், அந்தப் பகுதியிலுள்ளவர்கள் மட்டும் எங்களிடம் வேறு எந்த கிரைண்டரை கொடுத்தும் சர்வீஸ் செய்து கொள்ளலாம்.

**எத்தனை வகையான கிரைண்டர்களை நீங்கள் தயாரிக்கிறீர்கள்?**

"5 வகை வெட்கிரைண்டர்கள் தயாரிக்கிறோம்.

மைக்கா பினிஷிங், ஸ்டெயின்லெஸ் ஸ்டீல், டில்டிங் வெட்கிரைண்டர், டேபிள் டாப் மற்றும் மெஸ், ஓட்டல், கேன்டீன், கல்யாண மண்டபங்களுக்கு ஏற்ற பெரிய கிரைண்டர்களைத் தயாரிக்கிறோம்.

டில்டிங், டேபிள் டாப் வெட்கிரைண்டர்களில் தேங்காய்த் துருவுவதற்கும், சப்பாத்தி மாவு பிசைவதற்கும் கூடுதல் உபகரண இணைப்புகளும் உண்டு. சப்பாத்தி பூரிக்கான மாவை 5 நிமிடத்தில் பிசைந்துவிடும். தவிர எந்திரமே மாவு பிசைவதால் அதில் சுகாதாரமும் பேணப்படுகிறது. பெண்களுக்கு இப்போது மிகவும் அத்தியாவசியமான மாடலாக மாறிவருகிறது. 'டேபிள் டாப்'பின் சிறப்பம்சம், வெட்கிரைண்டரின் எடை மிகவும் குறைவு என்பதால் எளிதாக தூக்கலாம். எங்கு வேண்டுமானாலும் வைத்துக் கொள்ளலாம்."

பெண்கள் இயந்திரங்களையே அதிகம் நம்பி சமைக்கும் காலமிது. இவர்களைப் போன்றவர்கள் தரத்தை அடிப்படையாகக் கொண்டு புதுப்புது வசதிகளைச் செய்து தரும்போது நமக்கென்ன கவலை?

**- மலர்விழி**

## ஃப்ரிட்ஜும் வேண்டாம், ஒண்ணும் வேண்டாம்!

காய்கறி பழங்களைப் பாதுகாக்க பரண்மேல் இருக்கும் உபயோகிக்காமல் தூசு பிடித்து கிடக்கும் ஓட்டுப்பானை (வெண்கலம்)உருளி இவற்றை சுத்தம் செய்து தக்காளி காய்கறிகள், பழங்கள் போட்டு ஈரத் துணியாலோ, தட்டினாலோ மூடிவையுங்கள். ஒருவாரம் வரை அப்படியே இருக்கக் காண்பீர்கள். தண்ணீர் ஜில்லென்று தொண்டைக்கட்டு சளி பிடிக்காமல் குடிக்க வேண்டுமா, வெண்கலப் பானையைத் தேய்த்து வரவேற்பறையில் ஸ்டூல்மேல் வைத்து விடுங்கள். நாள் முழுக்க உடம்புக்குக் கெடுதல் செய்யாத ஜில் தண்ணீர்.





# விருந்தினர் ஒவ்வொருவருக்கும்,
# நீங்கள் பழச்சுவைகளைப் பரிமாறும் போதும்,
# பரிந்துரை செய்கிறோம்,
# எங்களது டிஸ்ஸர்ட் செட்

நீங்கள் எதனைச் செய்தாலும் அதனை சரியாகவே செய்யவேண்டும்.
எடுத்துக்காட்டாக, உங்கள் விருந்தினருக்கு ஏற்றது எதுவோ,
அதை மட்டுமே அவருக்கு அளிக்க வேண்டும்.
உங்களுடைய இந்த ஆர்வமுடைய முயற்சிகளுக்காகவே,
வழங்குகிறோம், நாங்கள், எங்களது டிஸ்ஸர்ட் செட்.
முழு நம்பிக்கையுடன், இதுவே ஏற்றது அவருக்கு பரிமாறுவதற்கு
லா ஓபாலா ஓபல் வேர்
விருந்தளிப்பவர் ஒவ்வொருவருக்கும் தேவைப்படுவது இதுவே.



## லா ஓபாலா
ஓபல் க்ளாஸ் டேபிள்வேர்
**இது நீங்கள் ஏற்படுத்தும் தோற்றம்**

ஒளி ஊடுருவக்கூடிய முத்துப்போன்ற சுடு இணையற்ற வெண்மை நிறத்தில் தேர்ந்தெடுக்கப் பலவித நுண்ணிய மலர்கள் மற்றும் இக்காலத்தின் ஒப்பற்ற ஓவியங்கள். மைக்ரோவேவ் மற்றும் டிஷ்வாஷர்களிலும் பயன்படுத்த உகந்தது. உதிரியாகவும் செட்களாகவும் கிடைக்கிறது. மேலும் விவரங்களுக்கு அணுகுவீர்: La Opala Glass Ltd., 12A Camac Street, Calcutta - 700 017, Phone : 2421740/5931/6847, Fax : 2427885.

CONTRACT.LO.290.95 TAM

இதோ, புத்தம் புதியதொரு தன்னம்பிக்கை... நாள் முழுதும்.

## அறிமுகம் – புதிய ரெக்ஸோனா டியோடரன்ட்

இதோ, புதியதொரு தன்னம்பிக்கை... உடல் துர்நாற்றத்திலிருந்து முழுமையான பாதுகாப்பைப் பெற முடிவதால் — புதிய ரெக்ஸோனா டியோடரன்ட். இனி, நிச்சயமாக, உடல் துர்நாற்றம் ஒருபோதும் உங்களை ஒதுக்கிவிடாது.

**உடல் துர்நாற்றமா? எனக்கா?**

பகல் முழுதும் நேரம் செல்லச் செல்ல, நம் அனைவரின் உடலிலும் துர்நாற்றம் ஏற்படத்தான் செய்யும். நண்பர்களை நெருங்கவே தயக்கமும் மனவருத்தமும் உண்டாகலாம். குளிப்பது மற்றும் பவுடர் போட்டுக் கொள்வதன் பலன் சிறிது நேரத்திற்குத்தான்.
நாள் முழுதும் நிலைத்திருக்கும் பாதுகாப்பைப் பெற முடியாது.

**புதிய ரெக்ஸோனா டியோடரன்ட். உடல் துர்நாற்றத்தை எதிர்க்கக் கூடிய இணையற்ற பாதுகாப்பு**

புதிய ரெக்ஸோனா டியோடரன்டில் மட்டுமே பிரத்தியேகமாக உள்ளது — டியோஸ்ட்டரால். இது உடல் துர்நாற்றத்தை எதிர்த்து நாள் முழுதும் — மற்றவற்றை விட அதிக நேரம் — பாதுகாப்பு அளிக்கிறது. நீங்கள் தேர்ந்தெடுக்க வசதியாக மூன்று வகை சர்வதேச வடிவங்கள் — ஸ்டிக், ரோல்–ஆன் மற்றும் ஸ்பிரே குளித்துத் துவட்டிக் கொண்ட பிறகு தினமும் கைகளுக்கு அடியில் புதிய ரெக்ஸோனா டியோடரன்ட்டை தேரடியாகப் பயன் படுத்துங்கள்.

நாள் முழுதும் நிலைத்திருக்கும் புத்தம் புதியதொரு தன்னம்பிக்கையைப் பெற்று மகிழுங்கள்.

புதிய
**Rexona®**
DEODORANT
துணை வருமே, எப்போதும்!










LINTAS Mds Rx 24/6

# மங்கையர் மலர்

ஜனவரி '96 இதழுடன் இணைப்பு



அம்மாவே எனக்கு வழிகாட்டி!

# வெள்ளைத துணிகளின இதயததுடிபபு



DIP DIP இரண்டேசொட்டு
அரைலிட்டர்தண்ணீருக்கு
எளிதாக நீரில் கரைந்து, சீராக
பரவி துணிகளின் இழைகளில்
இழையோடி பழுப்புத் துணிகளை
தூய வெண்மையாக்குகிறது.




## இலவசம்!

இப்பொழுது
ஒவ்வொரு DIP DIP நீலம்
பாட்டிலுடன் ஒரு ரூபாய்
ஐம்பது காசு மதிப்புள்ள ஒரு
MINI MEDIMIX SOAP
இலவசம்.




முந்துங்கள்
இச்சலுகை ஸ்டாக்
உள்ள வரை மட்டுமே.

**DIP DIP** நீலம்



**DIP DIP** நீலம்